

# இந்துமத வேதத்தின் மகிமை

யாக்ஞவல்கியப்ரியா



வானதி பதிப்பகம்

இந்துமத

# வேதத்தின் மகிமை

அனைவரும் படித்தறியவேண்டிய
அரிய நூல்

ஆசிரியர் :
'யாக்ஞவல்கியப்ரியா'



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி. நகர், சென்னை-17.

# முன்னுரை

நம் பூமி ஞானபூமி. இந்த மண்ணில் வாழ்ந்த சமூகம் மிகத் தொன்மையானது. அது கண்டறிந்த வாழ்க்கை ரகசியங்கள் உன்னதமானவை.

கலாச்சார ரீதியாகவும், லௌகீக வாழ்க்கை முறைகளுக்குப் பண்பு வகுத்த முறைமையிலும்-இவற்றையெல்லாம்விட ஆத்மாவின் வீடுபேற்றுக்கு ஞானமார்க்கம் கண்டறிந்த வகையிலும்—பாரத புத்திரர்களே பாக்கியவான்கள்.

எனினும், இன்றைக்கு நிறைந்த நெற்களஞ்சியத்தின் மீதேறிப் படுத்துக்கொண்டு, ஒரு வேளைச் சோற்றுக்கு உணவில்லையே என்று வருந்தும் வறியனைப்போல், நாடு காட்சியளிக்கிறது !

நம் தேசத்திற்கோ, தேகத்திற்கோ ஆத்மாவிற்கோ ஒவ்வாத அந்நிய கலாச்சாரம், அநுஷ்டானங்களின்மீது நம்மவருக்கு மோகம் பிறந்திருக்கிறது !

ஆனாலும் வழி தவறிய கன்று வீடு திரும்பும். தாய்ப் பசுவின் பால்தான் அதற்கு நல்லது.

நம்முடைய 'வேதம்' மிகப் பெரிய ஞானச் செல்வங்களைச் சூல் கொண்டிருப்பவை. ஆழ்ந்தும் விரித்தும் பொருள் நோக்கின் வரம்பிலா விரிவு உடையவை.

மானுடத்தின் பண்பாடு, செம்மை, நல்லொழுக்கம் அனைத்தையும் உன்னதப் படுத்துகிறது 'வேதம்'.

நம்மவரது தத்துவம், கோட்பாடு, மேன்மை, லட்சியம் ஆகியவை, காலம் காலமாக இவ்வுலகில் நித்தியமாக நின்று சத்திய மேம்பாட்டுக்கு அழைத்துச் செல்கிறது 'வேதம்'.

உலகத்தில் தோன்றிய அதிபூர்வீக மதம்—நமது இந்து மதமே. இதற்குச் 'சனாதன தர்மம்' என்பதே சரியான பெயர். 'இந்து மதம்' என்ற பெயர், பிறகு—சமீப காலத்தில்—ஏற்பட்டதுதான்.

**வேதம் நான்கு**—ரிக்வேதம், யஜுர்வேதம், சாம வேதம், அதர்வணவேதம்.

**உபவேதம் நான்கு**—ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த சாஸ்திரம்.

**அங்கங்கள் ஆறு**—சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜோதிஷம், கல்பம்.

**உபாங்கங்கள் நான்கு**—புராணம், தரும சாஸ்திரம், மீமாம்சை, நியாயம்.

**உபநிடதங்கள் பல**—ஈஸ்வாஸ்யம் முதலியன.

இவ்வண்ணம் நம் வேதம் பகுத்துக்கொண்டு மக்களுக்கு அறிவூட்டுகிறது.

ஒரு முடவனுக்கு மருத்துவ உதவி செய்யலாம்; போலி உறுப்பைக் கொடுத்து உதவி செய்யலாம். ஆனால் அந்த இழப்பின் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் சக்தியை மதம்தான் கொடுக்கிறது.

உடலுக்கு உதவியாக விஞ்ஞானம்; மனவலிமைக்கு மெய்ஞ்ஞானம். அது பொருத்தமில்லாதது என்று சொல்ல முடியுமா ?

இறைவனை உணருவதற்கு மூன்று படிகளை நமது சாஸ்திரங்கள் காட்டுகின்றன.

கர்மங்களைச் செய்ய வேண்டியது முதற்படி.

தர்மங்களைச் செய்யவேண்டியது இரண்டாவது படி.

பிரம்மத்தை உணருவது மூன்றாவது படி.

ஒருவன் பிரம்மத்தை உணருவதற்குத் தனது செயல் களை வழிப்படுத்திக் கொள்ளவேண்டும். அவற்றைக் கடைப்பிடிப்பதில் கட்டுப்பாட்டை அநுசரிக்கவேண்டும்.

இந்த இரண்டும் சரியான பிறகுதான் மூன்றாவது நிலையை அவனால் எட்ட முடிகிறது.

இந்த இரண்டு படிகளுமே அவனுக்கு மனத் தெளிவையும் மனத்தூய்மையையும் கொடுத்து விடு கின்றன.

இவற்றை அமைத்துக் கொள்ளத் தெரியாதவர்கள் பிரம்ம விசாரணையில் ஈடுபடுவதில் அர்த்தமேது?

சுவைக்காமலே—ஒரு உணவுப் பொருளைப் பற்றி—நாம் ஏற்கவோ, ஒதுக்கவோ முடியாது. பிறகும் அதில் உப்பு, காரம் ஆகியவற்றை ஒழுங்குபடுத்த நாம் சுவைத்துத்தான் சொல்லமுடிகிறது. அது போன்று படிப் படியாகப் பிரம்மத்தை உணருபவனே அந்த ஆனந் தத்தை அநுபவிக்க முடியும்!

ஆனால் நம்மைப் பழிப்பவர்களிடமும் நாம் அன்பு காட்ட வேண்டும். அதுவே நமது மதம் காட்டும் சீரிய பண்பு. எல்லா ஜீவன்களிலும் இறைவன் உறைந்திருக் கிறார். அதனால் ஜீவ சேவையே தேவசேவையாகும்.

மனம் எதைப் பற்றிக்கொள்கிறதோ அதை மனத்தில் பதிவு செய்து கொள்ள வேத மந்திரம் பயன்படுகிறது.

மனத்தை நிலைநிறுத்தும் ஓர்மைப் பயிற்சிக்கு மந்திரத்தின் மூலம் பழக்கம் ஏற்படுகிறது.

முதலில் விக்கிரகத்தை வைத்துக்கொண்டு செய்ய லாம். ஒவ்வொரு எழுத்தும் எங்கிருந்து கிளம்பி ஒலியாக வருகிறதோ அதைப் பொறுத்து, அது இத்தனை நரம்பு களைத் தொடும் என்று இருக்கிறது.

'ஓம்' என்ற சொல்லை எடுத்துக் கொண்டால், மூலாதாரத்திலிருந்து மூளை வரையில் உள்ள நரம்புகள்

யாவும் இவ்வாறு தொடப்பட்டு இயக்கம் பெறுகின்றன. நமது உடலில்உள்ள அடிப்படை, ஐம்பது அட்சரங்களால் இயக்கப்படுகிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு இடத்தைத் தொடுகிறது.

நாம் வாழ்க்கையில் பெற வேண்டிய வளங்களுக்கு ஏழு சம்பந்தங்கள் உண்டு. அவற்றுக்கேற்ப வேத மந்திரங்களும் அமைந்திருக்கின்றன. அவற்றின் மூலம் நாம் ஒவ்வொன்றையும் அடையலாம்.

மனிதனுடைய மனத்தை மிகப்பக்குவமான நிலையில் வைக்கக் கூடியது, அவனது ஆன்மீக உணர்வு தான். வேறு எந்தக் கொள்கையும் அந்த அளவுக்கு மக்களை ஒன்று சேர்ப்பதில்லை.

மதத்தைப் பின்பற்றுவது என்பது மக்களின் பிறப்புரிமை. அது எழுப்பக்கூடிய சக்தி மகத்தானது.

சமூகத்தில் கட்டுப்பாட்டைக் காக்கவும் ஒழுக்கத்தை வளர்க்கவும் அது உதவும் அளவுக்குச் சட்டம் உதவ முடியாது.

இந்து சமயம் போற்றிவரும் கொள்கைகள் விஞ்ஞான அடிப்படையில் அமைந்தவை. அவற்றைப் பின்பற்றி வாழும் முறை நமது உள்ளத்துக்கு ஒளியைத் தருவதுடன், உடலுக்கும் உறுதியை அளிக்கிறது.

இதனாலேயே இந்து சமயம் வாழ்க்கை நெறியென்றே கூறப்படுகிறது.

எங்கும் நிறைந்த இறைவனை ஒரு குறிப்பிட்ட பொருளில் ஏற்றி அதனை இறைவனின் சொரூபமாக வழிபடுவது நமது மரபு.

வழிபாட்டில் நமது மனம் லயிக்க வேண்டும் என்பதற்காகவே இந்த ஏற்பாடு. இப்படி ஒரு பொருளில் இறைவனை ஆவகானம் செய்யும்போது அது இறை சொரூபமாக விளங்குவதற்கு ஏற்றதாக இருக்க வேண்டுமல்லவா! எனவேதான் தீப ஒளி, நீர் ஆகியவற்றில் இறைவனை ஆவகானம் செய்து தொழுகிறாம்.

உண்மையில் நமக்கு ஒன்றுக்கு மேற்பட்ட ஸ்வாமி இருப்பதாக விஷயம் தெரிந்த—எந்த இந்துவும் எண்ண வில்லை. எண்ணவும் மாட்டான். நம் வைதிக மதம் ஸ்வாமி ஒருவரே என்று கண்டது மட்டுமல்ல; இந்த ஜீவனும்கூட அந்த ஸ்வாமிதான் என்று வேறெந்த மதமும் கண்டு பிடிக்காததையும் உணர்த்திக் காட்டி இருக்கிறது.

அந்த ஒரு ஸ்வாமி பல ரூபத்தில் வரமுடியும். அப் படிப்பட்ட கருணையும் யோக்கியதையும்—அந்த ஸ்வாமிக்கு உண்டு என்பதையே வலியுறுத்துகிறது நமது இந்து மதம்.

நமது முன்னோர்கள்—வேத காலத்து முனிவர்கள்— தியாக உணர்வினாலும், கஷ்டகாலத்திலும் நேர்மை யாக இருப்பதாலும், உண்மையே பேசுவதாலும மட்டுமே உயர்வு பெற்றதை நமக்கு எடுத்துக் காட்டி யிருக்கிறார்கள்.

பிரம்மம் என்கிற பரம்பொருள்தான் ஜீவன், ஜகத் இரண்டுக்கும் காரணம். அந்தக் காரணமும் அதன் விளைவான ஜீவ—ஜகத்துக்களும் வேறு வேறு இல்லை.

ஏனென்றால் பிரம்மத்துக்கு வேறாக எதுவுமே இருக்கமுடியாது. இப்போது ஜகத்தையே நிஜம் என்று நினைக்கின்ற ஜீவாத்மா, அதை ஒதுக்கிவிட்டு தன் னையே யார் என்று விவகாரம் பண்ணிப் பார்த்துக் கொண்டால், 'உடம்பு நானில்லை; இந்திரியங்கள் நானில்லை; மனம்நானில்லை' என்று கழன்று போய் 'கடைசியில்' தான் பிரம்மமே' என்று அறிந்து கொள்வான்,

'பரமாத்மா என்று ஒன்று ஜீவாத்மாவைப் படைத் தது' என்று சொல்வதுகூட ஒரு மாயைதான். ஜகத்தெல் லாம் அந்த மாயையின் திருவிளையாட்டுதான்.

நம் பாரத தேசத்தில் பல்லாயிரம் வருடங்களுக்கு முன்னர் வசித்த தவசிகளும், ரிஷிபுங்கவர்களும் அத்தகைய சக்திவாய்ந்த எண்ணங்களைப் படைப்பிக்

கும் வல்லமையால் படைப்பிக்கும் வல்லமையைப் பெற்றிருந்தார்கள். அவர்களுடைய தூய்மையே வடிவெடுத்த சிந்தையில் ஒலித்த தெய்விக வாக்குகள் மந்திர வடிவம் பெற்றன. அவர்கள் அறிந்து கூறிய அத்தகைய மந்திரங்களை முறைப்படி ஜபித்தால் மனம் தெளிவுறும்; சிந்தை திருந்தும்; எண்ணம் சிறக்கும்; வாழ்வு தூயது ஆகும்.

அதனால், பிறவி எடுத்த பயனும் விரைவில் சித்திக்கும்.

எனவே மகா வேத மந்திரங்களை நாம் சரிவரக் கற்கவும் கேட்கவும் ஜபிக்கவும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

''யக் ஞானாம் ஜபயக்ஞோ அஸ்மி'' என்பது கீதாசாரியன் திருவாக்கு.

எனவே இடைவிடாது மந்திரங்களை வாய் விட்டுச் சொல்லியும், மனத்தளவில் தியானித்துப் பழகியும் நமது மனதைப் பயன்படுத்த வேண்டும்.

நம் வேதத்தின் மகிமையை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும்.

மனிதப் பிறவியை உய்விக்கச் செய்யும் மகா மந்திரங்களுக்கெல்லாம் மணிமகுடம் போல் விளங்குவது சூரிய காயத்ரீ ஆகும்.

அதுவே நமது வேதத்தின் சாரமாகும்.

இதுபற்றியெல்லாம் இந்நூலில் விளக்கியுள்ளேன். என்னதான் விரிவாக எழுதி இருந்தாலும் இந்நூலை விரலிடுக்கின் வழியே சூரியனைக் காண்பதற்கொப் பாய்த்தான் சொல்ல முடியும்.

ஆனால் நம்மில் யாரோ ஒருவர் முழுச் சூரியனையும் காண்பதற்கு இந்நூல், மேலே அழைத்துச் செல்லும் படியாக அமையுமானால் அதுவே என் பணியின் பயனாகும்.

அன்பு

**'யாக்ஞவல்கியப்ரியா'**

## இந்துமத

# வேதத்தின் மகிமை

---

## 1

**வே**தம் சர்வேஸ்வரனுடைய மூச்சுக் காற்றாகும். ஆதிகாலத்தில் வேதம் ஆகாயத்திலேயே ஒலி வடிவாக மிதந்து கொண்டிருந்தது. அக்காலத்து தீர்க்கதர்சிகளாகிய ரிஷிகளே, அவ்வண்ணம் ஒலி வடிவாக விண்ணில் மிதந்து நின்ற வேதத்தைக் கீழே கொண்டு வந்தார்கள். தமது ஆத்ம பலத்தினால் வேதத்தைக் கீழே இறக்கினார்கள்.

‘‘தபஸ்மூலம் ரிஷிகள் மந்த்ரங்களைக் கண்டறிகிறார்கள். அந்த அந்த மந்த்ரங்களைக் கண்டறிந்த ரிஷியையே அதனதன் ரிஷியாகக் கொள்கிறோம். அந்த மந்த்ரங்களைக் கேட்டறியும் திவ்ய ‘ச்ரோத்ரம்’—தெய்விகச்செவி—அவர்களுக்கு உண்டு.

‘‘யோக சாஸ்திரத்தில் பெரிய ஆகாசமும் மனத்திலுள்ள சப்தமெல்லாம் நமக்குக் கேட்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். எங்கும்நிறைந்து அபேதமான நிலையை அடைந்தவர்களுடைய மனத்துக்கு அந்தச் சப்தங்கள் தெரியும். ரிஷிகளுடைய தெய்விகச் செவிகள் வேத

சம்பந்தமான சப்தங்களைக் கிரகித்தன. அவை தாம் வேத மந்த்ரங்கள்.'' என்கிறார் ஸ்ரீ காஞ்சிப் பெரிய வர்கள்.

அப்பண்டைக் காலத்தில் வேதத்தை நூல் வடிவாக எழுதி வைக்கவில்லை.

அவ்வண்ணம் எழுதி வைக்க அக்காலத்தில் வாய்ப்பும் சாதனங்களும் இல்லை என்றே சொல்லவேண்டும். குரு சிஷ்யப் பரம்பரையில் ஓதியுணர்தல் வாயிலாகவே பல்லாயிரம் ஆண்டுகளாக வேதம் காப்பாற்றி வைக்கப்பட்டது; காப்பாற்றி வைக்கப்படுகின்றது.

அதனால் இவ்வுலகம் கண்டறிந்த ஒலிச் சுவடியில் மிகவும் பழமையானது வேதமே ஆகும். கர்ண பரம்பரைக்கோ, சரித்திரத்துக்கோ எட்டாத அவ்வளவு பூர்வீகமானது அது.

வேதத்துக்கு மற்றொரு பெயர் சுருதி என்பதாகும். அதன் பொருள் காது கொடுத்து கேட்டறிந்தது என்பதாகும். காலச்சக்கரத்தில் அது கோணலுறாமல், சிதையாமலிருந்து வருவது மிகவும் வியப்பிற்குரியதே!

இறைவன் அனாதியாய் இருந்து கொண்டே இருக்கிறார். அதே போன்று அவருடைய மூச்சுக் காற்றும் அனாதியாய் இருந்து கொண்டிருக்கிறது. பகவானுக்கும் அழிவு கிடையாது. அவரது மூச்சுக் காற்றான வேதங்களுக்கும் அழிவு கிடையாது.

அநேக வேத சப்தங்கள் ஆகாயத்தில் என்றென்றும் நிறைந்து இருக்கின்றன. எந்த மகரிஷியால் எந்தச் சமயத்தில் எந்தச் சப்தங்கள் கேட்கப்பட்டனவோ அவையெல்லாம்தான் பின் குரு சிஷ்யப் பரம்பரையாக வேதங்களாக வந்து கொண்டிருக்கின்றன.

வேதம் என்பது இந்து மதத்தின் ஆணிவேர். 'எல்லாக் காலத்துக்கும் பொதுவான சாஸ்வத தர்மங் களைச் சொல்லுவது வேதம்தான்' என்று தர்ம சாஸ்திரத்தை உண்டாக்கிய மனு கூறியுள்ளார். ஆனால் இந்த வேதம் எப்போது யாரால் உண்டாக்கப்பட்டது என்பதைக் கூற இயலாது. வேதத்துக்குக் காலம் கூற முடியாது. அதற்கு முந்தையதாக எதுவும் இல்லை என்ப தால் அதற்கு 'அநாதி' என்று பெயர்.

எந்த மனிதரும் வேதத்தை உண்டாக்கவில்லை யாதலால் வேதம் 'அபௌருஷேயம்' என்று கூறப்படு கிறது. வேத மந்த்ரங்களில் ரிஷிகளின் பெயர் இருப்பதால் அவர்கள்தான் வேத கர்த்தாக்கள் என்று கூறுவது தவறாகும்.

அம்மந்த்ரங்களை அவர்கள் இயற்றவில்லை. ஆனால் அவர்கள் மந்த்ரங்களைக் கண்டவர்கள். அவர் கள் மந்த்ரங்களின் கர்த்தாக்கள் அல்ல; மந்த்ர திருஷ்டாக்கள் தாம்.

ஆதியும் அந்தமுமில்லாதவன் இறைவன். அவன் அநாதி. வேதமும் அநாதி எனப்படுகிறது. இப்படிச் சொல்லும்போது ஒரு சந்தேகம் எழலாம். இறைவனே வேதத்தைச் செய்தாரா என்பதுதான் அந்தச் சந்தேகம். ஆனால் அதற்கு வேதமே பதில் சொல்லியிருக்கிறது.

வேதத்தில் ஒரு பகுதியான பிருஹதாரண்யக உபநிஷத்தில் 'ரிக்-யஜுஸ்-ஸாம-அதர்வ வேதங்கள் ஈஸ்வரனின் சுவாசமாகும்' என்று சொல்லியிருக்கிறது. அநாதியான அவர் என்றென்றும் உயிரோடு இருந்திருக் கிறார் என்றால் வேதமும் அவருடனேயே, அவரது மூச்சுக் காற்றாக அநாதியாக இருந்திருக்கிறது என்று ஆகிறதல்லவா!

இப்படி எவராலும் செய்யப்படாத, அறிவு நூலுக்கும் பிற்படாத, வேதத்திற்கு இன்றும் பல பெருமைகள் உண்டு.

அதை ஓதுவதால், ஓதும்போது நம் நாடிகளிலும், வெளி உலகத்திலும் ஏற்படும் சலனங்கள் ஓதுபவர்க்கும் உலகிற்கும் க்ஷேமம் அளிக்கிறது. மனிதர்கள் மட்டுமின்றி எல்லாப் பிராணி வர்க்கங்களும் நன்றாக இருக்க வேண்டும் என்று வேதம் பிரார்த்தனை செய்கிறது.

அது மட்டுமல்ல, புல், பூண்டு, மரம், மலை, நதி எல்லாவற்றின் நலனையும் வேண்டுகிறது. இப்படி அனைத்துப் பிராணிகளின் க்ஷேமம் வேத ஒலியின் விசேடத் தன்மையால் நடக்கிறது. மேலும், வேத ஒலிக்குத் தனி சக்தி இருப்பதுடன், வேதக் கருத்துக்களுக்கும் உயர்ந்த அர்த்தம் உண்டு.

அப்படியிருந்தும் அதைக் காப்பாற்றுவதற்கான வேதியர்கள் போதாமையினால் வேதத்தின் சில பகுதிகள் மறைந்தே போயின.

வேதத்தை மறை என்றும் சொல்வர். பாமரர் அறிவுக்கு எட்டாது மறைந்துள்ளதாலும், இறைவனே கருப்பொருளாய் வேதத்தினுள் மறைந்திருத்தலாலும் அது 'மறை'யாகிற்று.

வேதம், ஓதி உணர்ந்து அறிந்துள்ள இகபர வித்தியா சொரூபமாய் இருப்பதாகும்.

உலகங்களைத் தோற்றுவிப்பதற்கும் தோற்றுவித்த உலகத்தை நன்கு பாதுகாப்பதற்கும் சர்வேஸ்வரனுக்கு முக்கிய காரணமானது இவ்வேதமே ஆகும்.

ஒரு காரியத்தைச் செய்வதற்கோ எல்லா வகையிலும் இன்றியமையாதது அறிவாகும். கண் முதலிய இந்திரியங்

களுக்கும் மனதுக்கும் எட்டாத உபாயங்களைக் காட்டிக் கொடுத்து நாம் துன்பங்களிலிருந்து விடுபடவும் சுகத்தை யடையவும் காரணமானது வேதமே.

அக்காலத்து மகரிஷிகள் வேதத்தை அர்த்தத்துடன் நன்கு கற்று அதில் கூறியபடி காரியங்களைச் செய்து உலக நலனையே குறிக்கோளாகக் கொண்டு தொண்டு புரிந்தார்கள்.

வேதம் விண்ணிலிருந்து இறங்கிய பொழுது—இறக் கப்பட்ட பொழுது—எவ்விதப் பிரிவும் இல்லாமல் ஒரே தொகுப்பாகவே இருந்தது.

கிருதயுகம் முதலிய யுகங்களைக் காட்டிலும் கலி யுகத்தில் வலிவு, புத்தி கூர்மை, ஆயுட் காலம் இவைகள் குறைவு என்பதனால், அவ்வேதத்தை ஒரே தொகுப்பாக கற்றறிவது கஷ்டம் என்பதை மனதில் கொண்டு வேத வியாச மகரிஷி அதை, ரிக், யஜுர், சாம, அதர்வண என்று தனித்தனியே நான்காகப் பிரித்து, தனது சீடர்க ளான சுமந்து, வைசம்பாயனர், ஜைமினி, பைவர் என்பவர்களைக் கொண்டு அந்தந்த வேதத்தை உலகத் தில் பரம்பரையாகப் போதித்து விருத்தி செய்ய ஏற்பாடு செய்தார்.

ரிக் வேதம் இருபத்தேழு சாகைகளையும், யஜுர் வேதம் நூற்றொரு சாகைகளையும், சாம வேதம் ஆயிரம் சாகைகளையும் கொண்டிருந்தாலும் ஒவ்வொன் றிலும் சில சாகைகளே நடைமுறையில் உள்ளன.

அதர்வணவேதத்தின் ஒன்பது சாகைகளில் உத்திரப் பிரதேசத்தில் மட்டும் இரண்டு சாகைகள் உள்ளன.

இந்நான்கு வேதங்களும் மீண்டும் மூன்று பிரிவுக ளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சம்ஹிதை, பிராஷ்மணம், ஆரண்யகம் என்பன இம்மூன்று பிரிவுகளின் பெயர்க

ளாகும். இம்மூன்று பகுதிகளையும் முறையே கர்ம காண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம் எனப் பாகுபடுத்திப் பகர்வதுண்டு.

முதல் இரண்டு பிரிவுகளும் மதக்கிரியைகளை விளக்கும். மூன்றாவது உபநிஷதங்களாம் ஆத்ம விளக்குகள்.

இவைகளில் உள்ள சில பகுதிகள் 'மந்த்ரம்' என்னும் பெயர் பெறுகின்றன. உரைநடையிலும் பலவிதமான செய்யுள் சந்தங்களிலும் அவைகள் அமைக்கப்பட்டுள்ளன. அவையனைத்தும் வெவ்வேறு தேவதைகளுக்குரிய பிரார்த்தனையாகும். யாக கிரியைகள் நிகழும் பொழுது அவைகள் ஓதப் பெறுகின்றன. மகோன்னதமான மனப்பான்மைகளை அவைகளுள் ஆங்காங்கு காணலாம்.

வேதங்களின் ஏதாவதொரு சாகையை பூர்ணமாக அங்கங்களுடன் குருமுகமாக பிராசீன சம்பிரதாயப்படி அத்யயனம் செய்து அதில் கூறப்பட்டபடி நன்கு பக்தி சிரத்தையுடன் கர்மாக்களை அனுஷ்டித்து செய்பவர்களுக்கு மட்டும் அல்லாமல் உலகத்துக்கே—தீமையைப் போக்கி—க்ஷேமத்தைக் கொடுக்கக் கூடியதாகும்.

பொருள் உணராது அந்த மந்த்ரங்களின் ஓசைகளை உச்சரித்தாலும் அதற்கேற்ற ஆத்ம சாதன பலன் உண்டு என்பது ஐதீகம்.

வேதத்தை நம்புவதும் பரம்பொருளை நம்புவதும் நமக்கு ஒன்றேயாம். 'மூவா நான்மறை முதல்வா போற்றி' என்கின்றார் மணிவாசகப் பெருமான்.

வேதம் அழியாதது என்பதும், பரம் பொருளே வேதமாக உள்ளது என்பதும் கோட்பாடு. இங்கு வேதம் என்பது ஒரு நூலைக் குறிப்பதாகாது. பிரபஞ்சமே வேதம். அது இறைவனிடமிருந்து வந்துள்ளது.

அது தோன்றவும் மறையவும் செய்கிறது; ஆனால் அதற்கு, அழிவு இல்லை. அது அறிவு சொரூபம் என்பது வெளிப்படை. அதனால் வேதத்தின் இலட்சியார்த் தத்தை அறிந்துகொள்வது அவசியமாகிறது.

"போற்றுதற்குரிய பெரிய பொருளே, எங்களது மேலாய தளையை வெட்டிக் களைக. இடைத்தரமான தளையைப் பாழாக்குக. கடைத் தரமான தளையை அகற்றுக. நிலைபேறுடைய பொருளே, உனது ஆணை யால் பாபங்கள் அனைத்தினின்று விடுபட்டுள்ள நாங்கள் உவப்பில்லா ஆனந்தத்தை அனுபவிப்போம்." —ரிக் வேதம்.

"மேலாய தளையானது அத்யாத்மிக பாசம் எனப் படுகிறது. மனிதன் தனக்குத்தானே உண்டுபண்ணிக் கொள்ளும் பந்தம் மிகக் கொடியது. விவேகம் என்னும் வாளைக் கொண்டு அதை வெட்டித் தள்ள வேண்டும். ஆதி தெய்விக பாசம் இடைத்தரமான தளையாகிறது. இயற்கையின் நடைமுறைக்கு அல்லது தெய்வ சங்கல்பத் துக்கு மாறுபடுவதால் அது உண்டாகிறது. பொருத்த மான கால—தேச— நிமித்தத்தைக் கொண்டு அதைத் தவிர்க்கலாம். ஆதி பௌதிக பாசம் கடைத் தரமான தளையாகிறது. பிரதிகூடமான சூழ்நிலை அதற்குக் காரணமாகிறது. சூழ்நிலையைத் திருத்தியமைப்பதால் அத்தகைய தளையைக் கலைக்கலாம். அருளைச் சார்ந் துள்ள முயற்சியால் மூன்று விதப் பாசங்களையும் போக்க லாம். பிரார்த்தனையே அதற்கு உற்ற உபாயமாகிறது" என்று அந்த ரிக் வேத சம்ஹிதையை விளக்குகிறார் ஸ்ரீமத் சித்பவானந்தர்.

"நீ தேஜஸ் ஆக இருக்கிறாய். எனக்கு தேஜஸ் வழங்கு.

நீ வீரியமாக இருக்கிறாய். எனக்கு வீரியம் வழங்கு.

நீ பலமாக இருக்கிறாய் எனக்கு பலம் வழங்கு.

நீ ஓஜஸ் ஆக இருக்கிறாய். எனக்கு ஓஜஸ் வழங்கு.

நீ தீமையில் வெறுப்பாக இருக்கிறாய். எனக்குத் தீமையில் வெறுப்பை வழங்கு.

நீ கஷ்டத்தை சகிக்கிறாய். எனக்கு கஷ்டத்தை சகிக்கும் தன்மையை வழங்கு''—யஜுர் வேதம்.

தேஜஸ் என்பது சீலத்தினின்று உண்டாகிற உடல் பொலிவு. வீரியம் என்பது துணிந்து நலனையே செய்வது. பலம் என்பது உடல் வலிவு. ஓஜஸ் என்பது சீலத்தினின்று உண்டாகிற உள் ஒளி. நல்ல ஆத்மசாதகன், யாருக்கும் தீங்கு செய்வதில்லை. தனக்கு வருகிற கஷ்டங்களை அவன் பொறுத்துக் கொள்கிறான். அப்படிச் செய்வது சகிப்பு.

''ஓம். நமது நலத்துக்காகவென்று நாம் பிரார்த்திப்போமாக. வேள்வியைப் புகழ்ந்து பாடுவோமாக, வேள்வி வேட்பவனைப் புகழ்ந்து பாடுவோமாக. கடவுள் நமக்கு அருள் புரிவாராக, மக்களுக்கு நலன் உண்டாகுக. பயிர் பச்சை செழித்து வளர்க. நமக்கு ஆக்கம் உண்டாகுக. ஆடு மாடுகளுக்கு ஆக்கம் உண்டாகுக''—புருஷ சூக்தம்.

இயற்கையில் உள்ள உயிர் வகைகள் அனைத்துடனும் இனிய இணக்கம் வைத்து வாழ்வது வைதிக வாழ்வு.

உயிர்கள் அனைத்தின் நலனைக் கோருவது பிரார்த்தனை. பொது நலனுக்கு அமைந்துள்ள பணிவிடை வேள்வி எனப்படுகிறது.

வேள்வி வேட்பவன் யஜமானன் எனப்படுகிறான்.

''எனது வாக்கு மனதில் உறுதி பெற்றிருக்கட்டும். மனது எனது வாக்கின் கண் உறுதி பெற்றிருக்கட்டும். சுயஜ்ஜோதி பிரம்மமே எனக்குப் பிரத்தியக்ஷமாவாயாக. என்னை வேதத்தோடு இணைத்து வைப்பதற்கு—வாக்கும் மனதும் ஆகிய—இரண்டும் தகுதியுடையவை களாயிருக்கட்டும். ஆசிரியரிடமிருந்து கேட்டு அறிந்தது என்னிடமிருந்து மறந்து போகாதிருக்கட்டும். இப்படி வேதம் கற்பதன் மூலம் பகலையும் இரவையும் இணைப்பேன். பொருத்தமானதையே பேசுவேன். சத்தியத்தையே பேசுவேன். அந்தப் பிரம்மம் என்னைக் காப்பாற்றுக. அது ஆசிரியரைக்காப்பாற்றுக. —ரிக் வேத சாந்தி பாடம்.

இதற்கு, ''வாக்கையும் மனதையும் ஒன்றுபடுத்துவது யோகம். பேசியதையே மனதில் கொள்ள வேண்டும். உள் ஒன்று வைத்துப் புறம்பு ஒன்று பேசுபவன் அருளுக்குப் புறம்பு ஆகிறான்.

''உலகும் அதைப்பற்றிய அறிவும் வேத சொரூபம். வாக்காலும் மனதாலும் உலகோடு நல்லிணக்கம் வைக்க வேண்டும். வாக்காலும் மனதாலும் உலக ஞானத்தோடு நல்லிணக்கம் வைக்க வேண்டும்.

''கேட்டு அறிந்ததை ஞாபகத்தில் வைப்பது சிறந்த பண்பு ஆகும்.

''பகலையும் இரவையும் இணைப்பது என்பது வீண் காலம் போக்காதிருத்தலாம். காலத்தை நன்கு பயன் படுத்துவதும் கடவுள் வழிபாடாகிறது. ஏனென்றால் கடவுளே கால சொரூபமாயிருக்கிறார்.

''பொருந்தியதாயுள்ள சத்தியத்தையே பேசுவது நல்ல பிரார்த்தனையாகிறது.

''குருபக்தி கொள்ளுமளவு அறிவு வளர்கிறது. சீரிய குருபக்தி ஒப்பற்ற பிரார்த்தனையாகிறது'' என்று விவரிக்கிறார் ஸ்ரீமத் சித்பவானந்தர்.

இவ்வண்ணமாகவெல்லாம் வேதங்கள் பேசுகின்றன.

வாக்கு வன்மையுள்ளவன் காவியம் இயற்றுகிறான். ரிக் என்பது இறைவனின் எழிற் காவியம். ரிக் வேதம் ஞான நூல். உலகிலுள்ள பொருளனைத்தையும் விளக்க வல்லது. வாக்கில் ஒளி வாய்ந்தவன் இனிமையாக அன்புடன் பண்புடன் பிறர் நலம் விளைக்கும் உண்மை களையே பேசுவான். வாக்குச் சாதனை பெற்றவன்தான் ரிக்வேதம் பயின்ற பலனைப் பெறுவான்; வெறுமே வேதமோதியவன் அல்ல; ரிக் என்பது வாக்கு. ''ரிசம் வாசம் ப்ரபத்யே''

தூய திடமனமுள்ளவனே சிறந்த செயலாற்ற இயலும். சிறந்த செயலே வேள்வியாவது. மனத்தில் நல்ல எண்ணங்கள் நிரம்பினால் புலன்கள் நற்செயல் புரியும். யஜுர் வேதம் வேள்வி நூல். மனச்சாதனை எய்தியவன்தான் யஜுர் வேதம் பயின்ற பயனைப் பெறு வான். யஜுஸ் என்பது மனம். 'மநோ யஜு; ப்ரபத்யே'

உயிரோட்டத்தை உள்ளும் புறமும் அடக்கிச் சமமாக வைத்துக் கொண்டு, உயிரைப் போலவே எதிலும் ஒட்டாமல் நடு நிலையில் இருந்து உள்ளத்தைக் காப் பவனே இன்னிசை பாட இயலும். ஸாம வேதம், இசை வேதம், சம நிலையில் வாழ்ந்து உயிர் நட்பைச் சாதிப் பவன்தான் ஸாம வேதம் பயின்ற பயனைப் பெறுவான். ஸாமம் என்பது பிராணன். 'ஸாம ப்ராணம் ப்ரபத்யே'

தர்வம்—என்றால் நடுக்கம். அதர்வம் என்றால் நடுக்கமின்மை. கண்ணாலும் காதாலும் நல்லன வற்றையே கண்டு கேட்டு வாழ்பவனுக்கு எங்கும்

எதிலுமே நடுக்கம் இராது. இந்த நடுக்கமின்மை என்ற சாதனையை எய்தியவன்தான் அதர்வவேதம் பயின்ற பயனுடையவன். நல்ல கண்ணும் காதும் அதர்வத்துக்கு இருப்பிடம். 'சக்ஷு; ப்ரோத்ரம் ப்ரபத்யே'

இவ்வண்ணம், வாக்கு வலிமை, மனத் திட்பம், உயிர் நட்பு, கண்காதுகளின் தூய்மை ஆகிய நான்கும் நால் வேதம் பயின்றவனுக்கு வாய்க்கின்றன.

''வா கோஜ; ஸ ஹௌஜோ மயி ப்ராணாபா நௌ'' என்கிறது சுக்ல யஜுர் வேதம்.

வேத காலத்தில், பயிலும் சீடர்களை நான்கு வகை யாகப் பிரித்திருந்தார்கள். அது இந்தக் காலத்துக்குக் கூடப் பொருந்தும்.

தைல புத்தி உடையவன் முதல் வகை. நீர் கொண்ட பாத்திரத்தில் சிறிது எண்ணெய் ஊற்றினால் அது தண்ணீரின் மேல்பரப்பு முழுவதும் பரவும். அதேபோல் உத்தம சீடன், ஆசான் கற்பிப்பதைத் தான் நன்றாக உணருவதோடு பிறருக்கும் எடுத்து உரைக்கும் வல்லமை யுடையவனாவான்.

கிருதபுத்தி (கிருதம் என்றால் நெய்) உடையவன் இரண்டாவது வகை—தண்ணீரின் மேல் சிறிது விழுது நெய்யை இட்டால், அது மொத்தமாக அப்படியே நிற்கும். நீரில்பரவாது. இத்தகைய சீடன், ஆசான் கூறுவதையே உணர்வான்.

கம்பள புத்தி மூன்றாவது வகை. மணல்பாங்கான ஓர் இடத்தில் கம்பளியை விரித்து உட்கார்ந்தால் அதில் மணல் நிறைய ஒட்டிக் கொள்ளும். பிறகு எழுந்தவுடன் கம்பளத்தை எடுத்து உதறினால், மண்ணெல்லாம் கீழே உதிர்ந்துவிடும். அதேபோல் சில மாணவர்களுக்கு

ஆசிரியர் பாடம் சொல்லும்போது எல்லாம் விளங்குவது போலத் தோன்றினாலும் வகுப்பு முடிந்தவுடன் கற்றது அனைத்தும் மறந்துவிடும்.

களிமண் புத்தி நான்காவது வகை—களிமண்ணை உருண்டையாகப் பிடித்து அதன் எதிரில் உட்கார்ந்து எவ்வளவு உயர்ந்த கருத்துக்களைச் சொன்னாலும் அதற்கு ஒன்றும் விளங்காது. அதைப் போன்றவன்தான் இந்த வகையைச் சேர்ந்தவன். என்ன செய்வது அப்படிப் பிறந்து விட்டான் அவன்!

# 2

வேதங்களின் மகிமையைப் பற்றி காஞ்சி காமகோடி பரமாசார்யாள் என்ன சொல்கிறார் என்று கேளுங்கள்.

"நாம் வேதம் உச்சரிக்கையில் எந்தெந்த அட்சரங்கள் சரீரத்தில் எங்கேயெங்கே பிறந்து எப்படி வெளிப்படுகிறது என்பதையெல்லாம் நிரம்ப விஞ்ஞான ரீதியிலாக சிட்சா சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது.

வெளியில் மனிதர்கள் காதுபடக் கேட்கிற 'வைகரி' என்ற சப்தத்துக்கு ஆதாரமாக உள்ள 'பரா' என்ற சப்தம் இருக்கிறது.

'வைகரி,' வாயில், உதட்டில் வருவது. 'பரா' என்ற மூல ரூபந்தான் மூலாதாரத்தில் நாபிக்குக் கீழே இருக்கிற சப்தம். அது 'வைகரி'யாக வாய் வழியே வருவதற்குமுன் பச்யந்தி, மத்யமா என்ற இரண்டு நிலைகள் இருக்கின்றன.

யோக சித்தியில் மேலே போகப் போகத்தான் படிப் படியாக பச்யந்தி, மத்யமா, பரா முதலிய சப்தங்களைக் கேட்க முடியும்.

யோகேச்வரர்களான ரிஷிகள் பரா வாக்கையே கேட்கக் கூடியவர்கள். மூலாதாரத்தில் 'பரா' வாக்காக எந்தெந்த சப்தங்கள் இருந்தால், அவை 'வைகரி'யாக எல்லா மனிதர்களும் வெளிப்படக் கேட்கக் கூடியபடி வரும்போது, அவற்றால் தேவதாப் ப்ரீதியும், லோக க்ஷேமமும், ஆத்மாபிவிருத்தியும் உண்டாகுமோ, அப்படிப்பட்ட பரா வாக்குகளையே ரிஷிகள் அகண்ட ஆகாசத்திலிருந்து கிரகித்து வேத மந்த்ரங்களாக நமக்குத் தந்திருக்கிறார்கள்.

இந்த விவரங்களைத் தொல்காப்பியத்தில் நிரம்பவும் நன்றாகப் புரிந்து கொண்டு சொல்லியிருக்கிற விஷயம் சமீபத்தில் தெரிய வந்தது.

பரா பச்யந்தி என்பவற்றைப் 'பனா,' 'பைசந்தி' என்று பழைய தமிழ் நூல்களாலேயே சொல்லியிருப்பது முன்னமே தெரிந்தது. ஆனாலும் பஞ்சப் பிராணன்களில் உதானன் என்ற மேல் நோக்கிப் போகிற காற்றினால் தான் மூலாதாரத்தில் சப்தங்கள் உண்டாகின்றன என்பது உள்பட மந்த்ர யோகம் இத்தனை நுணுக்க மாகத் தமிழின் முதல் நூலான தொல்காப்பியத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறதென்று இப்போதுதான் தெரிந்தது.

வேத ஸ்வரங்களைத் தூக்கியும் தாழ்த்தியும், சமனாகவும், ஸ்வர பேதமில்லாமலும் சொல்வதை உதாத்தம், அநுதாத்தம், ஸ்பரிதம், பிரசயம் என்று சொல்வார்கள். அந்த சூட்சமங்களையெல்லாம் கூடத் தெரிந்து கொண்டு தொல்காப்பியத்தில் சொல்லியிருக்கிறது.

மந்த்ரங்களைப் பொறுத்த மட்டில் எந்த பாஷை என்று பார்ப்பது அடிப்படையிலேயே தப்பு. இங்கே பாஷை, அர்த்தமெல்லாம் இரண்டாம் பட்சம்தான். சப்த மாத்திரத்திலேயே ஏற்படுகிற பலன்தான் மந்த்ரங்களுக்கு விசேஷம்.

வைதிகமான மந்த்ரங்களுக்கு இப்படி சப்தத்தினாலேயே கௌரவம், சக்தி இருக்கிறது என்று தொல்காப்பியரே சொல்லியிருக்கிறார்.

இங்கே நான் இன்னொன்றையும் சொல்லிவிட வேண்டும். உங்களில் அநேகம் பேருக்கு அது விசித்திரமாக இருக்கும். அதாவது, வேதம் சமஸ்கிருத மொழியில் இருக்கிறது என்று தானே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! அதுவே தப்பு.

வேத பாஷைக்கு 'சமஸ்கிருதம்' என்ற பெயர் இல்லை. அதற்குப் பெயர் 'சந்தஸ்' என்பதுதான். சந்தஸ் என்றால் சந்தம் மட்டுமில்லை. சந்தங்களில் அமைந்த வேதங்களுக்கும் வேத பாஷைக்குங்கூட 'சந்தஸ்' என்றே பெயர்.

வேதம் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும்—லௌகிகமான பேச்சு, எழுத்து, காவியங்கள் மட்டுமன்றி தர்ம சாஸ்திரம், புராணம், இதிகாசம் உள்பட எல்லா விஷயங்களிலும்—பிரயோகமாகிற பாஷைக்குத்தான் சம்ஸ்கிருதம் என்று பெயர்.

வேத பாஷை 'சந்தஸ்'. 'வேத பாஷையில் இப்படி இருக்கிறது.' என்று சொல்லுமிடங்களில், வியாகரண சாஸ்திரம் எழுதிய பாணினி 'இதிசந்தஸி' என்பார். மற்றபடி சம்ஸ்கிருதத்தைச் சொல்லும்போது, 'இதலோகே' என்பார் என்றெல்லாம் காஞ்சி முனிவர் விளக்கியுள்ளார்கள்.

பண்டைய நாளில் எதையும் கற்கவேண்டுமானால் ஓர் ஆசானை நெருங்கிப் பணிவுடன் கீழே உட்கார்ந்து கற்க வேண்டும். அவ்வாறு பயபக்தியுடன் பயிலப்பட்ட நம் பண்டைய ஞானதத்துவங்களின் பெயர் உபநிஷத மென்றாயிற்று.

உபநிஷதம் படிக்கத் தொடங்குபவன் முதலில் தன்னை இழக்கவேண்டும். விடுபட்ட ஆன்மாவின் குரல் இது. 'தன்னை இழப்பவனே என்னை அடைகின்றான்' இதற்கு என்ன செய்யவேண்டும். நான் என்ற—ஆன்மாவைத் தூக்கி எறிய வேண்டும். அது தான் ஆன்ம சமர்ப்பணம்.

'உபநிதஷ மகா மந்த்ரங்களிலுள்ள 'ஓம்' எனும் வில்லை எடு—உபாசனை எனும் கூர்மை கண்ட (உன்னை) ஜீவனை அம்பாய்ப் பூட்டு. உன் சித்தத்தால் நன்றாக இழுத்து பிரம்மத்தைக் குறித்து அதனுள் செலுத்தி அப்படியே லயித்துவிடு' என்கிறது முண்டகோபநிஷதம்.

எப்படி லயிப்பது? ஏகாங்கிர தீட்சையில் நீ அமிழ அமிழ உன்னையே மறந்துபோவாய், இழந்து போவாய். அந்த ஏகத்தில் கலந்து இன்பமடைவாய்.

இந்தியப் பண்பாட்டு வரலாற்றில் மட்டுமன்றி, புராதன உலகப் பண்பாட்டு வரலாற்றிலும் மிகவும் மெச்சத் தக்க கௌரவமான ஸ்தானத்தை நம் வேதங்கள் பெற்றிருக்கின்றன. அதோடு இந்தியாவின் உயர்ந்த பண்பாடு உலகெங்கும் பரவியிருக்கிறது. உலகத்துக்கு முதன் முதலில் ஞானவொளி அருளியவையும் இவையே.

தவிர, மன அமைதி இல்லாமல் இங்கும் அங்கும் அலைந்து கொண்டு மூன்று தாபங்களில் எரியும் மனிதனுக்கு, அவனுடைய சித்த மலங்களைப் போக்கவல்ல ஆத்ம ஞானமென்னும் அமுதத்தை இவை ஊட்டின.

சஞ்சீவினியின் சக்தியுடைய இந்தியப் பண்பாட்டின் பல்வேறு காட்சிகளை நம் வேதங்களில்தான் காணமுடிகிறது. உண்மையில் இந்தியப்பண்பாட்டின் ஆத்மாவாக ஹிந்து வேதங்கள் அமைந்திருக்கின்றன.

இந்தியாவின் தர்மம், இலக்கியம், கலை, கல்வி முதலியவற்றுக்கு மூலகாரணமாக இருப்பவை வேதங்களே. அப்போதப்போது மஹரிஷிகள் தங்கள் ஞானக் கண்ணால் அறிந்து அநுபவித்த அத்யாத்ம ஞானமே நம் வேதங்கள்.

மிக்க பழமையும் புனிதமும் கொண்டிருப்பதால் வேதங்களை 'அபௌருஷம், அதாவது 'மனிதரால் இயற்றப் பெறாமல் இறைவனால் அருளப் பெற்ற ஞானக் களஞ்சியம்' என்று கருதுகிறார்கள்.

தர்மத்தையே உயிராகக் கொண்ட இந்தியர், வேதங்களை அபௌருஷம் என்று கருதியது பொருத்தமே. சுருக்கமாகக் கூறினால், வேதங்கள் லௌகிக அலௌகிக உபாயங்களுக்கு உதவுபவை. அவை ஆத்ம ஞான விஞ்ஞானத்தின் தொகுப்பு.

இதைப்பற்றி மநு "வேத சாஸ்திரங்களின் தத்துவ ஞானம் படைத்த பேரறிஞர்கள், ஆசிரம வாசம் செய்தார்கள். இந்த உலகத்திலேயே நடமாடினார்கள். அவர்கள் பிரம்மத்திலிருந்து உண்டானவர்கள் என்று நாம் கருதுகிறோம்" என்று கூறியிருக்கிறார்.

மநு ஸ்ம்ருதி கூறும் பிரபல தர்மம், ஞானக் களஞ்சியமான வேதாங்கங்களையே அடிப்படையாகக் கொண்டது. வேதம் எல்லத் தர்மங்களுக்கும் மூலாதாரம்.

வேதங்களை நாம் ஆராய்ந்தால் அவை பெரும்பாலும் தார்மிகக் காரியங்களில் உபயோகப்படுபவை என்று புலப்படும். இன்றைய இந்தியாவில் பிரபலம் அடைந்திருக்கும் அத்தனை மதங்களும் சம்பிரதாயங்களும் வேதங்களிலிருந்து உண்டானவையே!

'தீநாநாத் சாஸ்திரி சுலேட' என்னும் பெரியவர் தம் 'வேதகால நிர்ணயம்' என்னும் நூலில் 'வேதகாலம் மூன்று லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டது' என்று எழுதியுள்ளார்.

வைதிக இலக்கியங்கள், மனித உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை அப்படி அப்படியே எழுதியவை. சொற்களில் எந்த விதமான ஆடம்பரமும் இல்லாமல் உள்ளத்தில் எழும் எண்ணங்களை வெளியிட வைதிக இலக்கியங்களில் முடிந்திருக்கிறது.

வேதங்களில் அங்கங்கே அலங்காரங்களைப் பற்றியும் குறிப்புகள் உள்ளன. சூக்தங்கள் இசை நிறைந்திருப்பவை மட்டுமல்ல, இன்பம் அளிக்கக் கூடியவையாகவும் அமைந்துள்ளன.

உண்மையாகவே தன் மயமும் அந்நிய பாவனையும், கருத்துக்களை சகஜமாக வெளியிடும் தன்மையும் மிக்க அழகாக .வேதங்களில் அமைந்துள்ளன. ரஸ விதானமும் வேதங்களில் செம்மையாக அமைந்திருக்கிறது. ரிக் வேதத்தில் இந்திரனின் ஸ்துதிகளில் வீரரசம் ததும்புகிறது.

மற்றும் ரிக் வேதத்தில் சௌந்தரியமும் கற்பனையும் உள்ளத்தைத் தொடுகின்றன. ரிக் வேதத்தில் உள்ள உஷா சூக்தம் காவிய இலக்கணத்தின் எல்லாப் பண்புகளையும் கொண்டதாக இனிய நடையில், எளிதில்

புரிந்து கொள்ளும்படி சரளமாகவும் அழகாகவும் அமைந்திருக்கிறது. வேத காலத்து மஹரிஷிகள், கவியின் கண்களினால் பகவதி உஷாவைக் கண்டுகளித்தார்கள்.

வேதத்தில் சொல்லிய கர்மாக்கள் முறைப்படி செய்ய முடியாவிட்டால், வேதத்தில் ஒரு சாகையை யாவது பாராயணம் செய்வதும் கேட்பதும் விரும்பும் பலனை கொடுக்கவல்லது.

இவ்விதம் பெருமையுள்ள வேதத்தைக் காப்பாற்றுவதற்கு ஜகத்குரு காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடம் பரமாச்சார்யாள் பெருமுயற்சி செய்து ஸ்ரீ மடத்தைச் சேர்ந்த அநேக தலங்களில் மூன்று வேதத்திற்கும் சாத்திரங்களுக்கும் வித்த்யாசாலைகளை ஏற்படுத்தி பரிபாலித்து வெகு காலமாக நடத்தி வருகிறார்கள்.

உபநிஷதங்கள் வேதங்களின் இறுதிப் பகுதிகளாய், வேத—அந்தமாய் அமைந்து அவற்றின் சாரத்தை தம்மகத்தே கொண்டு மிளிர்கின்றன.

வேத விற்பன்னர்களின் பரம்பரையால் வழிவழியாக வாய் மொழியாய் அருளப்பட்டு வருபவை அவை. உண்மை காண்போர்களான ரிஷிகள், தாமே நேரடியாய்க் கண்ட ஆத்ம அனுபவத்தின் பதிவுகளே உபநிஷதங்கள்! அவை ஆத்மாவின் உயர்நிலையாகும். 'ஆத்மாவின் இமயங்கள்' என்றே சொல்லிக் கொள்ளலாம்.

உபநிஷதம் என்ற சொல்லுக்கு 'குரு ஒருவரின் திருவடிக்கீழ் அமர்தல்; அமர்ந்து ஞான உபதேசம் பெறுதல்' எனப் பொருள்படும்.

உபநிஷதங்கள், வேதாந்த சூத்திரங்கள், பகவத் கீதை இம்மூன்றும் நம்முடைய புனிதநூல்களாகும். ஏன்?

இப்பிரதான இந்து சாஸ்திரங்களைப் பிரபஞ்சம் முழுமைக்கும் பொதுவான புனித நூல்கள் என்றே கூறலாம்.

இவற்றையே 'ப்ரஸ்தானத்ரயம்' அல்லது மூன்று மெய்ந்நூல்கள் என்பர். இவற்றுள் வேதாந்த சூத்திரங்கள், உபநிஷதக் கருத்துக்களையே சூத்திர வடிவில் தருகின்றன. உபநிஷதங்களே இச்சூத்திரங்களுக்குப் பிரமாண நூல்களாகும்.

அதனால் இந்துக்களுக்கு உபநிஷதங்களும் பகவத் கீதையுமே பிரதான மத நூல்களாகும்.

பகவத்கீதையையும் ஓர் உபநிஷத நூலாகவே கொள்ளலாம். அதன் ஒவ்வொரு அத்தியாயத்தின் இறுதியிலும் ''மகிமை மிக்க பகவத் கீதையாம் இவ்வுபநிஷத்தில்'' என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாமே!

உபநிஷதங்கள் ஆத்ம போதங்கள் ஆகும். வடமொழியில் ஏறத்தாழ நூற்றுப் பன்னிரண்டு உபநிஷதங்கள் இருப்பினும், அவற்றுள் அநேகமாகப் பதினெட்டே மிக முக்கியமானவை எனலாம். இவையே பேருபநிஷதங்கள் எனப்படும்.

இயற்கைக்கு வெளியே இறைவனைக் காணும் மனிதனை வேதங்களில் பார்க்கும் நாம், அவனுடை அகத்தினுள்ளேயே இறைவனைக் காண்பதை இந்த உபநிஷதங்களில் காண்கிறோம். மற்றும் சீடனின் மிகப் பெரிய வினாக்களையும், அவற்றிற்குக் குரு அளிக்கும் எளிய பதில்களையும் உபநிஷதங்களில் பார்க்கிறோம்.

இப்பிரபஞ்சப் பெரும் பொருளோடு ஒப்புமைப்படுத்தப்பட்ட வகையில், உபநிஷதங்களில் வெளிப்படும் காட்சிகள், நமது சொந்த 'இருப்பை'ப் பற்றிய ஓர் உணர்வு நிலையை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

அதனால் இல்வுலகில் மனிதனுடைய மனவளர்ச்சி எவ்வளவு பிரமிக்கத்தக்கதாகப் பெருகினாலும், அவன் உபநிஷதங்களின் சாட்சிகளை மிஞ்சி ஒருபோதும் சிந்தித்து விடமுடியாது.

அவனது சொந்த அகத்தை மிஞ்சி—அவனது சொந்த உணர்வுநிலை—அவனது சொந்த வாழ்க்கை—இவற்றை மிஞ்சி அவன் ஒரு போதும் அப்பால் சென்றிட முடியாதல்லவா!

அவன் உயிரோடு வாழாவிட்டால், அவனால் சிந்திக்க இயலுமா ?

தான் வாழும் உலகத்தையும் தன்னைச் சுற்றியுள்ள பிரபஞ்சத்தையும், பற்றி அறிந்து கொள்ள அவாவுற்று, முடிவில்லாத போராட்டத்தை மேற்கொண்டான் மனிதன்.

அப்பொழுது தன்னைச் சிந்திக்க அனுமதிக்கும் மனத்தைப் பற்றியுங்கூட அறிந்திட நினைக்கின்றான். என்றாலும் 'வாழ்க்கை' என்பது சிந்தனைக்கும் மேம் பட்டு இருப்பதே. இது மாறாத ஓர் எளிய உண்மையாகும்.

நாம் ஒரு சுவையான கனியை நினைக்கலாம்; மனக் கண்முன் அப்படியே நிழலாடும் அது. ஆனால் அதன் சுவையை அறிய விரும்பினால் நாம் அதனை உண்ண வேண்டும். அப்படி உண்பதால் ஏற்படும் இன்பமும், உடலின் வளர்ச்சியை அது ஓம்புதலும், சிந்தனையின் செயல்களாகாதே!

உபநிஷதங்களின் பதில் மிகவும் தெளிவாக இருக்கின்றது.

ஆத்மன்: உயிர் வாழ்க்கையின் மர்மம் அது; உயிரின் ஒளி; எல்லையில்லாப் பேரின்பத்தின் மூலாதாரம். இப்பூவுலகில் மனிதன் படைக்க முடிவதில் எது எது அழகாகவும் தன்னகத்தே நலம் பொருந்தியதாகவும் உள்ளதோ அதற்கு ஆதாரமான உயர் நலமாகும்.

இதோ உபநிஷதங்களே பேசுகின்றன கேளுங்கள்.

"சிந்தனைக்கு அப்பாற்பட்டவனாக அவனை அறிபவரின் சிந்தனையில் அவன் உதயமாகின்றான். சிந்தனையால் அவனை எய்த இயலும் எனக் கற்பனை செய்வோருக்கு அவன் உதயமாவதேயில்லை. கற்ற மேதைகளுக்கு எட்டாமலும் எளியவர்களுக்கு எட்டும் படியாகவும் உள்ளான் அவன்"—கேன உபநிஷதம்.

"மிக அதிகமான கல்வியால் ஆத்மன் அடையப் படுவது இல்லை! மதிநுட்பத்தாலும் புனித போதனை யாலும் அவனை எய்த இயலாது."—கட உபநிஷதம்.

நமது உணர்வு நிலையின் ஒளியையும், நம் உயிர்த் தீயையும் எவரிடமிருந்து பெற்றுள்ளோமோ, அப்பரம் பொருள் ஞாயிற்றைக் கண்டுகொள்ள உபநிஷத ரிஷிகள் மேற்கொள்ளும் தாபமிக்க தேடுதல்கள்-அலைச்சல்கள், அவர் கேட்கும் கேள்விகளின் பெருமை, கிடைக்கும் பதில்களில் மிளிரும் மகத்தான எளிமை, உன்னதப் பொருளின் வெளிப்பாடு அவரகம் வரும்போது அவர் மாட்டு எழும் ஒளி வெள்ளப் பேரின்பம், இவையனைத் தையும் நாம் அறியும்பொழுது நமக்குப் புல்லரிப்பு ஏற்படு கிறது.

அவர்களுள் ஒரு ரிஷியால் 'ஆதவனின் ஒளியும் என் ஒளியே' என்று அறுதியிட்டு, கூற முடிகிறதென்றால் அவர் தம் பெருமையே என்னென்பது!

ஜெர்மானியத் தத்துவ ஞானி ஸ்காபென்ஹா பெயருக்கு இவ்வுபநிஷதங்களைப் படிக்கும் பேறு

கிட்டியது. மிகவும் பெருமிதம் கொண்டு, "பெரும் பயனளிப்பதும் நம்மை மிக உயர்த்துவதுமான வாசகங்கள் உலகிலேயே உபநிஷதங்கள்தாம். அவைகள் எனது வாழ்க்கையின் ஆறுதலாய் இருந்தன. அவைகளே எனது மரணத்தின் ஆறுதலாயுமிருக்கும்." என்று கூறியுள்ளார்.

"பன்னரும் உபநிடநூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே"

என்கிறார் மகாகவி பாரதியார்.

நம்நாட்டில் அரசு புரிந்த மொகலாய சக்கரவர்த்திகளுள் ஒருவரான ஷாஜஹானுடைய மூத்த குமாரனும், மாமன்னன் ஔரங்கசீப்பின் அண்ணனுமான தாரா ஷுகோ என்ற புகழ்பெற்ற மேதாவி 1657-ஆம் ஆண்டில், பல பண்டிதர்கள் உதவியைக் கொண்டு பல முக்கியமான உபநிஷதங்களைப் பார்சி மொழியில் மொழி பெயர்த்தான்.

இந்தப் பார்சி மொழி பெயர்ப்பை வைத்தே மேல் நாட்டுப் புலவர்கள் 1801-ல் லத்தீனில் முதன் முதலில் உபநிஷத்துகளை மொழி பெயர்த்தார்கள்.

உடனே மேல்நாட்டில் உபநிஷத்துகளின் பெருமை பரவிற்று.

மொகலாய இளவரசன் தாராவின் உயர்ந்த அறிவும், ஸம்ஸ்கிருதப் புலமையும், மேலான குணமுமே, உபநிஷத்துகளின் பெருமை உலகம் முழுதும் பரவுவதற்குக் காரணமாயிருந்ததை நாம் என்றும் மறக்கக் கூடாது.

# 3

**'வித்'** என்ற சொல்லுக்கு அறிவு என்று பொருள். அதிலிருந்து வந்ததே வேதம் என்ற சொல். 'புலன் களைக் கொண்டு நேர்முகமாகவோ, ஊகம் அல்லது அநுமானம் என்பதைக் கொண்டு மறைமுகமாகவோ அறிய முடியாத விஷயங்களை உணர்த்தும் காரணத் தால் அதை வேதம் எனக் கூறுகிறோம் என்பது சான்றோர் வாக்கு.

ஜீவராசிகளுக்கு அறிவு என்பது கண் போன்றது. அதை வைத்துக்கொண்டுதான் அனைத்தையும் அறிய முற்படுகிறார்கள். இது அவர்களுக்கு இயல்பு. உலகைப் படைத்த பரமன் உயிர்களை உருவாக்கி அவற்றுக்கு அறிவையும் அளித்தான். அதற்குள் கருவியாக ஐந்து புலன்களையும் ஏற்படுத்தினான். கைகால் முதலிய கர்மேந்திரியங்களையும் உருவாக்கி அவற்றுக்கேற்ற செயல்களையும் வகுத்தான்.

அந்தப் பரமனின் மூச்சுத்தான் வேதம் என்பது.

அவனுடைய விருப்பத்தால் மகரிஷிகளின் மனத்தில் அது தோன்றியது. 'இப்படி நான்காக அமைந்த இந்த வேதம் ஒருவரால் ஆக்கப்பெற்றதன்று' என்பது நம் முன்னோர்களின் கொள்கையாகும். அனைத்தின் அறிவும் இவற்றில் புதைந்து கிடப்பதாகவும் நம்பு கிறோம்.

சிரியா, பாபிலோனிய, கிரேக்க அறிஞர்கள் வாழ்க் கையின் தத்துவங்களை அறிவதற்கு வெகு காலம் முன்பே நம் பாரத நாட்டு முனிவர்கள் தங்கள் அறி வாற்றலால் மிக உன்னத வேதாந்த உண்மைகளைக் கண்டு வெளிப்படுத்தினார்கள்.

பூமி, காற்று, தீ, நீர் என்று நான்காகப் பகுத்தார் பிளேட்டோ. கிரேக்க அறிஞர்களுக்கு ஐந்தாவது பொருளான ஆகாயத்தைப் பற்றி அதிகம் தெரிய வில்லை.

சரித்திர காலத்துக்கு முன்பே, வேதத்தின் அடிப் படையில் அமைந்த நம் பழப்பண்பாடும் நாகரிகமும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நன்கு செழித்திருந்தன. இந்திய முனிவரும் அவர்களுடைய சந்ததியாரும் வேதாந்தக் கருத்துக்களை உள்ளுணர்வின் மூலம் கண்டு உரைத்தார்கள்.

வேதத்தின் அடிப்படையிலேயே ஆத்ம தத்துவத்தை உருவாக்கினார்கள். இந்தப் பிரபஞ்சத்தின் மிக நுண்ணிய ரகசியங்களையும் விண்டுரைத்தார்கள். மேற் கத்திய அறிஞர்கள் பொருள்களின் தன்மையை ஆராய்ந்த போது, கிழக்கத்திய அறிஞர்கள் அந்தப் பொருள்களின் ஆதாரத் தத்துவங்களைக் கண்டு பிடித் தார்கள்.

ஒப்புமை இல்லாத வேதம், முனிவர்களுக்குப் புதிய ஞான ஒளியை வழங்கியது. இந்த ஞான ஒளியைப் பாரம்பரியமாக ஓதிக்காப்பாற்றி வந்திருக்கிறார்கள். இந்தச்சாதனைக்கு ஒப்பற்ற ஞாபகசக்தியும் திடகாத்திர மும் வேண்டும். இறைவன் அருளால் அவை அவர்களி டம் பூரணமாக இருந்தது.

உலக மக்களின் கட்டுப்பாடு சீர்குலையாமல் இருப்ப தற்கும் மனிதர்களின் நன்மைக்கும் ஆக மக்களிடையே தொழில் காரணமாகச் சில பாகுபாடுகள் ஏற்பட்டதை உணர்த்துகிறது வேதம்.

ஒருவர் தாழ்வு, ஒருவர் உயர்வு என்பதை இது உணர்த்தவில்லை. வேற்றுமை உணர்ச்சியை விட்டு

மானிடர் ஒருவருக்கொருவர் அன்புடன் இருக்க வேண்டும் என்பதையே வேதம் வலியுறுத்துகிறது.

‘‘உங்களில் உயர்ந்தவர் எனக்கருதி வேதியரிடமோ வேந்தரிடமோ மட்டுமே அன்பைச் செலுத்தாதீர்கள். அனைவரிடமும் அன்பைப் பொழியுங்கள். உடல் உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவரிடம் பேரன்பு காட்டுங்கள்’’ என்று அதர்வ வேதம் கூறுகிறது.

பண்டைய யுகங்களில் வேதத்தை ஓதுவதுதான் சிறந்த கல்வியாக இருந்தது. முனிவர்கள் வேதத்தைப் பயின்று அறிவைப் பரப்பினார்கள்.

வெகுகாலத்துக்கு வேதத்தை எழுதவே இல்லை. இயற்கையின் சூழலில் புனித வாழ்க்கை வாழ்ந்த இந்த முனிவர்கள் மிகவும் அறிவாளிகள்.

வேதகால முனிவர்கள் கட்டுப்பாட்டுடன் தவ வாழ்க்கை வாழ்ந்திருக்கிறார்கள். உள்ளமும் உடலும் செம்மையடையப் பிரம்ம கரியத்தைக் கடைப்பிடித்து துடன் புனிதமான எண்ணங்களையே எண்ணியும் பழகியிருக்கிறார்கள். மிகுந்த நம்பிக்கையுடன் ஆண்டவனிடம் சரணடைந்து அதனால் உள்ளுணர்வு பெற்றிருக்கிறார்கள்.

வாழ்க்கையின் பிரச்னைகளையும் பிறப்பு—இறப்பு என்ற நியதியையும் அவர்கள் ஏற்று பிறவாமைக்கான வழிகளையும் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் கண்ட உண்மை, நன்மைகள், அழகு, நியதிகள் ஆகியவை சாசுவதமானவையாகும்.

அவர்கள் எதையுமே ‘நடக்க முடியாதது’ என்று எண்ணவேயில்லை. எங்கும் எதிலும் வியாபித்திருக்கும் இறைவனை நம்பி வணங்கி வாழ்த்தி வாழ்ந்தார்கள்.

அனைவரையும் அவர்கள் சகோதரர்களாகவே எண்ணினார்கள். இதய பூர்வமாக உலகத்தவர்களுக்கெல்லாம் சேர்த்தே பிரார்த்தனை செய்தார்கள்.

சமாதி நிலையில் கூட அவர்கள் உள்ளுணர்வு உந்த வேதகானங்களை இயற்றியிருக்கிறார்கள். அவர்கள் எண்ணங்கள் விண்ணைப் போல் உயர்ந்தவை. எல்லா வகுப்பையும் சேர்ந்த முனிவர்கள் அப்போது இருந்துள்ளார்கள். வாழ்வின் ரகசியங்களை அவர்கள் தாங்கள் உணர்ந்தபடி தடங்கலின்றி உரைத்தார்கள்.

அறம், பொருள், இன்பம், வீடு இவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு, பிரம்மசரியம், கிருகஸ்தம், வானப்ரஸ்தம், துறவு என்ற நான்கு ஆசிரமங்களும் அடிக்கடி வேதங்களில் குறிக்கப்பட்டுள்ளன. எல்லாவிதமான கல்வித் துறைகளைப் பற்றிய விவரங்களையும் உலகின் உற்பத்தி, வாழ்வு, அழிவு மூன்றைப் பற்றியும் வேதத்தில் காணலாம்.

‘‘உலகம் முழுவதும் ஒரு குடும்பம்’’ (வஸுதைவ குடும்பகம்) என்ற கருத்தையும் அதில் காண்கிறோம்.

‘‘முனிவர்கள் உலகுக்கு நன்மை ஏற்பட விரும்பித் தீக்ஷை பூண்டு தவம் செய்தார்கள். அவர்களின் தியாகத்தால் நாடு செழித்தது. அதிலேயே ஒரு திருப்தி இருந்தது அவர்களுக்கு’’ என்கிறது அதர்வ வேதம்.

இயற்கைச் சக்திகளைக் கடவுளாக எண்ணிய இந்திய முனிவர்களைப்போல புராதன கிரேக்க—அறிஞர்களும் எண்ணி வந்தார்கள்.

எண்ணிறந்த முனிவர்கள் இருந்தாலும், கீழ்க்கண்டவர்கள் முக்கியமானவர்களாவார்கள். வசிஷ்டர், விசுவாமித்திரர், வாமதேவர், பரத்வாஜர், அத்ரி,

கண்வர், ஆங்கிரஸர், அதர்வா, தீர்த்ததமஸ்; பிருகு, ஜமதக்னி, காசியபர், கௌதமர், மேதாதிதி, மதுச்சந்தர்.

பெண் ரிஷிகளும் அந்தக் காலத்தில் பல வேத கானங்களை இயற்றியிருக்கிறார்கள். ஸ்கந்தா, விசுவரா, வாக், கோஷா, இந்த்ராணி போன்றோர்.

அத்ரியின் புதல்வி விசுவரா; ரிக் வேதத்தின் ஐந்தாவது மண்டலத்தின் 28-ம் சூக்தம் இவளுடையது. புரோகிதராகக் கூட இவள் தன் கடமையைச் செய்திருப்பதாக இந்தச் சூக்தம் கூறுகிறது.

சுகிச்வானின் புத்ரியான கோஷா பல வேத கானங்களைக் கண்டு உரைத்திருக்கிறாள்.

ஒப்புமை இல்லாத மதிப்பற்ற பாரம்பரியத்தை நம் ரிஷிகள் நமக்கு அளித்திருக்கிறார்கள். அவர்களைப் பற்றிய உண்மையான சரித்திரம் நமக்குத் தெரியவில்லையே! இந்த ரிஷிகள் தங்களைப் பற்றி எதுவும் எழுதி வைக்காவிட்டாலும் வேத உண்மைகளை வெளியிட்டதனால் இவர்கள் புகழுடன் வாழ்கிறார்கள்.

மக்களின் நன்மைக்காகக் கடவுள் பிரார்த்தனை, மனிதன் வாழ்க்கையில் ஏற்படும் இடையூறுகளை விலக்கும் உபாயங்கள், இவையும் வேதத்தில் உள்ளன.

'கேள்வி' அல்லது 'சுருதி' 'நினைவு' அல்லது 'ஸ்ம்ருதி' இப்படி வழியாக வரும் வேதம்' அந்த அந்தப் பிரிவினர் எங்கிருப்பினும் ஒரே மாதிரி ஓதப்படுவதை இன்றும் கேட்கலாம்.

பாரதத்தின் பண்பாட்டை அறிந்த ஆங்கிலேயரும் ஜெர்மானியரும் (வாரன் ஹேஸ்டிங்ஸ், மாக்ஸ்முல்லர்

போன்றோர்) நாலு வேதங்களிடத்தும் பெரிதும் ஈடுபாடு கொண்டார்கள்.

நம் முன்னோர் வேதத்தைப் பொருளுடன் பயின்று ஆத்ம ஞானிகளாகவும் எளிமையான முறையில் நீண்ட வாழ்வு வாழ்ந்து சிறந்த மனப்பான்மை உடையவர்களாகவுமே திகழ்ந்தார்கள்.

உபநிஷதத்தைத் தொகுத்தவர்கள் பிற்காலத்தவர்கள். வேத காலத்து ரிஷிகளுக்கும் இவர்களுக்கும் சம்பந்தமே இல்லை. ஆனாலும் உபநிஷத் வேதத்தை மதித்து அதன் கருத்துக்களை ஏற்றுக் கொள்கிறது. வேத கானங்களை இவர்கள் அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார்கள். சடங்குகளுக்கும் தியாகத்துக்கும் அதிக முக்கியத்துவம் அளிக்காமல் தியானத்துக்கே முதலிடம் அளிக்கிறது உபநிஷத்.

வேத காலத்தைப் போல் உபநிஷத் காலத்திலும் சாதி முக்கியம் பெறவில்லை.

வேத காலத்து ரிஷிகளுக்கும் உபநிஷத் கால ரிஷிகளுக்கும் முக்கிய வித்தியாசம்: முன்னவர் மனைவி மக்களுடன் வாழ்ந்தார்கள். உபநிஷத் காலத்தவர்கள் காடுகளில் தனிமையில் வாழ்ந்தார்கள். முண்டக உபநிஷத் இது பற்றித் தெளிவாகச் சொல்கிறது.

உலகப் பொருள்களில் இவர்கள் பற்றில்லாமல் வாழ்ந்தார்கள். பிப்பவாதர், ஆருணி, சாண்டில்யர், யாஞ்ஞவல்கயர் ஆகியோர் கடவுளைப் பற்றியும் ஆத்மா பற்றியும் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கி.பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கன்ஃபூஷியஸ், புத்தர், ஜாரதுஷ்ட்ரர் போன்றவர்கள் உலகத்துக்குப் புதிய கருத்துக்களைக் கூறினார்கள்.

விஞ்ஞானம் முடிகிற இடத்தில் மதம் தொடங்குகிறது என்பது உண்மை. ஆத்மிகப் புத்துணர்வு உண்டானால், பொருளையும் உடலையும் பற்றிய அறிவு மங்கும். உள்ளுணர்வின் உந்துதலே மிக உயர்ந்த விழிப்பு நிலை என்ற தத்துவத்தைப் பிளேட்டோவுக்கு வெகு காலத்துக்கு முன்பே யாஞ்ஞவல்கியர் உறுதிப்படுததியிருக்கிறார்.

புராண காலத்தில் ரிஷிகளின் வாழ்க்கை முறை மாறியது. உபநிஷத்துக்கள் பல அரிய வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றிச் சொல்கின்றன.

மனநிலை, சுவாசம், உலகசிருஷ்டி, சாவைவெல்லும் முறைகள், பூமியின் இயல்பு, ஆத்மாவின் தன்மை ஆகியவை பற்றி எல்லாம் உபநிஷத் அலசி ஆராய்கிறது. உலக பந்தத்திலிருந்து விடுபடத் தியானமே சிறந்த மார்க்கம் என்பதே உபநிஷத்துக்களின் சாரம்.

நம் வேதத்தை உலகத்தின் முதல் நூல் என்று நிச்சயமாகக் கூறலாம். அதைக் கண்டறிந்த நம் ரிஷிகளின் முன்னால் மேனாட்டுத் தத்துவ அறிஞர்கள் வெறும் குழந்தைகளைப் போன்றவர்களே!

இந்திய சரித்திரத்தைப் புதுப்பித்து எழுதும் முயற்சியில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனத்தைச் சேர்ந்த டாக்டர் ஜ்வாலாப்ரசாத் ஸிங்கால் என்பவர், 'ரிக் வேத காலம் ஐந்து லக்ஷம் வருஷங்களுக்கு முந்தியது' என்று தெரிவிக்கிறார்.

பூமியில் ஏற்படும் விஞ்ஞான ரீதியான பல மாறுதல்களைக் கவனித்துக் கணக்கிட்டே இந்த முடிவை அவர் சொல்கிறார்.

இப்போது காஷ்மீர் என்று நாம் குறிப்பிடும் பிரதேசம் உள் நாட்டுக் கடலாக இருந்தது. பூமியில் ஏற்பட்ட மாறுபாட்டால் கடல் நீர் வற்றியது; அந்த இடத்தில் ரிக் வேதத்தில் குறிப்பிடும் ஏழு நதிகளுடன் கூடிய 'ஸப்த ஸிந்து' என்ற இடம் தோன்றியது. இந்த மாற்றங்களை அந்த நாளில் ஹிந்துகுஷ் அடிவாரத்தி லிருந்த ஆசிரியர்கள் கண்டார்கள்.

இப்படி டாக்டர் ஸிங்கால் தனது ஆராய்ச்சிக் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

"பூர்விக ஆரியர்கள் தங்கள் இருப்பிடமாகக் கொண்ட ஸப்த ஸிந்துவைப் பற்றிய எண்ணிறந்த குறிப்புகள் கிடைக்கின்றன. சமீபத்தில் நம் நாடுகளிலும் வெளிநாடுகளிலும் புதை பொருள் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்துள்ள பொருள்களே என் முடிவுக்கு ஆதாரம்" என்று டாக்டர் ஸிங்கால் கூறுகிறார்.

"காஷ்மீர் பள்ளத்தாக்கிலுள்ள ஸோகன் நதியில் கண்டெடுத்திருக்கும் கற்காலக் கருவிகளையே அவர் முக்கியமாகக் கொண்டிருக்கிறார். இந்த சாதனங்கள் ஐந்து லட்சம் வருஷங்களுக்கு முந்தியவை" என்றும் குறிப்பிடுகிறார்.

வேத காலத்திலேயே கிணறுகளும், கால்வாய்களும் இருந்திருக்கின்றன. தண்ணீர் இறைக்கும் யந்திரத்தைப் பற்றிய செய்தி ரிக் வேதத்தில் இருக்கிறது.

ஆற்றைப் பசுவாகவும், வாய்க்காலைக் கன்றாகவும் அதர்வண வேதம் வருணிக்கிறது. 'தண்ணீரால் நனைந்த கோதுமை வயல் எங்களுக்குப் பசுவைப்போல் கறக்கட்டும்' என்று ரிக் வேதம் சொல்லுகிறது.

கௌசிக சூத்திரத்தில், ஆற்றிலிருந்து வயலுக்குப் பாயும் வாய்க்காலுக்குத் தண்ணீர் விடும் உற்சவத்தைப் பற்றிய விவரம் வருகிறது. ஆற்றிலிருந்து வாய்க்கால் தோன்றும் முகத்துவாரத்தில் பொன் தட்டை வைத்து, அதில் சிவப்பும் நீலமும் கலந்த நூலைக் கழுத்தில் கட்டிய தவளையை உட்கார வைத்து, அதை ஈரமண்ணால் மூடியபின் அதன் மேலாகச் செல்லும்படி தண்ணீரைத் திறந்து விடுவார்களாம்.

தௌமிய மகரிஷி தன் சீடனான ஆருணியை வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சச் சொல்லுகிறார். அவன் தண்ணீர் பாய்ச்சுகிறான். வரப்பு உடைந்து தண்ணீர் வெளியேறுகிறது. வரப்பில் ஆருணி தானே படுத்திருந்து தண்ணீர் வெளியேறாமல் தடுக்கின்றான்.'' என்கிறது பிருகதாரண்ய கோபநிஷத்.

கௌடில்யருடைய அர்த்தசாஸ்திரத்தில், பகையரசனின் மேல் படையெடுக்கும்போது அந்நாட்டு நீர் வசதிச் சாதனங்களை அழிக்கும்படி அவர் கூறியிருக்கிறார். தண்ணீர் பாய்ச்சுவதைப்பற்றிப் பல சட்டடங்களை அதில் காணலாம். நீர் வரியைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்.

நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்ட நிபுணர்களை 'ஜல ஸூத்ரதரர்' என்பார்கள். மௌரிய சந்திரகுப்தன் பல குளங்களையும் வாய்க்கால்களையும் வெட்டியிருக்கிறான். அவனுடைய பிரதிநிதியான புஷ்யமித்ரன் 'கிரிநார்' என்னும் இடத்தில் அழகிய குளத்தை வெட்டியிருக்கிறான்.

நமது பூங்காக் கலையிலும், அமைப்பு முறையை விருக்ஷாயுர் வேதம் சொல்லியிருக்கிறது.

பூங்காவின் நடுவில் பூஞ்செடிகளோ பழமரங்களோ இருக்கவேண்டுமாம். அவற்றை அடுத்து வரிசை வரிசையான மற்ற மரங்களை நடவேண்டுமாம். சில பூங்காக்களின் நடுவில் குளங்களை அமைப்பது உண்டு. ஆனால் இது அபூர்வமாகத்தான். பூங்காவைச் சுற்றிலும் அகழி இருக்கும். அகழியைச் சுற்றிலும் மரங்களுக்கு எருப்போல நன்மை பயக்கும் உயர்ந்து வளரும் மரங்களை நடுவார்கள். சில இடங்களில் மதிள் சுவர் எடுப்பதும் உண்டு' என்று 'மிருச்சகடிகை'யின் நான்காம் அங்கத்தில் சொல்லியிருக்கிறது.

## 4

வேதம் என்ற சொல் 'வித்' எனும் சொல்லிலிருந்து தோன்றியது என்பதையும், மறைந்து நிற்கும் பொருளை விளக்குவதால் அதற்கு 'மறை' என்ற பொருளும் உண்டு என்பதையும் முன்பே விளக்கியுள்ளேன்.

வேதங்கள் என்பது பேரறிவு நூல்களாகும். அடிப்படையான அனைத்தும் அவைகளில் கூறபபட்டுள்ளன.

அயம் ஆத்மா ப்ரும்மம்—இந்த ஆன்மாவே பிரம்மம்.

தத்வமஸி—அது நீயாக இருக்கின்றாய்.

பிரக்ஞானம் ப்ரும்மம்—உன் விழிப்பே ப்ரும்மம்.

அகம் ப்ரும்மாஸ்மி—கான் பிரம்மம் என்றெல்லாம் விளக்கப்பட்டிருக்கிறது.

ரிக், யஜுர், ஸாம, அதர்வணம் என்ற இந்நான்கு வேதங்களுக்கு ஆறு விதமான அங்கங்களும் நான்கு வித மான உப அங்கங்களும் கூறப்பட்டுள்ளன.

சிக்ஷை, வியாகரணம் கந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம் என்ற ஆறுவித அங்கங்களாகும்.

மீமாம்ஸம், நியாயம், புராணம், தர்மசாஸ்திரம் என்ற நான்கு வித உப அங்கங்களும் வேதத்தின் உண்மைப் பொருளை விளக்கிக் காட்டுபவையாக அமைந்துள்ளன.

இவை தவிர, உபவேதமென்று ஆயுர்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம் என்று சித்தர்கள் நூலில் காணப்படுகிறது.

தேவதைகளின் சக்திகளையும் அவற்றை வணங்கும் முறைகளையும் விளக்கிக் காட்டுகிறது—ரிக் வேதம்.

வேள்விகளையும், வேள்வி முறைகளையும் வகுத்துக் காட்டுபவைகளாக உள்ளன யஜுர் வேதத்தில். இவ்வேதத்தில் இரண்டு வகை காணப்படுகிறது. சுக்ல யஜுர்—வெளுப்பு, கிருஷ்ண யஜுர்—கறுப்பு.

கலைகளையும் கலை சம்பந்தமான விஷயங்களை அலசி ஆராய்ந்து தெளிவுறக் கூடிய உண்மைகளையும் விளக்கிக் கூறுகிறது ஸாமவேதம்.

'அதர்வா' என்னும் ரிஷியின் மூலம் தொடங்கியதாகத் தெரிகிறது. பலவிதமான ஆபத்துக்களைப் போக்கிக் கொள்ளவும் விரோத சக்திகளை அழிப்பதற்கும் பலவகை மந்திரங்களைக் கொண்டிருப்பதாகும்—அதர்வண வேதம்.

இந்நான்கு வேதங்களையும் பிரித்தருளிய வேத வியாசர், புராண இதிகாசங்களை ஐந்தாம் வேதம் என்று கூறிப்புகழ்கிறார்

வேதங்களும் உபநிடதங்களும் மிகப் பழங்கால முதற்கொண்டே இருந்து வந்துள்ளதென்பதை யாவரும் உணர்வர். அவற்றின் கருத்துக்களும், அர்த்தங்களும், தூய்மையையும், உண்மையையும், பரத்தின் தன்மை யையும் விளக்கிக் காட்ட வல்லவை.

தர்மப் பிரமாணங்கள் பதினான்கில் பிரதானமாயிருப் பவை, இந்நான்கு வேதங்களேயாகும்.

வேதங்களே அனைத்திற்கும் மூலாதாரமாக அமை கின்றது. அதன்-ஒலி-சப்தமே நம்முடைய நாடி நரம்பு களிலும், வெளி உலகிலும் ஏற்படக் கூடிய சலனங்களால் ஆத்ம பலமும், நலமும், உலக நலமும் உண்டு பண்ணச் செய்கிறது.

அர்த்த புஷ்டியான சப்தமும் இனிமையும் வேதத் திற்கு அளப்பரியதாகும், இன்றியமையாததாகவும் இருந்து வருகின்றன.

நமது மதத்திற்கு—அதாவது இந்து மதத்திற்கு உள்ள நேரான, .சீரான தர்ம நெறியே வேதங்களாகின் றன. அறக் கடலாகிய வேதத்தின்கண், அனைத்து அறிவும் அடங்கும்.

காவிய ரீதியிலும், சமூக, சமுதாய வாழ்வு முறை களையும் துல்லியமாகச் சொல்லியிருக்கின்ற அழகு, நன்னெறி உபதேசங்கள் யாவையும், விஞ்ஞானக் கருத்துக்களும் வேதத்தில் பொதிந்துள்ளதே அதன் சிறப்பம்சமாகும்.

அச்சிறப்பான வேத மந்திர சக்தியே எல்லா மனிதர் களையும் ஈர்க்கும் ஆற்றல் பெற்றுள்ளதாக அமைந் திருக்கின்றது. இம்மேலான வேதக் கருத்துக்களைக் காணும் பிறமதத்தினரும் வெளிநாட்டு அறிவாளிகளும்

ஆச்சரியப்பட்டு அவற்றினூடே மனதைச் செலுத்து கிறார்கள்.

> **''வேதத்தை விட்ட அறம் இல்லை; வேதத்தின்**
> **ஓதத்தரும் அறம் எல்லாம் உள; தர்க்க**
> **வாதத்தை விட்டு, மதிஞர் வளமுற**
> **வேதத்தை ஓதியே வீடு பெற்றாரே''**

என்று திருமூலரும்,

> **''வேதத்தின் உட்பொருள் மண்ணாசை மங்கையை விட்டுவிடப்**
> **போதித்த வன்மொழி கேட்டிலையோ?''**

என்று பட்டினத்தடிகளும் மிக அழகாகச் சொல்லியுள் ளார்கள்.

மனதைக் காத்து இறையருளைக் கொடுப்பது நல் மந்திரம் ஆகுமென்பர். மந்திரத்தால் மனம் காப்பாற்றப் படுகின்றது. மனதால் இறைவனை முழுதாக அறிய முடி கின்றது என்பது வேதவாக்கு. 'மந்' என்றால் மனம், 'த்ரா' என்றால் காப்பாற்றுதல் ஆகும்.

சித்தத்தில் – இறைவனை நினைத்து – தித்திக்கும் மந்திரம் பஞ்சாட்சரமாகும். சித்திக்கும் முக்திக்கும் அதுவே காரணமாகும்.

வேதத்தில் உள்ளவற்றை விவேகத்துடன் சொல்ப வர்களே வேதாந்திகளாவர். அவர்கள் அப்படி விளக்கு வதே வேதாந்தங்களாகும்.

வேதாந்தமே வேதத்தின் முடியெனப் பாராட்டப் பெறும் உபநிடதங்களைக் குறிக்கின்றது. உபநிடதம் என்பது வேதத்தின் உட்பிரிவேயாகும். வேதங்களின் வரிசையில் அந்தமாகத் தோன்றுவதால் வேதாந்தம் என்பர்.

வேதங்களை மந்திரப் பகுதி, பிராமணப் பகுதி, உப நிடதப் பகுதி என மூன்றாகப் பிரித்துச் சொல்வதுண்டு. இவற்றுள் உபநிடதமே முக்கியமானது. உபநிடதங்களில் அரிய பல கருத்துக்கள் காணப்படுகின்றன. அவைகள் பலவாய் இருந்த போதிலும் முக்கியமான சிலவற்றைத் தேர்ந்தெடுத்துப் பின்வரும் பகுதியில் விளக்கியுள்ளேன். அதைப் படித்து நான் பெற்ற இன்பத்தை நீங்களும் பெற வேண்டுமே!

வேதங்களைத் தழுவிய உபநிடதத் கருத்துக்களுக்குப் பலவிதமான உரைகள் முக்கியமான சிலரால் தான் எழுதப் பெற்றுள்ளது. குறிப்பாக ஆதிசங்கரர், நீலகண்ட சிவாச்சாரியர், கௌடபாதர், மெய்கண்டார் இவர்களைச் சொல்லலாம்.

"ஓம் காரத்தின் பிரிவெழுத்துக்களாகிய அகார, உகார, மகாரம் என்னும் மூன்றில், முதல் நின்ற அகாரம், ரிக் வேதத்தின் முதல் மந்திரமாகிய 'அக் நிமீளே" என்பதன் முதலிலும்,

இடை நின்ற உகாரமாவது, யஜுர் வேதத்தின் இடையிலுள்ள 'யோரிஸ் சமுத்திரோபந்து" என்பதன் நடுவிலும்,

கடை நின்ற மகாரமாவது, சாம வேதத்தில் கடைசியிலுள்ள 'சமாநம்பகம்' என்பதன் ஈற்றிலும் நின்று, மறைகள் யாவுமே 'ஓம்' என்னும் பிரணவ மொழியின் பொருளே என்பதனைத் தெளிவாக்குகின்றன" என்று உரை செய்துள்ளர். நீலகண்டசிவாச்சாரியார்.

"வேதங்கள் 'ஐயா' எனவோங்கி
ஆழ்ந்தகன்ற நுண்ணியனே?"

என்று வேத நாயகன் பெருமைதனை மணிவாசகப் பெருமான் பாடியுள்ளார்.

"விலையுயர்ந்த ரத்னமொன்று நம்மிடமிருந்தால் வீட்டிலே எங்கே வைப்போம்? வாசல் புற ரூமில் வைப் போமா? தோட்டத்தைச் சேர உள்ள ரூமில் வைப் போமா? ரொம்பவும் காபந்தாக மத்தியில் இருக்கிற ரூமில்—இரும்புப் பெட்டியில்தான் வைப்போம். அப்படியே வேதத்தில் ஜீவரத்னமான சிவநாமத்தை ரொம்பவும் ஜாக்கிரதைப்படுத்தி வைத்திருக்கிறது.

நாலில் மத்தி இரண்டாவது. நாலு வேதங்களில் இரண்டாவது யஜுஸ்(தைத்திரிய க்ருஷ்ண) யஜுர் வேதத்தில் மத்திய பாகம் அதன் நாலாவது காண்டம். அந்தக் காண்டத்தில் மத்தியம் ஐந்தாவது ப்ரச்னம். இதிலேதான் நடுவில் ஸ்ரீ ருத்ர ஸூக்தம் எனப்படுவதில் நடுநாயகமாக பஞ்சாக்ஷரம் வருகிறது. பஞ்சாக்ஷரத்துக்கு மையமாக 'சிவ' என்ற தவயக்ஷரம் இருக்கிறது.

உடம்மை மெய் என்கிறோம். அதிலே இருக்கிற பரமாத்வை மெய்ப்பொருள் என்பார்கள். ஸத் வஸ்து வேதாந்தத்தில் சொல்வதைத் திருவள்ளுவர் அப்படியே தமிழில் 'மெய்ப் பொருள்' என்கிறார். வேதங்களை யெல்லாம் ஒரு சரீரமாக—மெய்யாக வைத்துக் கொண் டால் அதில் உயிராக—மெய்ப் பொருளாக இருப்பது சிவ நாமா. உயிர் பரமாத்மா உள்ளது. ஹிருதயம் என்றால் அந்த ஹிருதயம் சரீரமத்தியில்தான் இருக்கிறது. இதைத்தான் ஞான சம்பந்தரும் சொல்கிறார்.

**"வேத நான்கிலும் மெய்ப் பொருளாவது**
**நாத(ன்) நாமம் நமச்சிவாயவே!"**

என்று ஒரு தடவை சென்னையில் ஸ்ரீ காஞ்சிப் பெரிய வர்கள் அருளுரை வழங்கியுள்ளார்கள்.

# 5

**வே**தத்தில் வேள்வி—யாகம்—வலியுறுத்தப்படுகிறது. வேள்விக்கு முக்கியம் அக்னியாகும். இதையே யக்ஞும் என்றும் சொல்வர். வேத மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு, அத்துடன் ஒரு காரியத்தையும் அக்கினி மூலமாகச் செய்வதுதான் யக்ஞும் எனப்படும்.

பரமாத்மாவிடமும், தேவதைகளிடமும் பிரீதி பூர்வமான உணர்ச்சியுடன் ஒரு முக வழிபாடாகச் செய்யப்படுகின்ற கர்மமே யக்ஞுமாகும். மனதிற்குள்ளாக, மானசீகமாக இருப்பது வாசிகமாக வாக்கில் வெளிப்படுவதோடு காயிகமாக சரீரத்தால் ஒரு கர்மாவோடு சம்பந்தப்பட்டு வருகின்றபோது, மனம், வாக்கு, காயம் என்ற மூன்றும் வேதத்தில் அர்ப்பணிக்கப்பட்டதாக ஆகிறதல்லவா! இந்த—இப்படிப்பட்ட—வேத கர்மாக்களில் முக்கியமானதுதான் யாகம் எனப்படுவதாகும்.

ஒவ்வொருவரும் அடைய வேண்டிய உயர்ந்த பதவிகளையும், பிற நன்மைகளையும் அடைவதற்கு அனுகூலமாக அமைந்துள்ள வேள்வி, சாதாரண வேள்வி என்றும் சோம வேள்வி என்றும் இரண்டு வகைப்படும்.

இவை தவிர, ஐம்பெரும் வேள்விகள் என்றும் காணப்படுகிறது. பிரம்ம வேள்வி, வேத வேள்வி, பிதுரு வேள்வி, பூத வேள்வி, மனித வேள்வி என்ற இவ்வைந்து பெரும் வேள்விகளையும் இல்வாழ்வான் செய்தொழுகக் கடமைப்பட்டவன் என்று மனுதர்ம சாஸ்திரம் விரித்துரைக்கிறது.

அக்னி ஸ்வரூப ஜோதியாகிய பரமாத்வான ஈஸ்வரனுக்காக மட்டும் இல்லாது, பலவித உபதேவதைகளுக்கும் ஆகூதிகளை அர்ப்பணம் செய்வதே யாகம். அநேக விதமான திரவியங்களையும் பிறவற்றையும் மந்திர பூர்வமாக அக்கினியில் போடுவதால், அவை முழுவதும் அக்கினிக்கே போய்ச் சேர்வதாக அர்த்தமில்லை.

அக்கினியை உத்தேசித்து மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு அதில் போடுவது மட்டும் தான் அக்கினி சம்பந்தப்பட்டதற்கு போய்ச் சேருகிறது.

அவை தவிர அதில் போடும் மற்றதெல்லாம் அக்கினி, தானே எடுத்துக் கொள்ளாமல், அவற்றின் காரத்தை அந்தந்த தேவதைகளுக்கு அனுப்பிவைக் கின்றது.

ஒரு தபால் பெட்டியில் பலவித ஊர்களுக்குப் போக வேண்டிய கடிதங்கள் போடப்படுன்றன என்றாலும், பின்னர் அவை பிரிக்கப்பட்டு உரிய இடத்திற்குத்தானே போய் சேருகின்றன. அதே போன்று தான் இங்கேயும்.

ஒரே பரமாத்மாவானவன் இப்பிரபஞ்ச வியாபகத்தைத் தொடர்ந்து நடத்தி வைக்க, பல தேவதை அதிகாரிகளை ஏற்படுத்தியுள்ளார். அப் பரமாத்மாவின் உத்திரவுப்படி பிரபஞ்ச சக்திகளை நிர்வாகம் செய்து வரும் தேவதைகளின் அனுக்கிரகத் தைப் பெற்றுத் தரவே அவர்களுக்குப் பிரியமான யாகங் களைச் செய்யவேண்டும் என்று வேதங்கள் விளம்பு கின்றன. ஆனால் மனம் செம்மையாகி, ஞானம் வந்த பிறகு இந்தச் சிறு தேவதைகளை மந்திர உபாசனை செய்தாகவேண்டும் என்கிற அவசியமில்லை நேராகவே உணர்ந்து செம்பொருள் பரமாத்மாவை உபாசித்து அருள் பெற முடியும் என்ற நம்பிக்கையும் நாம் பெற்றாக வேண்டும். இதைக் கொண்டுதான், 'மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டா' என்று அகத்தியர் கூறியுள்ளார்.

வேத காலங்களில் மகாமேதி மையத்தை அலங்கரித் தது 'யூபம்' என்ற ஸ்தம்பமே. ஒரு மண்மேடு. அதில் ஒருதூண். அதில்அமர்பவன் யமன் என்கிறது ரிக் வேதம்.

வேத கால யூபமே துவஜமாக மாறியது. முதலில் மரம், பிறகு கல்.

இக்கம்பத்தில் சக்கரம் ஏன்? சக்கரம் என்னும் சாதனம் ஏதோ பௌத்த மதத்திற்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல. வேத, பௌத்த, சமண மத, கலை தத்துவங்கள் எல்லாவற்றிலும் புதைந்துள்ளதே!

வேதம் இப்பிரபஞ்சத்தை ஒரு பிரும்மாண்ட சக்கரமாக உருவகிக்கிறது. பிரளயம் என்பதே ஊழியின் சீற்றத்தால் ஜல மண்டலம் பொங்கி, கனவேகமாய்ச் சுழன்று சக்கர ரூபம் கொள்ளுதலை 'ஜலோர்மி சக்கரம்' என்றார்கள்.

சம்சார சாகரம் என்ற வாழ்க்கையைக்கூட பவ சக்கரம், கர்ம சக்கரம், கால சக்கரம், தர்ம சக்கரம் என்றுதான் பிரித்தார்கள்.

குயவன் சிருஷ்டிகளுக்குக் கருவி சக்கரம். நூல் நூற்பது சர்க்கா என்னும் சக்கரம். மனிதன் நரம்பு மண்டலங்களில் ஆதார மூல சக்கரம்—இப்படி சிருஷ்டிக்கு மூலமே சக்கரமாய் விளங்குகிறது.

ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனைக் காட்ட சக்கரத்திலும் மேலான வஸ்து உள்ளதா? சமண மதத்தலும் ஜைன ஸ்தூபங்களில் தெய்வாம்ச நிலையில் சக்கரம் உள்ளது. அஷ்ட மங்களங்கள் கூடிய ஒரு தீர்த்தங்கரர் உருவை சக்கர ஸ்தம்பம் சூழ்ந்ததாகச் சிற்பம் உள்ளது. ஸ்வஸ்திகா ஒரு சக்கரத்தின் தழுவலே. பரந்தாமன் உலகை இயக்க கையில் ஏந்தியிருப்பது சுதர்சன் சக்கரமே!

கோனார்ச் சூரியன் ஆலயம் அவன் சஞ்சாரத்தைக் காட்ட, பெருஞ் சக்கரங்கள் கோயிலை இழுப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. தமிழகத்தில் சோழர்கள் தாங்கள் நிறுவிய ஆலயங்களில் தேர் மண்டபம் கட்டினார்கள்.

கடோபநிஷத்தில் வரும் 'ஆத்மானம் ரதினம் விதி......'' நமக்குப் பழக்கமானது. ஆனால் புத்தரின் 'சம்யுத்த நீ காய'வில் வரும்

'ரதோ அகுஜனோ நாம
தர்ம சக்கேதி சம்யுதோ'

என்பது நமக்குத் தெரியாத விஷயமாக இருந்தாலும் இரண்டின் கருத்துகளும்—அப்படியே—ஒன்றுதான்.

நேர்ப்பாதை, நிர்ப்பய திசை, தர்ம சக்கர ரதம்— உடையவன் நிர்வாண நிலை எய்துகிறான் என்பதே யாகும். தன் முதல் உபதேசத்திற்குப் புத்தர் இட்ட பெயர் ''தர்ம சக்கர பிரவர்த்தன சூத்ரம்''

நிர்வாண தத்வம் உணர்த்த புத்தர் முதற் பிரசங்கம் நிகழ்த்திய இடம் சாரநாத். பௌத்தர்களுக்கு மகா பவித்ரமான இவ்விடம், அருகே மகாஸ்மகானம் என்ற காசி, சமண 11-வது தீர்த்தங்கரர் பரிநிர்வாணம் அடைந்த கிங்பூர் அமைந்து விட்டதால் இப்பிராந்தியமே தர்மபூமி ஆகியது.

ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு குறிக்கோளால் புகழுண்டு. பராசீகத்திற்குப் பரிசுத்தம், கிரேக்கர்களுக்கு அழகு, ரோமாபுரியினருக்குச் சட்டம், கால்தியர்களுக்கு விஞ்ஞானம், நம் பாரத நாட்டிற்கு என்ன? தர்மமே!

இதே போல் ஆட்சியிலும் சில முறைகளுண்டு. சாய விஜயம்—ஆயுதபலம், லோப விஜயம்—பேராசை, அசுர விஜயம்—பலாத்காரம், வன்முறை தரம் விஜயம் என்பவைகளில் கடைசி முறையைக் கையாண்டவன் அசோகன். இப்பரந்த மண்ணில் இவன் சக்கரத் வஜம் படபடத்தது. நம் இந்திய தேசீயக் கொடியில் காணப் படுவதும் இந்த அசோகச் சக்கரமே!

ர்
சக்கரவர்த்தி என்ற சொல்லே சக்கரத்தின் தொடர்பைக் காட்டுகிறதே! அமராவதி சிற்பங்களில் ஒரு குடை, ஒரு சக்கரம்—ஒரு சக்கரவர்த்தியின் சின்னமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

பர்கூத் பிரசேனஜித் தூணில் ஒரு மண்டபம். அதில் குடையுடன் கூடிய தர்ம சக்கரத்தை வணங்குவது உள்ளது. இதே பர்கூத்தில் மற்றொரு இடம். நான்கு சிம்மங்களின் மேல் ஒரு சக்கரம். இரண்டு ஆண் பாலர். இரண்டு பெண்கள் வணங்குவதாகக் காணப்படுகிறது.

புராதன சிந்து வெளி அகழாய்வுகளில் வெளிப்பட்ட சில முத்திரைகளில் சக்கரம் பொறிக்கப்பட்டிருந்தது. அசோக தர்ம சக்கரத்தில் சக்கர வாளமண்டலப் பிராணிகளைக் கொண்ட நாணயங்களும் கிடைத்தன. இரண்டாவது சந்திரகுப்தன் நாணயங்களின் முத்திரை சக்கரமே!

முதல் வேதமாகிய ரிக் வேதத்தில் உருத்திரன் என்ற பெயரே வேத நாயகனான முழு முதற்கடவுளுக்குச் சிறந்த பெயராக அமைக்கப் பெற்று அடுத்தடுத்து ஓதப் படுகின்றது. 'ருத்' என்றால் துன்பம். 'த்ராவயதி' என்றால் ஓட்டுகின்றவன். அதனால் ருத்திராவயதி என்றால் துன்பத்தை ஓட்டுகிறவன் என்றாகிறதல்லவா!

இது பற்றி யஜுர், சாம, அதர்வண மறைகளுக்குப் பொதுவாகவும், ரிக் மாமறைக்குச் சிறப்பாகவும் நிருத்தம் வகுத்தருளிய 'யாங்க-முனிவர்' 'அந்தரிட்ச' என்னும் தேவதைகளைக் குறித்து விட்டு, வீட்டு நெறியைக் காட்டும் இடத்தின்கண் 'தேவதா-கார்வ பௌமம்...' என்ற பொருளுக்குச் 'சிவ' என்ற சொல்லையே இடு குறிப் பெயராக்கி அமைத்துள்ளார் என்பது இங்கு கவனிக்கத்தக்கதாகும்.

''மன்னிய வாய்மொழியாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே !''

நிலையான பெருமையுடைய வேதவாக்காலும், ஓதுபவர்களின் ஸ்வரத்தின் உள்ளே இனிய நாதரூபமாக இருக்கின்ற நாதப்பிரம்மமான சிவபெருமானை, சூட்சமத்தின்-பிரவணம்-துணை கொண்டு தூல உலகை சிருட்டிக்கின்ற பிரம்மதேவன் எப்போது நினைத்துக் கொண்டிருக்கும் அச்சிவனை, நம்மால் எளிதாக உணர முடியுமா என்கிறார் திருமூலர்.

''ஓம்' என்னும் அழியாத பொருளைப்பற்றி மாண்டுக்ய உபநிடதத்தில் கூறப்படுவதாவது, 'இதுவே எல்லாம், இதன் விளக்கமே இதுதான். இறந்த காலம், வருங்காலம், நிகழ்காலம் ஆகிய மூன்று காலங்களையும் கடந்து நிற்பதும், நிற்க வல்லதும் 'ஓங்காரமே'' என்கிறது.

இம்மாண்டுக்கிய உபநிடதத்திற்கு 'கௌடபாதர்' எழுதிய காரிகையில், எல்லா உயர்களின் நெஞ்சத்திலும், சிவன் ஓங்காரமாகவே ஓங்கி நிற்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

எல்லாப் பிறப்பிலும் உயிராய் காணப்படுகின்ற இறைவனே, எல்லாப் பிறப்பும் பெற்று இளைத்தேன். இம்மானிடப் பிறவியில்தான் உம்மைக் காண்கின்ற பெரும் பாக்கியத்தைப் பெற்றுத்தர முடிந்தது என்று பரமேஸ்வரனை நோக்கி மணிவாசகப் பெருமானும் பாடியுள்ளார்.

சுவேதாஸ்வர உபநிடதம் சிவதத்துவ வழிபாட்டின் திறவு கோலாகும். சிவனைப் பற்றிய திருநாமங்களும்

பெருமைகளும் சுக்லயஜுர் வேதத்தில் நிறைந்து காணப் படுகின்றது. 'நம சிவாய சிவதராயச' என்று யஜுர் வேதத்தில் கூறப்பட்டுள்ளது.

இவ்வுலகில் உள்ள அனைத்தும் ஈசனாகிய சிவபிரானின் அம்சமே. அவனே ஒவ்வொரு சமயமாக வும், ஒப்பில்லா சூரிய, சந்திரனாகவும், பெரும் காற்றாக வும், குளிர்ந்த மழையாகவும், திருமாலாகவும் நிற்பான். அவன் வேதமாகவும், வேராகவும், விண்ணாகவும், மண்ணாகவும், ஒளியாகவும், இருளாகவும், ஒலியாகவும் பரந்து படர்ந்து விரிந்துள்ளான் என்பதைப் பற்றி திருக்கயிலைப் போற்றி திருத்தாண்டகத்திலே சிறப் பித்துக் கூறப்பட்டுள்ளது.

**''வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி**
**மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி**
**ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி**
**ஓவாத சுத்தத் தொளியே போற்றி**
**ஆற்றாகி அங்கே யமர்ந்தாய் போற்றி**
**ஆறங்கம் நல்வேதம் ஆனாய் போற்றி**
**காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி**
**கயிலை மலையானே போற்றி ! போற்றி!''**

என்பதனை உணர்ந்து நோக்கிடல் வேண்டும்.

வைணவ தத்துவத்தில் வருகின்ற 'ஈஸ்வரன்' என்ற உண்மைப் பொருளே பகவான் ஆகிறது. பகவான் என்ற சொல்லில் ''ஞானம், சக்தி, பலம், ஐஸ்வரியம், வீரியம், தேஜஸ்'' என்ற ஆறுவகைக் குணங்களுக்கும் 'பகம்' என்று பெயர். ஆதலால் பகவான் இந்த ஆறு குணங் களையும் உடையவன் எனப் பொருளாகிறதல்லவா! வைணவ சமயக் கருத்துப்படி ஈஸ்வரன் இந்த ஆறு வித குணங்களையும் கொண்டவனாகின்றான்.

வேதங்களிலும், வேதாந்தங்களிலும் சிவபிரான் ஒருவரே பரப்பிரம்மம்; பரம்பொருள், சதுர்த்தப் பொருள் என்று வருகின்றன.

அவரே தியானிக்கத்நக்க தகைமை உடையவர் என்று அதர் வசிகை உப நிடதம் கூறுகின்றது. மாண்டுக்கிய உபநிடமும் இதனையே வற்புறுத்தி—

**''ப்ரத்யஸாரம் ப்ரபஞ்சோ பஸமம்**
**சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் அங்யந்தே''**

என்று விளம்புகின்றது.

பரமபதி சிவபெருமான் ஒருவரே என்று வேதங்கள் உரைக்கின்ற பாடலாவது

**''அளித்திடல் காத்திடல் அடுதல் மெய்யுணர்**
**ஒளித்திடல் பொருள் உதவலே எனக்**
**கிளத்திடு செயல்புரி கின்ற நீலமார்**
**களத்தினன் பதியெனக் கழலும் வேதமே!''**

மேலும் சவேதாஸ்வா உபநிடதத்தின் சுருதியாக உள்ள கருத்தே 'சிவ பெருமான் அருளின்றி எவர்க்கும் பிறவிப் பிணி யாராலும் போக்க முடியாது' என்பதாகும்.

மாண்டுக்ய உபநிடதத்தில் 'ஓம்' என்ற பிரணவ ஸ்வரூபத்தைத் தீர்மானம் செய்கின்ற இடத்தில் அது மூன்று நிலைகளையும் தாண்டிப் பிரபஞ்சம் ஒடுங்கி லயிக்கும் இடமே—சிவம் என்கிறது. அதுவே உயர்ந்த இடம் என்பது அத்வைதக் கருத்தாகிறது.

எவன் இதை அறிந்தவனோ, அவனே யாவும் அறிந்தவன்; என்று தெளிவுபடக் கூறியுள்ள அத்வைத மான நிலையையும் எண்ணிப் பார்த்திட வேண்டும்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கிலும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே''

என்று பாடியுள்ளாரே!

உலகம் யாவும் பரமாத்ம ஸ்வரூபமாகவே இருக்கிற தென்றால், நாமும் பரமாத்ம ஸ்வரூபமே என்பதை அனுபவித்துப் பார்த்தால்தான் புரியும். இப்படிப் பார்க்கும் முறையைத் தான் தியானம் என்பர்.

தியானம் வேறு, பக்தி வேறு என்று கொள்ளலாம். பக்தியினால் ஏற்படும் பலன் யாவரும் அடையக் கூடியதே. தியானத்தினால் ஏற்படுகின்ற பலன் மிகச் சிலருக்கேதான் கிட்டும். பக்தியுடன் கூடிய தியான நிலையை உணர்ந்தே நம் பெரியோர்கள் பலரும் அருந் தவமியற்றிச் சிவஞானத்தை சிவயோகத்தை உணர்ந் தனுபவித்தார்கள்.

## 6

கரும மார்க்கத்தில் பற்றுள்ளவர்கள் வேதத்தில் கூறப்பட்ட யாகம் முதலிய கருமங்களைச் சரிவரச் செய்து வருவதால் மட்டுமே மரணத்தை வெல்லமுடியும். கருவழியினால் மாத்திரமே மோட்சம் என்ற அழியா நிலையை எய்துதல் கூடும் என்று நம்புகிறார்கள்.

சிலர் மோஹத்தையே மிருத்யு—மரணம்—என்று கூறுவர்.

இவை இரண்டுமே சரியாகாது. மரணம் என்பது நழுவிவிடுதல் தவறிவிடுதலேயாகும். இவ்வாறு என்றும்

வழுவாது தவறாது நிலைத்து நிற்பதே அழிவற்ற மோட்ச நிலையாகும்.

எது ஒன்றையும் செய்தாலோ, செய்யத் தவறுவதாலோ மரணம் என்பது நிகழ்வதில்லை. நாம் இறைத் தன்மை பெற்றவர்கள். 'சத்சித் ஆனந்தம்' என்ற நிலைகளே நம்முடைய நிலைகளாம். இதனை மறவாது வாழ்தலே நமக்கு இயல்பான வாழ்க்கையாகின்றது. இதனை மறத்தலே மரணம்.

நான் ஞானத்திலே நிலைபெற்றவன் என்ற ஆழ்ந்த நிச்சயத்தினின்றும் வழுவி, நான் என்பது இவ்வுடல், இவர்க்கு மகனாய், இவளுக்குக் கணவனாய் இந்த ஊரில் பிறந்தவன். நான் இந்த வகுப்பைச் சேர்ந்தவன் என்ற நினைவுகள் எல்லாம் இந்த பெருந் தவற்றுக்கு சான்று கூறுவனவாம்.

ஆக அக்ஞானமே பிறப்பு இறப்பு ஆகும். அக்ஞானரே சம்சாரத் தளை. ஞான நிலையே அழிவற்ற வீட்டுப் பேறு ஆகும்.

"நானே பிரமம் என்ற அறிவே விடுதலை; அதனை மறத்தலே சம்சாரத்திற் கட்டுப்படுதலாகும்" என்ற கருத்து பிருஹதாரண்யக உபநிஷத் தொடங்கி எல்லா உபநிஷத்துக்களிலும் பிரம்ம சூத்திரத்திலும் பகவத்கீதையிலும் மிகத் தெளிவாக வற்புறுத்தப் பெற்றுள்ளதே!

ஸநர்ஸுஜாதரும் இதே கருத்தை மிகத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் ஒரு நிகழ்ச்சி. இல்லறம் நடத்தி வந்த பெருங் கல்வியறிவு அமையப் பெற்ற உயர்ந்தோர் அறுவர், அசுவபதிகைகயன் என்ற அரசனிடம் பிரம்ம ஞானம் பெற விழைகின்றனர். அம்

மன்னன் வைசுவானா பிரம்மத்தின் தத்துவத்தைத் தெளிவாக உபதேசிக்கிறான்.

அதன் முடிவில் கருமம் புரிவது பற்றி ஓர் உயர்ந்த குறிப்பினைக் கிருஹஸ்தர்களாகிய சீடர்களுக்குத் தரு கின்றான்.

பிரம்மத்தின் தத்துவமறிந்த ஞானி செய்யும் அக்னி ஹோத்திரம் எல்லா உலகங்களிலும் எவ்வுயிர்களிடத்தும் எங்கும் உள்ள ஆன்மாவிடத்தும் செய்யப்பட்டதா கின்றது. அவனுடைய பாவம் எல்லாம் நெருப்பில் இடப் பட்ட உலர்ந்த புல்லைப்போல் மிச்சமின்றி எரிக்கப் பட்டு விடுகின்றன என்று விளக்கினான்.

ஒரு முறை வேதங்கள் ஆண்டவனைத் தேடி அடைய முனைந்தன. இம்முயற்சியில் வேதச் சொற் களோடு மனமும் ஈடுபட்டது. தம்மால் இயன்ற அளவு சொற்களும் மனமும் இறைவனைத் தேடித் தேடி அலைந்தன. ஆயின் முயற்சி வெற்றி பெறவில்லை. ஆண்டவனைக் காணாமலேயே இவை ஏமாற்றத்துடன் திரும்பிவிட்டன. ஏன் சொற்களால் மனத்தால் பரம் பொருளை அடைய முடியவில்லை?

பரம் பொருள் என்பது ஆனந்தம் எனும் பேருணர்வு. இவ்வுணர்ச்சி உணர்வதால் மாத்திரமே அறியக்கூடும். சொற்களால் வருணித்துக் காட்ட முடியாது. மனத்தால் கற்பனை செய்து பார்க்கவும் இயலாது. இதை உணர்த் துவது தைத்திரீய உபநிடதம்.

பிரம்மம் என்பது ஆனந்த வடிவினது. அதை உணர்ந்த பிறகு சாதகனுக்கு அச்சம் என்பதே தோன் றாது. இறைவனை அறிந்தபின் தேவராம் பாடிய

அப்பரும்,

''அஞ்சுவது யாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை''

என்று கூறியுள்ளாரே!

ஆகவே பிரம்மம் என்பது சொற்களுக்கு அப்பாற் பட்ட மௌனமே. மனத்தாலும் உணரமுடியாத மோனப் பெரும் வெளியே.

வேதம் என்பது அறிவு. இது பிரம்மத்தினின்றும் பிறந்ததே! வேதமாகிய அறிவுக்கும் உற்பத்தித் தான மாக விளங்கும் பிரம்மம் அறிவுப் பிழம்பாகும். ஒளிமய மான அறிவின் திரட்சியே பிரம்மம்.

இக்கருத்தின்படி நான்கு வேதங்களும் 'அனந்தா வை வேதா' என்று முடிவில்லாமல் ஞாலத்தினும் மாணப் பெரிதாக விரிந்து கிடக்கும் வேதங்களும்—இவ்வறிவுப் பிழம்பினின்றும் தெறித்து ஓடுகிற பொரியே! ஆகவே தான் வேதங்கள் முயன்றும் இறைவனது ஒரு குணத்தை யும் முழுவதாக வருணிக்க முடியாமல் தோல்வியுறு கின்றன என்று நிகமாந்த தேசிகனும் கூறினார்.

ஆக, ஞான மார்க்கத்தில் அடிவைத்துச் செல்லும் சாதகன், வேதங்களால் பெறத்தக்க பயனையும் அறிய வேண்டும். வேதங்களால் எதைப் பெற முடியாது என்ப தனையும் உணரவேண்டும்.

வேதங்கற்றவன் பாவச் செயல் புரிந்தால் அவனை, அவன் பயின்ற வேதங்கள் தீவினைப் பயனிலிருந்தும் காப்பதில்லை. பாபகாரியம் செய்தவனை வாழ்க்கை யின் இறுதியில்—அவன் அலமந்த காலத்தில்—உதவி யைத் தேடிக் கதறும் கதியற்ற நேரத்தில் வேதங்கள் தவிக்க விட்டுப் பறந்தோடிவிடும்.

வேதங்களைக் கற்றும் ஆன்ம உறுதியற்றவனை— போலி வாழ்க்கையில் ஈடுபட்டு மற்றவர்களை ஏமாற்றும் வித்தையில் தேர்ந்த இவனை—மாயாவி என்பர். வேதம் படித்த பயனெல்லாம் துன்மார்க்கங்களுக்கு இறுதியில் பயன்படாது.

புலன்களால் உணரப்படும் உலகம் அதனைப் படைத்த பிரம்மத்தின் பல கூறுகளைத் தன்னகத்தே கொண்டதாய் இருக்கிறது. சந்தனக் கட்டையிலிருந்து பிறந்த சந்தன விழுது அதன் மணத்தையே கொண்டு விளங்குகின்றதல்லவா ?

வேதங்கள் உலகப் பொருள்களைச் சுட்டிக் காட்டிக் காட்டியே பிரம்மத்தின் தன்மையை விளக்குகின்றன. அதற்கு மேலும் ஒரு படி சென்று வேதங்கள் 'பிரம்மம் இவற்றில் அடங்கிவிடும் ஒன்றல்ல; புலன்களால் அறியப் படும் உலகத்திற்கு மேற்பட்டதாக அதனை உணர வேண்டும்' என்றும் கொடி காட்டிவிடும்.

வேதங்கள் புலன்களுக்குப் பொருளாகும் உலகத்தின் வருணனையிலேயே பெரும்பாலும் ஈடுபட்டிருக்கும். அதனால்தான் தேர்த்தட்டிலிருந்து கொண்டு கண்ணனும்,

**'த்னாகுண்யா விஷயாவேதா'**

என்று உபதேசித்துள்ளான்.

வேதத்தின் கருமகாண்டம் உபாதிகளுக்கு உட்பட்ட பிரம்மத்தை மட்டுமே விளக்கி நிற்க, வேதாந்த பாதம்— உபநிடதங்கள் உபாதிகளற்ற பரப் பிரம்மத்தைச் சுட்டி உபகரிக்கும்.

வேதங்களால் பிரம்மத்தை உள்ளபடி விளக்கிக் காட்டுவது இயலாது என்பதைப் பின்னால் வந்த பெரும்

பக்தர்கள் நன்கு உணர்ந்து தமது பாடல்களில் இக் கருத்தை அமைத்துப் பாடியிருக்கிறார்கள்.

இதே கருத்தினை காஞ்சியில் தோன்றிய மூககவியும் தத்து மூகபஞ்சகதி என்ற அழகிய நூலில் அமைத்துப் பாடுவார்.

**''பாண்டித்தியம் பரமேஸ்வரி ஸ்துதிவிதௌ நைவாஸ்ர யந்தே கிராம் ।**
**வைரிஞ்சான்யபி கும் பனானி விகலித் கர்வாணி சர்வாணி ।।''**

''தேவி உன்னை முறைப்படித் தோத்திரம் செய்யும் முயற்சியில் பிரம்ம தேவனின் பாடலாகிய வேதமும் தோற்றுப் போய்த் தனது கருவம் கழல நிற்கின்றது'' என்பதே இதன் பொருளாகும்.

இத்தகைய பரப்பிரம்மத்தை நாம் உணர்ந்தறிய வேதாந்த நூல்களைத் தவிர வேறு சாதனம் இல்லை.

வேதத்தின் அத்தியயனம், அதில் கூறப்பட்ட யாகம் முதலானவற்றைச் செய்வதும் தூய்மையாக்குவதுடன் ஈசனின் வடிவத்தை நமக்கு ஒரளவு காட்டித் தருவன. ஆயின் இவற்றைக் காமியக் கருமமாகச் செய்யாமல் இறைவனுக்கு என்ற உள்ளப் பாங்குடன் செய்தால் இவை பாவங்களை அழித்து சாதகனை ஞானியாகச் செய்து விடும்.

'ததந்த்தம்' என்ற பாவனையுடன் யாகம் முதலிய வைதீக கருமங்களைச் செய்வதால் மட்டுமே பந்தங்கள் விலகி விடுதலை கிடைக்கின்றது.

'எனக்காக' என்ற எண்ணத்துடன் உடல் சம்பந்த மான புலன்கள் தொடர்புள்ள பயன்களை விரும்பிச் செய்யப்படும் வைதீக கருமங்கள் அவனை சுவர்க்கம்

புகுவித்து இன்பபோகங்களை எல்லாம் துய்க்கச் செய்யும். நினைவிருக்கும்; அது பிரம்மத்திடம் அழைத்துச் செல்லாது. அதற்குப் பதிலாக-அப்புண்ணியப் பலன்கள் முடிவில்-மறுபடியும் சம்சாரத்திலேயே அழுத்திவிடும்.

புலன்களுக்கு இலக்காகும் பிரபஞ்சம் எல்லாம் தவத்தில் நின்றே பிறந்தது. பரப்பிரம்மம் உலகத்தை ஆக்க உறுதி கொண்ட பொழுது 'அது தவம் செய்தது. தவத்தால் வளர்ச்சி பெற்றது. பின் அதினின்றும் எல்லாப் பொருள்களும் தோன்றின' என்று உபநிடதங்கள் கூறும்.

பிரமத்தை அறிதல் ஏன் இத்தனை கடினமாயிருக்க வேண்டும்? இதற்கு இரு காரணங்களைக் கூறலாம். புலன்களும் மனமும் அவித்தையின் தூண்டுதலால் புறப் பொருட்களில் ஈடுபட்டு அவை தரும் இன்பத்தையே நாடும் இயல்புடையன. புலன்கள் புறப்பொருட்களில் ஈடுபட்டே இயல்வதற்குக் காரணம் படைப்போன் அவைகளை வெளி நோக்குபவையாகவே படைத்தது தான் என்று கடோபநிடதமே குறை கூறும்.

புறத்தை நோக்கித் தொழில் புரியும் தன்மையுடனே படைக்கப்பட்ட இப்புலன்கள் உள்ளே உறையும் ஆன்மாவை பார்க்க விழைவதில்லை என்பது இயற்கையே.

இரண்டாவது காரணம் பிரம்ம நிர்க்குண நிராகாரமாக இருப்பதால் அதனை அறிவது அருமையிலும் அருமையே. ''அனுரேஷ தர்ம. இது சூட்சுமமான ஒரு தத்துவம்'' என்று யமதர்மராஜனும் நசிகேதனுக்கு இது பற்றியே உபதேசித்தான்.

அக்காலத்தில் யாகங்களைச் செய்தது இக்காலத்தில் வணிகர் செய்யும் வியாபார முயற்சியை ஒத்ததே! இது பற்றியே, அதிகமாய்ப் படித்து விரிவாக எதனையும் எடுத்துரைப்பவனையே உலகம் பிராம்மணன் என்று

நினைக்கலாம். ஆனால் சத்தியத்தினின்றும் சிறிதும் பிறழாது வாழ்க்கை நடத்துவோனே பிராமணன் ஆவான்.

பிராமணன் என்பவன் பிரமத்தைப் பார்ப்பவன். ஆகவேதான் தமிழில் பார்ப்பான் என்ற உயர்ந்த சொல் இப்பொருளில் சங்க காலந் தொட்டு வழங்கி வருகிறது. பிரமத்தை அறிய நேரடியாக உதவாத சாதனங்களாகிய படிப்பு, பேச்சு முதலியவைகளை மட்டும் அமைத்துக் கொண்டவன் பிராம்மணனாகமாட்டான்.

உள்ளத் தூய்மையைத் தனக்கென அமைத்துக் கொண்டு வாய்மை எனும் அறம் பிறழாமல் வாழும் திட்ப முடையவனே பிராமணன் என்பது உயர்ந்த உபதேசமா கின்றது. வேதத்தைக் கற்பவன் பிராமணன். பிராமணக் குடியில் பிறந்தவன் பிராமணன் என்றெல்லாம் மக்கள் கருதுகின்றனர். அது சரியாகுமா?

எவன் சத்தியம் பிறழாது வாழ்கின்றானோ அவனே பிராம்மணன் எனப்படுவான் என்பது சுநத்சுஜாதரின் முடிவாகும். பிராம்மணர் வேத பாடத்தை இடையறாமல் பயின்று வருவதோடு, அதை மற்றோர்க்குக் கற்பிக்கவும் வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்வாத்யாய ப்ரவசனாப்யாம் ந ப்ரமதிதஷ்யம் என்று தைத்திரீய உபநிடமும் கூறும். கற்றலும் கற்பித்த லும் அது தொழில். அந்தணரின் இரு கடமைகளாகும். அத்துடன் உள்ளத்தால் பொய்யாது ஒழுகுபவனே பிராம்மணன். சத்தியம் என்பதே பிராம்மணனின் இலக்கணம். சத்தியம் என்பது சொல்லைக் குறித்த வாய்மை மட்டுமல்ல. அது உள்ளத்தைக் குறித்த உண்மையுமாகும். இச்சத்தியம் அமையப் பெற்றவன் வேறு குலத்தில் பிறந்திடினும் பிராம்மணனே. இது பிறழ்ந்தவன் பிராம்மண குலத்தில் தோன்றிடினும்

அவன் பிராம்மணனாக மாட்டான் என்றே உபநிடதம் சொல்கிறது. வேறு குலத்தில் பிறந்தோர்க்கும் ஆன்மீக ஏணியின் உச்சிக்கு ஏற வாய்ப்பு உண்டு. உள்ளப் பாங்கினைத் தூயதாக்கி அறத்தாறு வாழப் பழகுவதால் மட்டுமே மனிதன் உயர்கின்றான்.

வேதத்தால் பிரம்மத்தை அறிய முடியாது என்ற கொள்கையை ஞான நூல்கள் அனைத்துமே வற் புறுத்தும். வேதங்கள் முக்குணங்களின் எல்லைக்குள் கட்டுப்பட்டு நிற்பன.

'மெய்ப் பொருளைக் காண விரும்பினால் நீ முக்குணங்களைத் தாண்டி அப்பாற் செல்ல வேண்டும்' என்பான் கீதாசிரியன்.

''த்ரை குண்ய விஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ
பவார்ஜீன''

என்பதே கண்ணன் வாக்கு.

இவ்வாறு உபாசனை செய்து வருவோனுக்கு ருஒ நாள் பரம்பொருள் கண்ணுக்கெதிரே தோன்றும்.

கடோபநிடதம் கடைசிப் பகுதியில் ''பஹு'' என்ற சொல்லை 'பூமா' என்ற பொருளில் பயன்படுத்துகிறார் பிரம்ம வித்பா குரு. இந்தப் பூமா என்ற கருத்து சாந்தோக்கிய உபநிடதத்தில் சநத்குமார், நாரதருக்குச் செய்த உபதேசப் பகுதியில் சிகரமாக வருவதாகும். பூமா என்பதற்குப் பகவத் பாதர் உபநிஷத் பாஷ்யத்தில் அளிக்கும் உரை ''மஹத் நிரதிசயம் பஹு'' என்பதாம். ஆக சுநத் சுஜாதர் பயன்படுத்தும் சொல்லும் சநத் குமாரர் ஆண்ட சொல்லும் ஒரே பொருளுடையன.

சாந்தோக்கியத்தில்,

"யோவை பூமா தத்ஸுகம் நால்பே
ஸுகமஸ்தி பூமைவ ஸுகம்"

என்பது உபதேசம். காலம் இடம் போன்ற வரையறைகளற்ற தத்துவம் பூமா. அதுவே பேரின்பம். எல்லைக்குட்பட்ட எதுவும் இன்பம் தராது. இதனை விளக்கும் போது பகவத் பாதர் ஏன் அற்பமான எதுவும் இன்பந் தராது என்று காரணங் காட்டி விளக்குகிறார்.

எல்லையற்ற தத்துவமே சுகம். வரம்புக்கு உட்பட்ட எதுவும் சுகம் தராது. புலன்களை அடக்கி மெய்ம்மைப் பொருளை இடையறாது உபதேசிக்கும் சாதகன் பிரம்ம சாட்சாத்காரம் பெற்றுப்பின் இவ்வெல்லையற்ற புலமாகிய பூமாவினை அடைகின்றான்.

'ஈஸாவாஸ்ய மிதம் ஸர்வம்' எல்லாப் பொருள்களிலும் பிரம்மம் உள்ளுறைந்து நிற்கின்றான். ஆயினும் மாயைப் படலத்தால் மூடப்பட்டிருக்கும் பிரமத்தை அறிவது கடினம். மாயை என்பது அளப்பரிய திறம் படைத்தது. அதன் கவர்ச்சியை எதிர்த்துப் போராடும் திறமை இருப்பதில்லை.

ஆகவேதான் ஞானாசிரியன் 'பிரமத்தைக் காண விரும்புபவன் அதனை ஆத்மா எனும் துறையில் அன்றி வேறிடத்தில் தேடுவதில் இடர் மிகுதி என்று காட்டினான்.

# 7

**வே**த மந்திரங்களை முறைப்படி உச்சரித்து, சங்கல்பம் செய்து, ஜபம் புரிவது ஹிந்து மத சம்பிரதாயம். அந்த மந்திரங்களுக்கு அபாரசக்தி இருப்பதன் காரணத்தை அறிதல் வேண்டும். பகவன் நாம ஜபம் மஹத்தான பலன் தரக்கூடியது என்று பெரியோர்கள் உறுதி கூறுகிறார்கள்.

ஹிந்து சமய மந்திரம் ஒவ்வொன்றுக்கு ஒரு ரிஷி உண்டு. அந்த மந்திரத்தை உலகத்துக்கு அருளிய ரிஷி அவர். குறிப்பிட்ட யாப்படியில் மந்திரம் அமைந்திருக்கும். அந்த அடிக்குச் சந்தஸ் என்று பெயர். குரலில் ஏற்ற இறக்கம் முதலிய மாறுதல்களைக் கொண்டது சந்தஸ். ஒவ்வொரு மந்திரத்துக்கு ஒரு தேவதையும் உண்டு.

விதை என்ற பொருள் கொண்ட 'பீஜம்' என்பது அர்த்த விசேஷம் உடைய ஒரு வார்த்தை; அல்லது சொல் தொடர். மந்திரத்துக்குப் பிரத்தியேக சக்தியைக் கொடுப்பது பீஜம். மந்திரத்தைப் பயன்படுத்துபவனின் சுருதியோடு இசைப்பட்டு ஒன்றிவிடும் ஒலி கொண்டதாக, பீஜம் சில சமயம் இருப்பதுண்டு.

எனவே, ஆளுக்கு ஆள் இது மாறும். பீஜம் சில சமயம் மந்திரத்தின் சாரத்தை வெளியிடும். ஆகவே பீஜத்திலிருந்து முகிழ்த்து அலரும் மலரே மந்திரத்தின் விளைவு.

மந்திரத்தின் உருவே சக்தி—அதாவது அது எழுப்பும் ஒலி அதிர்ச்சிகள். இவை ஜபம் புரிபவனை அவன் எந்தத் தேவதையை உபாசிக்கிறானோ அதனிடம் இட்டுச் செல்கின்றன.

'கீலக' என்பது மந்திரத்தைத் தாங்கி உரப்படுத்தும் தூண்; அல்லது மந்திரத்தை ஒன்றாய் இணைக்கும் ஆப்பு முளைகள் ஆகும். இதனால் துயரம் தீருகிறது; குறைகளெல்லாம் விட்டு நீங்கி அவன் விடுதலை அடைகிறான்.

வேதாந்தத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் ஒத்துவராதென்று பலர் சொல்கிறார்கள். ஆனால் இரண்டுக்கும் ஒற்றுமையும் ஒப்புமையும் இருக்கின்றன. விஞ்ஞானம்

என்பது விரிவான பொருள். வேதாந்தமும் விரிவானது தான்.

அநேக ஆண்டுகளுக்கு முன்பே இந்த இரண்டுக்கும் உள்ள தொடர்பைச் சுவாமி விவேகானந்தர் அழகுற விளக்கியிருக்கிறார்.

காலம் செல்லச் செல்ல ஒவ்வொரு நாளும் இந்தியா வில் அரசியல் தலைவர்களும் ஆட்சித் தலைவர்களும் கல்வியில் வேதாந்தக் கருத்துக்களைப் புகுத்துவது மிகவும் அவசியம் என்பதை உணர்ந்து வருகிறார்கள்.

இது மாணாக்கனுக்குப் புதுமையுணர்ச்சியும் முன் னேற்றமும் உண்டாகும்படி செய்யும். நாளடைவில் இந்திய வாழ்க்கையில் ஒவ்வொரு துறையையும் வளப் படுத்தும் எண்ணங்களைச் சிந்திக்கும் நிலையை அவன் அடைவான்.

அவர்கள் கல்வி பயிலும்போது உயிர்நாடியான இந்தப் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள வல்லவரானால், அவர்களது வாழ்க்கையும் வேலையும் மிக்க ஆற்றலுடையனவாக விளங்கும். அவர்கள் ஒளி பெறுவார்கள். தங்களுடைய வாழ்க்கையிலும் உத்தி யோகத்திலும் யார் யாருடன் தொடர்புடையவர்களாக இருக்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் நல்ல வலி மையை உண்டாக்குவார்கள்.

நம்முடைய நாட்டுப் பண்பாட்டின் அடித்தளத்தி லேயே நித்தியமான வேதாந்த நோக்கு இருக்கிறது. அந்த உள் நோக்கைப் பெற்ற உபநிஷத காலத்து முனிவர்கள் மனித இனத்துக்கே உரிய பரம்பரைச் சொத்தாக அதனை விட்டுச் சென்றிருக்கிறார்கள்.

இந்த உள் நோக்கை வெளியிடும் குரல் அரிய கவர்ச்சியையும் ஆற்றலையும் உடையது. வேதாந்த

மானது கால வெள்ளத்தில் நீந்தி வந்து, மனித சரித்திரத்தில் மிகவும் அறிவுற்ற காலமாகிய இன்றும் புதுமையும் வலிமையும் உடையதாய் விளங்குகிறது. இதனால் அதில் உண்மை இருக்கிறதென்பதை உணரலாம்.

உண்மையொன்றே வெல்லும்—ஸத்ய மேவ ஜயதே —இது இந்தியக் குடியரசின் கொள்கையைக் காட்டும் வாக்கியமாகும். இது முண்டகோபநிஷத்திலிருந்து எடுக்கப்பட்டது.

பொய் வரும் போகும். ஆனால் மெய்யோ என்றும் நிற்கும். வேதாந்தம் நிலையாக இருக்கிறது. பரமார்த்த உண்மையைத் தன் உள்நோக்கில் வேதாந்தம் பெற்றிருக்கிறது என்பதைக் காட்டும் காட்சிகள் இவை. உண்மையே வேதாந்தத்தின் லட்சியம். அதுவே விஞ்ஞானத்துக்கும் லட்சியம். உண்மையை உண்மையுள்ளத்தோடு நாடிச் செல்வதே விஞ்ஞானம் என்று பெரிய விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

மனத்தைக் கட்டுப்படுத்தி ஒருமுகமாக்கிக் காட்சியாக நின்று பார்க்கவும், பற்றின்றி உள் நுழைந்து காணவும் பழக்கினால் இயற்கையின் உண்மையை அறியவல்லவராகிறோம்.

வேதாந்தமும் அனுபவத்தினூடே மறைந்திருக்கும் உண்மையைக் கண்டுபிடிக்கத் தனக்கென்று உள்ள ஒரு முறையைச் சொல்கிறது. அதிலும் தெளிவு, சாட்சியாக நிற்றல், உள்ளாழ்ந்து பார்த்தல் என்னும் குணங்களையும் காண்கிறோம். விஞ்ஞானம், வேதாந்தம் என்னும் இரண்டுமே அனுபவப் பிரபஞ்சத்தை அமைதியாகக் காட்சியாக நின்று, பற்றற்று ஆராய்ந்தமையால் அவை ஒன்றுக்கொன்று சமானமாக உள்ள தெளிவைத் தந்திருக்கின்றன.

விஞ்ஞான உண்மைகள் புறத்தே தோன்றும் இயற்கையை உணர்த்தவும் வசப்படுத்தவும் உதவுகின்றன. இதற்குமேல் தெரிந்துகொள்ள என்ன இருக்கிறது ?

இதே கேள்வியைப் பல காலத்துக்கு முன்பு வேதாந்தமும் கேட்டது. உபநிஷத் கால ஞானிகள் இத்தகைய விகாரங்களைச் செய்ததே வேதாந்தத்தின் அழியாத பெருமை.

பிரபஞ்சம் என்பது என்ன ? மனிதன் யார் ? அவனுடைய முடிவு என்ன ? இப்படியெல்லாம் கேட்டார்கள். பல காலத்துக்கு முன்பே அநுபவத்துக்குரிய பிரபஞ்சம், அகம் புறம் என்னும் இரண்டு விரிவான அம்சங்களை உடையது என்பதைக் கண்டறிந்தார்கள்.

வேதாந்தத்தைத் தெரிந்து கொள்வதற்கும் இந்தக் காலத்தில் விஞ்ஞானம் எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதை அறிவதற்கும் இந்த உண்மையை நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

விஞ்ஞானம் என்பது புறப்பகுதியை ஆராய்வது என்பதை அறிவோம்.

அகப்பகுதியையும் உணர முயன்று கொண்டிருக்கிறது நவீன விஞ்ஞானம்.

நடையுடை பாவனைகள் மேற்பரப்பிலுள்ள அலைகளைப் போன்றவை. அதற்குக் கீழும் புகுந்து ஏன் ஆராயக் கூடாது? உள்ளுணர்வினால் மனத்தின் ஆழத்தைப் பார்க்கலாமே! இப்படி நவீன விஞ்ஞானத்தில் ஒரு பெரிய இயக்கம் இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது.

இந்த, ஆராய்ச்சி தொடர்ந்து நிகழுமானல் மனிதனின் இயல்பு இன்னதென்ற உண்மைக்கு வந்து சேரும்.

அந்த உண்மையைப் பல காலத்துக்கு முன்பு வேதாந்தம் கண்டுபிடித்திருக்கிறது. மனிதன் நித்திய மான-இறப்பற்ற-ஆத்மா என்ற உண்மையே அது

விஞ்ஞானமானாலும் வேதாந்தமானாலும் ஆராய் வதற்குரிய விஷயம் அநுபவம்; மனிதன் எதை அநுபவிக் கிறானோ, அவனுடைய அநுபவப் பிரபஞ்சம் எதுவோ அதுதான்.

இதனால் ஒரு கேள்வி எழுகிறது. எதற்காக இரு வேறு விதமான ஆராய்ச்சிகள், இருவேறு முறைகள் இருவேறுவரயையறைகள் இருக்க வேண்டும்? ஒன்று மட்டும் இருந்தால் என்ன? வேதாந்தத்தை ஏன் கொண்டு வரவேண்டும்?

அவசியம் வேண்டும். இரண்டுக்கும் அவசியம் இருக் கிறது.

அநுபவம் என்பது பலவிதமாக இருப்பது. அதை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள்ளே அடக்கிவிட முடியாது.

விஞ்ஞானம் என்றும் அதே அமைப்பில் ஆராய்ச்சிக் குரிய பல்வேறு துறைகள் இருக்கின்றனவே, 'பௌதிகம் ரசாயனம், உயிர் நூல், வான நூல், என்று இப்படிப் பல இருக்கின்றனவே,

ஒவ்வொரு பிரிவும் அநுபவத்தின் ஒவ்வொரு பகுதியை எடுத்துக் கொண்டு ஆராய்கிறது. இப்படி உள்ள ஆராய்ச்சிகள் எல்லாவற்றுக்கும் பொதுவாக 'ஆராய்ச்சிக்கு உட்படும் உலகம் ஒன்றுதான்' என்ற உண்மையுணர்வு இருக்கிறதல்லவா!

இதைத் கொண்டுதான் சுவாமி விவேகானந்தர், 'விஞ்ஞானத்துக்கும் வேதாந்தத்துக்கும் உறவுண்டு

என்ற இந்தக் கருத்தை உலகம் முழுவதும் பரப்ப வேண்டும். அதிலும் முக்கியமாக இந்தியாவில் பாப்புவது அவ்சியம். விஞ்ஞானத்துக்கும் வேதாந்தத்துக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை அடிப்படையாகக் கொண்டு இந்த நாட்டில் கல்வி பரவ வேண்டும்' என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

ஹிந்து சமயத்தை மதம் என்றே நாம் கொள்வதில்லை. 'ஸநாதனதர்மம்' என்று தான் சொல்வது வழக்கம். அது மிகவும் பழமையானது என்பதை எவரும் மறுக்கமுடியாது. அதற்குத்தான் எத்தனை எத்தனை சான்றுகள் இருக்கின்றன.

இத்தகைய உன்னத தர்மத்தை இன்று நாம் அசட்டை செய்து வருகிறோம்.

பிற சமயத்தினர்களின் பள்ளிகளில் சமயபோதனை கண்டிப்பாக நடக்கும்போது, நம் பள்ளிகளில் அதை ஒதுக்கி விடுகிறோம். இது சரியாகுமா? பெற்றோரே தம் மக்களுக்கு அதைப் போதிக்கவேண்டும். ஆனால் எத்தனை பெற்றோருக்கு நம் தர்மத்தைப் பற்றித் தெரியும்? அதற்கு முயற்சி அவசியம் இல்லையா?

நம் ஹிந்து மதம் அநாதியானது. மிகப் புராதன காலத்தில் உலகில் வழங்கிய ஒரே மதம் அது. முன்பு அமரிக்கக் கண்டங்களில் ஹிந்து மதம் பரவியிருந்தது என்பதற்கு, மெக்ஸிகோவில் கிடைக்கும் அஸ்டெக், மாயாஎன்ற இரண்டு நாகரிகச் சின்னங்களுமே சான்று.

பசிபிக் பிராந்தியங்களிலும் அமெரிக்காவிலும் கணேசர் வழிபாடு பரவியிருந்திருக்கிறது. 'சரித்திர காலத்துக்கு முந்தி ஆட்சி செலுத்திய மனித இனங்கள்' என்ற தலைப்பில் 'ஹ்யூவிட்' என்ற பேராசிரியர் எழுதியுள்ள நூலிலிருந்து இது புலனாகிறது. பாபிலோனியா,

அசீரியா இந்த சாம்ராஜ்யங்கள் பூராவிலும் ஹிந்துமதம் பரவியிருக்கிறது. பல உருவங்களில் சூரியன், பலநாதர் என்ற இரு கடவுள்களைப் பற்றி அவர்களுடைய நூல் கள் குறிப்பிடுவது இதனால்தான்.

ஆசிய நாடுகள் அனைத்திலும் குறிப்பாக மங்கோலி யாவில்—கங்கையை மிகவும் புனிதமாக மதித்துவரு கிறார்கள். மஞ்சூரியா நாட்டில் வழங்கும் மொழி ஆயிரக் கணக்கான ஸம்ஸ்கிருதச் சொற்களை விரவியுள்ள துவே!

சீனாவின் நெடுஞ்சுவரில் 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றை ஆறு மொழிகளில் செதுக்கி யுள்ளார்கள். அவற்றுள் முதலிம் காண்பது ஸம்ஸ்கிருத வாசகமே. 'ஓம் நமோ பகவதே' என்று தொடங்கி 'ஓம் தத் ஸ்வாஹா' என்று அந்த வாசகம் முடிகிறது.

மஞ்சூரியாவிலும் திபேத்திலும்ஆயுர்வேத சம்பந்த மான பல நிகண்டு நூல்கள் உள்ளன. இன்றுங்கூட தாய்லாந்தில் ராமாயண நாட்டிய நாடகங்களும் ஹநுமான் நடனங்களும் பிரபலமாக நடக்கின்றன. அங்கே மன்னர்களையெல்லாம் 'ராமர்' என்றே கூறு கிறார்கள்.

இந்தோனேஷியாவைச் சேர்ந்த பசித் தீவில் உள்ள மக்களில் பெரும்பான்மையினர் ஹிந்துக்களே. அந்த நாட்டில் மகாபாரத நாடகம் பிரசித்தியும் செல்வாக்கும் பெற்றிருக்கிறது. அந்த நாட்டின் விமானப்போக்கு வரத்து ஸ்தாபனத்துக்கு 'கருடன்' என்ற பெயரையே சூட்டியுள்ளார்கள். எத்துணை பொருத்தமான பெயர்!

கிரேக்க நாட்டில் பழக்கத்தில் உள்ள இசையின் ஸ்வரஸ்தான நிர்ணயம் நம் நாட்டு இசையிலிருந்து பெற்றதே! ஹிந்துக்கள்தான் முதன் முதல் ஸ்வரங்களை

வகுத்தவர்கள். இன்றும் நம்முடைய ராக வகைகளிலே மோகனத்தை ஸ்காட்லாந்திலும் சுத்த சாவேரியைச் சீனாவிலும், சிம்மேந்திர மத்தியமத்தை ஆஸ்திரியா விலும் பாடுகிறார்கள்.

நம் இசைக் கருவிகளில் சில ஆசியாவில் மத்திய கிழக்கிலும், தென்கிழக்கிலும் உள்ள நாடுகளில் புழக்கத் தில் உள்ளன.

வேத காலத்தில் இந்தியாவில் இருந்த 'கச்சபி' என்னும் வீணை ஃபிலிப்பைன்ஸ் நாட்டில் 'கட்ஜ்யபி' என்னும் பெயரில் புழங்குகிறது. ஈரானில் நமது ஸ்ந்தூர் புழங்குகிறது.

வெளிநாட்டிலிருந்து பலர் வந்தும், உள்நாட்டிலே சிலர் கிளம்பியும் நம் ஹிந்து மதத்தை எத்தனையோ தடவை தாக்கியிருக்கிறார்கள். பல சமயங்களில் அந்தத் தாக்குதல்களை மிகப் பலமாக எதிர்த்துச் சமாளித்திருக் கிறோம். 'மாறுபட்ட கொள்கைகளை நாம் எதிர்க்க வில்லை. சகித்துக் கொண்டேயிருந்தோம்' என்று ஒரு குரலில் சொல்லிவிட முடியாது.

அப்படி எதிர்ப்பு இராமல் போயிருந்தால் பௌத் தத்தை ஸ்ரீ சங்கரரும், சமணத்தைத் திருஞான சம்பந்த ரும் தடுத்திருக்க முடியுமா? இந்து மதத்தை உலகெல்லாம் பரப்பிய விவேகானந்தர்தான் தோன்றியிருக்க முடியுமா?

கனகதாசர் என்பவர் மிகச் சிறந்த பத்திமான். அவர் ஞானோபதேசம் பெறும் பொருட்டு ஒரு குருவை அடைந்து வழிபட்டார். தாசருடைய பக்குவத்தை ஆராய எண்ணிய குருநாதர், அவருடைய கையில் ஒரு பழத்தைக் கொடுத்து 'யாருமில்லாத இடத்தில் இந்தப் பழத்தைச் சாப்பிடு' என்று சொன்னார்.

இரண்டு நாள் கழித்து 'பழத்தைச் சாப்பிட்டாயா?' என்று கேட்டார் குருதேவர்.

'இல்லையே!' என்றார் சீடர்.

"ஏன்?"

"ஒருவரும் இல்லாத இடத்தில் சாப்பிடும்படி பணித்தீர்கள். ஒருவரும் இல்லாத இடம் கிடைக்கவில்லையே!"

"தனியே காட்டுக்குள் சென்று சாப்பிடுவதுதானே!"

"எங்கு சென்றாலும் பகவான் ஒருத்தன் இருக்கிறானே! அவன் இல்லாத இடம் ஏது?" என்று பதில் சொன்னார் கனகதாசர்.

குருதேவர் அந்தப் பதிலைக் கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார். "நீ நல்ல பக்குவமுடையவன். உனக்கு உபதேசம் செய்கிறேன்" என்று சொல்லி மந்திரோபதேசம் செய்தார்.

'எங்கும் நிறைந்தவன் இறைவன். இறைவன் இல்லாத இடமே இல்லை" என்பது ஹிந்து மதக் கோட்பாடாகும்.

# 8

ரிக்வேதம் இந்திரன் முதலிய தெய்வங்களின் துதி மட்டுமில்லை. அந்தக் காலத்து மக்களின் சமுதாயத்தையும் அது சித்தரித்துக் காட்டுகிறது. வேத காலத்தில் இருந்த நம் முன்னோரின் வாழ்க்கையையும் எண்ணங்களையுங்கூட விளக்குகிறது.

அந்தக் காலத்திய மக்கள் சமூகம், வாழ்க்கை செழிக்க வேண்டி உற்சாகத்துடன் பல அலுவல்களில் ஈடுபட்டது. ராஜ்யத்தின் வளம் கொழிக்கவும், போரில்

வெற்றி பெறவும் முயன்று வந்தது. வேத முனிவர்கள் ''வீரர்களான புதல்வர் பிறக்கட்டும். போர்களில் வெற்றி உண்டாகட்டும்'' என்று தெய்வங்களிடம் அடிக்கடி வேண்டுவார்கள்.

ரிக்வேதத்தின் ஆறாம் மண்டலத்தில் இருக்கும் ஒரு ஸூக்தம் முழுவதும், வில், பாணம், தேரோட்டி, தேர், குதிரை, பற்பல ஆயுதங்கள் இவற்றைப்பற்றி வர்ணிக்கின்றது.

''ஜீ முதஸ்யேவ'' என்று தொடங்கும் சுலோகம் போர்க்களத்தில் இறங்கும் சூரனைப் புகழ்கிறது.

அதர்வ வேதம் இதையும்விட அதிகமாக உலக விஷயங்களைக் குறிக்கிறது. போர், ஆயுதம் இவற்றைப் பல ஸூக்தங்கள் புகழ்கின்றன. சமாதான காலத்தில் அரசனுக்கும் அரசுக்கும் நலம் தரும் விஷயங்களையும் இந்த வேதம் கூறுகிறது. சிந்தனை, சொல், செயல் இவை ஒருமித்து விளங்க வேண்டும் என்னும் ஸூக்தங்களும் உண்டு.

இப்பொழுது பாரத நாடு இத்தகைய ஒருமைப்பாட்டைத்தானே வேண்டுகிறது? இதை அந்தக் காலத்திலேயே நம் முனிவர்கள் கண்டுணர்ந்தார்கள். ஆகவே பல ஸூக்தங்களில் ''ஸங்கச்சத்வம், ஸம்வதத்வம், ஸ்ம்வோ மநாம்ஸி ஜாநதாம்'' என்று கூறினார்கள்.

அவர்வ ஸூக்தம் சில, ராஜ்ய சபையில் கலவரமின்றிச் சர்ச்சை செய்யவேண்டும் என்பதையும் கருத்தொருமையையும் வேண்டுகின்றன.

வேதத்தைச் சார்ந்த அரச நீதியில் குடியரசைப் பற்றிய பல அம்சங்கள் இருக்கின்றன. 'விததம்' என்ற மக்கள் சபை முக்கியமானது. ராஜ்யம் ஆளுவதைப்

பற்றியும், ஆளுநரைப் பற்றியும், குடிகளைப் பற்றியும் சேனையின் பலத்தைப் பற்றியும், அதர்வ ஸூக்தங்கள் பல விளக்கமாகக் கூறுகின்றன.

வேதங்கள், வீரர்களான மக்கள் வேண்டும் என்று மட்டும் கோரவில்லை. சபைகளில் சென்று மக்களைக் கவரும் முறையில் பேசும் திறமை வாய்ந்த இளைஞர்கள் வேண்டும் என்றும் கூறுகின்றன. 'ஆப்ரஹ்மத் ப்ராஹ்மண' என்றுதொடங்கும் மந்திரம் வேதத்தில் பல இடங்களில் காணப்படுகிறது.

அது எண்ணத்தில் மட்டும் ராஜ்ய பக்தியைக் கூறாமல் ராஜ்யம் நிலை பெற்றுச் செழிப்பாக இருக்க என்ன என்ன வேண்டுமோ அவற்றையெல்லாம் கூறுகிறது.

யஜுர் வேதத்தில் இருக்கும் 'சமகம்' என்ற பகுதி மக்கள் சமுதாயத்துக்கு வேண்டிய எல்லாவித வளத்தையும் வேண்டுவதாகும்.

ராஜ்யத்தின் மீதும் ராஜ்யத்தில் இருக்கும் ஆறு, மலை, காடு முதலியவற்றின் மீதும் ஈடுபாட்டை வேத கால முனிவர்கள் அதிகமாக வளர்த்திருக்கிறார்கள். ரிக் வேதத்தில் ஒரு ஸ்லோகம் கங்கை, யமுனை, ஸரஸ்வதி முதலிய எல்லா நதிகளையும் அன்புடன் அழைக்கிறது.

அதர்வ வேதத்தில் மிகச் சிறந்தது பிருதிவி ஸூக்தம். அதில் ஒரு வரி "பூமியான தாய் பிள்ளையான எனக்குப் பாலைக் கொடுக்கட்டும்" என்று வேண்டுகிறது.

ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் இருக்கும் 'வாகாம்ப்ருணீ' ஸூக்தம் சொல்லையே சிறந்த சக்தியாகக் கூறியுள்ளது. 'அஹம் ராஷ்ட்ரீ' என்று தொடங்

கும் சுலோகத்தில் சொல், தன்னையே நாட்டின் சிறந்த தேவதையாகக் கூறிக் கொள்கிறது.

வேத காலத்து வேள்விகளில் அசுவமேதம் முக்கிய மானது. ஒரு ராஜ்யம் என்பது ஒரு சக்கரவர்த்தியின் ஆளுகைக்கு உட்பட்டது. இந்த முறையில் ஒரு ராஜ்யம் என்ற கருத்தை இந்த வேள்விகள் வளர்த்தன. சக்கர வர்த்திதான் அசுவமேதம் செய்யவேண்டும். இந்தக் கருத்தை ஐதரேய பிராம்மணத்திலும் தைத்திரீயப் பிராம்மணத்திலும் உள்ள ஆசீர்வாத மந்திரங்களிலே காணலாம். இமயம் முதல் தென்கடல் வரையில் உள்ள இந்த நாட்டைப் பிறருக்கு இடம் கொடுக்காமல் ஆளுபவன்தான் சக்கரவர்த்தி என்ற கருத்தைக் கௌடில்யர் விளக்கியிருக்கிறார்.

காசிக்கும் ராமேஸ்வரத்துக்கும் போகாமல் தீர்த்த யாத்திரை பூர்த்தியாகாது. நாம் நித்யமும் கூறிவரும் 'கங்கே சயமுநே சைவ' என்ற ஸ்லோகம் நாட்டின் முக்கிய நதிகளையும் 'மஹேந்த்ரோ மலய' என்ற ஸ்லோகம் நாட்டின் முக்கிய நகரங்களையும் ஒன்று சேர்த்துக் கூறிப் பாரதம் முழுவதும் ஒரே நாடு என்ற எண்ணத்தை உருவாக்குகின்றன.

எந்தச் சடங்கின் தொடக்கத்திலும் செய்யும் சங்கல் பத்தில் பாரதம் முழுவதும் நினைவூட்டப் பெறுகிறது. வடநாட்டிலும் சரி, தென்னாட்டிலும் சரி, எங்கே நீராடி னாலும் கங்கையையும் காவேரியையும் சேர்த்து மக்கள் நினைக்காமல் இருப்பதில்லை.

தென்னாட்டில் அவதரித்த கங்கா பகவத்பாதர் திக்விஜயம் செய்து பாரதம் முழுவதும் ஆங்காங்கே மடங் களையும் நிறுவினார். அவருடைய செயல், பாரதம் முழுவதும் ஒன்று என்ற கருத்தையே நிலைநாட்டுகிறது.

ரிக் வேதத்தில் இயற்கையை இரண்டு விதங்களில் வர்ணித்திருக்கிறார்கள். அவை: (1) சாதாரண வர்ணனை. (2) அலங்கார வர்ணனை. எல்லா வைதிக இலக்கியங்களையும் சேர்த்து நான்கு பாகங்களாகப் பிரிக்கலாம். (1) ஸம்ஹிதா கிரந்தங்கள் (2) பிராம்மண கிரந்தங்கள் (3) ஆரண்யக் கிரந்தங்கள் (4) உபநிஷத் கிரந்தங்கள். இந்தக் காலத்தில் கிடைக்கக்கூடிய ஸம்ஹிதைகள் இவை. (1) ரிக்வேத ஸம்ஹிதை. (2) யஜுர்வேத ஸம்ஹிதை. அதில் இரண்டு பிரிவுகள். கிருஷ்ண யஜுர்வேத ஸம்ஹிதை, சுக்ல யஜுர்வேத ஸ்ம்ஹிதை, (3) ஸாமவேதஸம்ஹிதை—தாண்டிமசாகா, ஜைமிநியசாகா, (4) அதர்வவேத ஸம்ஹிதை.

இந்த ஸம்ஹிதைகளையே நான்கு வேதங்கள் என்கிறோம். ஒவ்வொரு ஸம்ஹிதையுடனும் பல பிராம்மண கிரந்தங்கள்; உபநிஷத் கிரந்தங்கள் ஆகியவை சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆகவே வைதிக கிரந்தங்களை இப்படிப் பிரித்திருக்கிறார்கள்.

1. **ரிக்வேதம்**: பிராம்மணம். 1. ஐதரேய பிராம்மணம். 2. கௌஷீதயே பிராம்மணம்; ஆரண்யகம்; ஐதரேய ஆரண்யகம். 2. கௌஹீதயே ஆரண்யகம்; உபநிஷத். 1. ஐதரேய உபநிஷதம் கௌஷீதயே உபநிஷத்.

2. **யஜுர்வேதம்**: 1. கிருஷ்ண யஜுர்வேத ஸம்ஹிதை. பிராம்மணம்—தைத்ரீய பிராம்மணம், ஆரண்யகம். 1. தைத்திரீய ஆரண்யகம். உபநிஷத். 1. தைத்திரீய உபநிஷத், 2. மகாநாராயண உபநிஷத்.

சுக்ல யஜுர்வேத .ஸம்ஹிதை. பிராம்மணம்: சதபத பிராம்மணம். உபநிஷத்—பிருஹதாரண்ய கோபநிஷத்.

3. ஸாமவேதம்: தாண்டிம சாகா பிராம்மணம் 1. பஞ்சவிம்ச பிராம்மணம். 2. ஷட்விம்ச பிராம்மணம். 3. அற்புத பிராம்மணம். 4. சாந்தோக்ய பிராம்மணம். உபநிஷத் 1. சாந்தோக்ய உபநிஷத்.

ஜைமிநீய சாகா பிராம்மணம்: 1. தலவகார பிராம்மணம். 2. ஆர்ஷேய பிராம்மணம். உபநிஷத் கேநோபநிஷத்.

அதர்வவேதம்: பிராம்மணம்-கோபத பிராம்மணம்.

ஆனால், இப்போதோ வேதங்களைக் கற்பதோ கற்பிப்பதோ குறைந்து கொண்டு போவது நமது பெரிய துர்ப்பாக்கியம் என்று தான் சொல்லவேண்டும். வேதத்தில் இரண்டொரு பாகங்களைப் படித்துப் பாண்டித்தியம் பெற்ற வைதிகர் மட்டுமே தோன்று கிறார்கள். இத்தகைய வைதிகர்களை விட வைதிக முறையில் புகழடைந்த பண்டிதர்களின் நிலைமை மோச மாகிக் கொண்டிருக்கிறது.

இந்தக் காலத்தில் நாம் வேதங்களைப் போற்று கிறோம்; ஆனால் வைதிகப் பழக்க வழக்கங்களும் நற் குணங்களும் பெருமையும் பெரிதும் மறைந்தே விட்டன. ஆனாலும் நாம் நிராசை அடைய வேண்டியதில்லை.

சுவடியிலே படித்து நூலறிவெல்லாம் பெறலாம். வேதமோ ஓதிப் பயின்றே காக்க வேண்டிய தெய்வீக நூல்.

வேதங்களைப் பற்றிய ஆராய்ச்சி நடத்தப் பல ஸ்தாபனங்களைப் பல இடங்களில் நம் நாட்டில் ஏற்பாடு செய்து வருகிறார்கள். அதனால் வேதத்தில் பற்றுதல் உள்ளவருக்கு ஓரளவு ஆறுதல் ஏற்படுகிறது. ஆனால் தற்கால ஆராய்ச்சியாளர், நூலின் வெளிப்படையான அம்சத்துக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கிறார்கள்.

தொன்று தொட்ட காலம் முதல் கேரளக்கில் வேதத்தைக் கற்க உரிமையுடையவர்கள், வேதவித்தையைப் பரவலாகப் பயின்று வந்தார்கள். மற்ற இடங்களில், அதைக் கற்க வேண்டியவர்கள் பல தொழில்களில் புகுந்துவிட்டதால், அவர்களால் வேதத்தைப் பூரணமாகக் கற்க முடியவில்லை. கேரளத்தில் வேதாத்ய யனம் செய்பவரின் குடும்பச் சூழ்நிலை அதற்கென்றே ஏற்பட்டது போல் அமைந்திருத்தலாம், அவர்களால் வேதத்தை நன்கு காக்க முடிந்தது.

வேதங்களைக் கற்பதில் மட்டுமின்றிக் கேரளீயரின் சிரத்தை அதன் கருத்தை உணர்வதிலும் அன்று முதற் கொண்டே இருந்து வந்தது. வேதங்களின் உட்கருத்தைத் தீர்மானிப்பதற்கு மீமாம்ஸா சாஸ்திரம் மிக உபயோகமானது.

ஒரு காலத்தில் அந்தச் சாஸ்திரம் பயில ஏராளமான பேர் முன்வந்தார்கள். புகழ் பெற்ற மீமாம்ஸா பண்டிதர்களும் இருந்து வந்தார்கள். மீமாம்ஸா சாஸ்திரத்தில் இவர்கள் தம் கையால் பல நூல்களைப் பனையோலையில் எழுதியிருக்கிறாாகள்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரையில் நம்பூதிரிக் குடும்பங்களில் முறையாக வேதம் பயின்று தான் வந்தார்கள். ரிக் வேதத்தில் மேல்படிப்புக்குத் திருச்சூர், திருநாவாய் என்ற இரண்டு இடங்களில் இருக்கும் 'பரம்மஸ்வம்' மடங்கள் உதவின. மற்ற வேதங்களுக்குச் சில பொது ஸ்தாபனங்கள் உதவி வந்தன.

சமீப காலம் வரையில் கேரளத்தில் பல வேத பண்டிதர்கள் விளங்கி வந்தார்கள். ஆனால் வேதத்தின் பொருளை அறிய இவர்கள் பாடுபடவில்லை. வேதங்களின் பல கிளைகள் மற்ற நாடுகளில் போல் கேரளத்தி

லும் அழியாமல் இருப்பதற்காகப் பாடுபட்டு வந்தார்கள். பல இடங்களில் தேர்வுகளையும் ஏற்பாடு செய்தார்கள்.

வேதாத்யயன பரம்பரை ஒரு தடவை அழிந்து விட்டால், பிறகு அதை மீட்பது முடியாத காரியம் என்றே சொல்லலாம். குருவினிடமிருந்து நேராகத் தொடர்ந்து கற்பதைத் தவிர வேறு வழியில் வேதத்தைக் கற்பது எளிதில்லை. இப்படி அழிந்து போகும் நிலையில் இருக்கும் வேதாத்ய யனத்தைக் காக்க நாம் முன் கூறிய ஆராய்ச்சி நிலையங்கள் எவ்வளவு தூரம் உதவும் என் பதை நடைமுறையில் பார்க்கவேண்டும்.

கேரளத்தைத் தவிர பாரதத்தின் மற்றப் பகுதி களிலோ வேதத்தைக் காக்க எடுத்துக் கொண்டிருக்கும் முயற்சி கொண்டாடத் தகுந்ததே! இங்கே மடாதிபதி களும் தர்மாதிகாரிகளும் பல வேத பாட சாலைகளைத் தாமே நடத்தி வருகிறார்கள். சிருங்கேரி சங்காரச் சாரியரின் மடத்தைச் சார்ந்த பாட சாலையில் நூற்றுக்கு மேற்பட்ட வித்யார்த்திகள் கற்று வருகிறார்கள்.

காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் வேத வித்தை நாட்டில் வேரூன்றி அது நிலைக்கப் பல விதங்களில் ஊக்கம் அளித்து வருகிறார். நாடு முழுவதும் இருக்கும் வேத வித்துவான்களுக்குத் தங்கத்தோடா அளித்துப் பாராட்டியிருக்கிறார். பாஷ்யத்தோடு வேத சாஸ்திரப் பயிற்சித் தேர்வு வைத்து அதில் தேறிய வகுப்பை யொட்டி ஆயிரக்கணக்கில் சம்மானம் அளித்து வரு கிறார்.

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ஸ்வாமிகளுடைய முன்னிலையில் ரிக், சுக்ல யஜுர், கிருஷ்ண யஜுஸ், ஸாமம் என்ற நான்கு வேதங்களிலும் தேர்வு நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார். மஹா பண்டிதர்கள் தேர்வுப் பரிசோதகர்களாக நியமனமாகியிருக்கிறார். தேர்வுக்

காக வருபவர்களுக்கு வழிச் செலவு, இருக்க இடம், உணவு எல்லாம் கிடைப்பதுடன் தேர்வுப் பரிசோதகர் களுக்கும் சம்மானம் வழங்கப் பெறுகிறது.

கேரளத்தில் செல்வந்தர் ஸபாமடத்தில் சிறிது காலத்திற்கு முன்பு தான் சில பெரியோர்களின் முயற்சி யால் வேதாத்தியயனம் மீண்டும் இயங்கி வருகிறது. இதில் பழைய குரு குலத்தில் இருந்து வந்தது போல், சில மாணவர்களுக்கு வேதாத்யயனம் செய்விக்க முடி கிறது. கொச்சி தேவஸ்வம் போர்டார் சில காலமாக இதைக் கவனித்து வருவதால் இதன் பொருளாதார நிலை சற்று சீர் பெற்றிருக்கிறது.

பதினாயிர வருஷக் கணக்காகப் பாரத தேசத்தில் அவ்வப் போது தோன்றின பெரியோர்கள் தவமும் ஆராய்ச்சியும் செய்து பாரத தர்மத்தை வளர்த்து வைத் திருக்கிறார்கள். அது மிகப் பழைய ஆலமரம். அதன் நிழலில் நாம் வாழ்கிறோம். ஒரு கிளையைப் போல் மற் றொரு கிளை இல்லை. பார்ப்பதற்கு அதிக வேறுபாடுகள் இருக்கும். விருட்சம் ஒன்றே, வித்தியாசங்களைக் கண்டு மயங்கிப் போகக் கூடாது.

சத்தியமே அதன் உயிர். உண்மையே பிரதானம் எனக் கொண்டு, புத்தியை எவ்வளவு தூரம் செலுத்த முடியுமோ அவ்வளவு தூரம் செலுத்தி, நம்மைப் பெற்ற முன்னோர்களில் மகா ஞானிகளும் குணசீலர்களும் சத்திய சோதனை செய்து அடைந்த உண்மைகளே வேதாந்தம். அதுவே இந்துக்களின் மதம். மக்கள் அதைச் சரிவரப் பின்பற்றி வாழ்ந்தார்களானால் நாடு செழித்துச் சிறப்பை அடையும்.

புராண-இதிஹாஸம் என்பவை வேதத்துக்குப் பூதக் கண்ணாடி போன்றவையாகும். வேதத்தில் உள்ள யாவும் உத்தரவுகளாக இருக்கின்றன. ‘ஸத்யம்பத’-

அதாவது 'உண்மை பேசு' என்று கட்டளையிடுகிறது வேதம்.

ஆனாலும் அதைச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் நமக்கு வருவதில்லை. பல அத்தியாயங்கள் கொண்ட ஹரிச்சந்திரப் புராணத்தைக் கேட்கும்போது உண்மை பேசத் தூண்டுகிறது.

'பித்ருதேவோ பவ' அதாவது 'தந்தையைத் தெய்வமாகக் கொள்' என்கிறது வேதம். இராமாயணத் தைப் படிக்கும் போது தந்தையைக் கௌரவிக்க-தெய்வ மாக மதிக்க-நாம் தவறக் கூடாது என்பதை உணர் கிறோம். இப்படி வேதத்திலுள்ள கருத்தை விரிவுபடுத்தி மனத்தில் பதியும்படி எடுத்துரைப்பதே புராணம்.

யாருடைய சிந்தனைகள் கண்டபடி திரிய வில்லையோ, யார் தீமையை எண்ணவில்லையோ, யாரு டைய தூக்கத்தில் கனவுகள் இல்லையோ, யார் தூங்கும் போதும் விழிப்புடன் இருக்க முடிகிறதோ அவர் உண் மையிலேயே ஆரோக்கியமானவர். உடலால் மாத்திர மல்ல; உள்ளத்தாலும் ஆரோக்கியமானவர் அவரே! அசுத்தப்படுத்த முடியாத அவருடைய ரத்தத்தில் எந்த வியாதியையும் தடுத்து நிறுத்தும் சக்தி இயற்கையாகவே இருக்கும்.

# 9

ரிக் வேதத்தில் 'ஸிந்து' என்னும் சொல் பலமுறை இடம் பெற்றிருக்கிறது. இதனால் ஸிந்து வெளிப் பிரதேசத்தில் ஸிந்து நதிக்கரையில் வேதங்களின் தொடக்கம் ஏற்பட்டிருக்கக் கூடும் என்பது பல ஆராய்ச்சியாளரின் முடிவு.

ஸிந்து வெளி நாகரிகத்தின் புராதன நினைவுச் சின்னமாக விளங்குவன 'மொஹன்ஜோதடோ' இடி பாடுகளும் பழம் பொருள்களுமாகும். அந்தக் காலத்தில், ஸிந்துப் பிரதேசத்திலேயே பஞ்சாபு, காச்மீரம், காந்தாரம் முதலியவை சேர்ந்திருந்தன.

மகரிஷி தேவலர், பதஞ்ஜலி, பாணினி முதலிய ஸம்ஸ்கிருதப் பேரறிஞர்கள், ஸிந்துப் பிராந்தியத்தைச் சேர்ந்தவர்கள். கி.மு. 516-இல் ஸிந்து தேசத்தின் மீது ஈரானியர்கள் படையெடுததார்கள். அவர்கள்தான் 'ஹிந்து' என்று மாற்றினார்கள். இதன் மூலமே பாரத தேசத்துக்கு 'ஹிந்துஸ்தான்' என்ற பெயர் ஏற்பட்டது.

வேதங்களின் பெருமையைப் பற்றி வேத அறிஞர்கள் அனைவரும் ஒரே கோட்பாட்டை உடையவர்களாகத் தோன்றுகிறார்கள். ஆனால் வேதங்கள் தோன்றிய காலத்தைப் பற்றிக் கூறும்போது அவர்களுக்குள் அபிப்பிராய பேதங்கள் தோன்றுகின்றன. இந்தியப் பரம்பரையைப் போற்றும் அறிஞர்கள் வேதங்களின் காலத்தை நிர்ணயிக்கும் விஷயத்தில் மௌனமாக இருக்கிறார்கள். அவர்கள் இதைப் பற்றிப் பேச விரும்பு வதில்லை. வேதங்கள் 'அபௌருஷம்' என்பதிலேயே அவர்கள் சந்தோஷமடைகிறார்கள். வேத காலத்து மஹரிஷிகள் வேத மந்த்ரங்களைக் கண்டறிந்தவர்களே தவிரப் படைத்தவர்களல்ல என்பது, இந்த வகையைச் சேர்ந்த இந்திய அறிஞர்களின் ஒன்றுபட்ட கருத்து.

கற்பனையிலும் கவிதையிலும் மிகப் பழையது ரிக் வேதம்.

சரித்திர ஆராய்ச்சி முறையில் வேதங்களை ஆராயத் தொடங்கிய மேலை நாட்டு அறிஞர்களும் வேத காலத்தை நிர்ணயிக்க முயன்றிருக்கிறார்கள். அவர்களுடைய கருத்தின்படி, வேதங்களில் பழமை

யானது ரிக்வேதம். அது தோன்றிய காலம் கி.மு. 1200 என்று அவர்கள் நம்புகிறார்கள்.

டாக்டர் மாக்ஸ்முல்லர் வேத காலத்தை 1. சந்தஸ் காலம், 2. மந்த்ரக் காலம், 3. பிராம்மண காலம், 4. சூத்ர காலம் என்று நான்காகப் பிரித்திருக்கிறார். இந்த விதமாக மாக்ஸ்முல்லர் இந்த ஒவ்வொரு காலத்தின் பொருளையும் ஒட்டி கிரந்தங்கள் தோன்றிய கால அளவை, இருநூறு ஆண்டுகள் என்று கணக்கிட்டிருக்கிறார். அதன்படி புத்தருக்கு முன் சூத்ரகாலம் கி.மு. 600 என்று நிர்ணயித்து, அதன்படி ரிக்வேதம் இயற்றப் பெற்ற காலம் இன்று முதல் 3200 ஆண்டுகளுக்கு முன் என்று நிர்ணயித்திருக்கிறார்.

ஆனால், வேத-ஸம்ஹிதைகளிலும் பிராம்மண கிரந்தங்களிலும் சோதிடம் பற்றிய பல குறிப்புகள் கிடைத்திருக்கின்றன. அவற்றை ஆதாரமாகக் கொண்டு லோகமான்ய பாலகங்காதர திலகர், ஜெர்மானிய தேசத்துப் புகழ்பெற்ற பேரறிஞரான டாக்டர் யாகோவி இருவரும் தனித்தனியே வேதத்தின் ஆரம்பகாலம் கி.மு. 4000 என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.

மகாராஷ்டிரத்தின் புகழ்பெற்ற ஜோதிடரான பாலகிருஷ்ண திக்ஷிதர் சதபதப் பிராம்மண கிரந்தத்தைக் கொண்டு ஜோதிட பூர்வமான ஆராய்ச்சி நடத்தி ரிக்வேத காலம் 5500 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று நிரூபித்திருக்கிறார். இது திலகர் குறிப்பிட்ட காலத்துக்கும் சிறிது முற்பட்டதாக இருக்கிறது.

திலகர் ரிக்வேதத்தைக் கொண்டு ஆழ்ந்த ஆராய்ச்சி நடத்திப் பல பிரமாணங்களைச் சேகரித்தார். அவற்றை ஆதாரமாகக்கொண்டு அவர் கூறுகிறார்.

"மிருகசீர்ஷ நக்ஷத்திரம் வசந்த காலத்தில் ரிக்வேதம் தோன்றிற்று. தைத்திரீய ஸம்ஹிதையின்படி,

பால்குன (மாசி) பௌர்ணமியன்று வருஷப் பிறப்பு கொண்டாடியிருக்கிறார்கள்.'' ஆகவே, தேவர்களின் தாயாரான அதிதியின் காலம் இந்தியப் பண்பாட்டின் மிகவும் பழமை பொருந்திய காலமாக இருந்திருக்க வேண்டும் என்றும், அது கி. மு. 6000, 4000 இரண்டுக்கும் இடைப்பட்ட காலமாக இருக்கவேண்டும் என்றும் திலகர் கூறுகிறார்.

ஆனால், மஹா சூத்ரங்கள் குறிப்பிட்டிருக்கிற துருவ நக்ஷத்திரத்தின் தோற்றத்தை ஆதாரமாகக் கொண்டு, வேத காலத்தை கி. மு. 4000 என்று டாக்டர் 'யாகோவி' அறுதியிடுகிறார். வேத காலத்தை இங்கே காணும் நான்கு பிரிவுகளாகத் திலகர் பிரித்திருக்கிறரர். 1. அதிதிகாலம் (கி. மு. 6000—4000) 2. மிருகசீர்ஷ காலம் (கி. மு. 4000—2500) 3. கிருத்திகைக் காலம் (கி. மு. 2500—1400) 4. கடைசிக் காலம் (கி. மு. 1400—500.)

**சமயங்களின் காலம் :** இக்காலத்தில் மக்கள் பின்பற்றும் முக்கிய சமயங்கள்—இந்து சமயம், கிறிஸ்து சமயம், இஸ்லாம் சமயம், யூத சமயம், கோராஸ்திரிய சமயம், பௌத்த சமயம், கன்ஃப்யூஷியஸ் சமயம், தாவோ சமயம் ஆகும்.

இவை ஒவ்வொன்றும் தோன்றிய காலங்களின் விவரத்தை இங்கே காணலாம்.

**இந்து சமயம் :** ஒருவரால் உண்டாக்கப் பெறாதது. சரித்திர காலத்துக்கு அப்பாற்பட்டது. பிற சமயங்களெல்லாம் தம்மை உண்டாக்கியவரின் பெயரைக் கொண்டு விளங்குகின்றன. அதனால் அவற்றுக்குக் கால வரையறைகள் உண்டு.

**கிறிஸ்து சமயம் :** இது இயேசு கிறிஸ்துவால் 1987 ஆண்டுகளுக்குமுன் பாலஸ்தீன நாட்டில் நிறுவப் பெற்றது.

**இஸ்லாம் :** இது முகமது நபியால் சுமார் 1414 ஆண்டுகளுக்குமுன் அரேபிய அரசால் நிறுவப்பெற்றது.

**யூத சமயம் :** இது மோசஸ் என்பவரால் சுமார் 3512 ஆண்டுகளுக்கு முன்பு ஜுடேயா என்ற நாட்டில் ஏற்படுத்தப் பெற்றது.

**சோராஸ்திரிய சமயம் :** இது சோராஸ்திரியரால் சுமார் 2712 ஆண்டுகளுக்கு முன்பு பாரசீகத்தில் நிறுவப் பெற்றது. இதன் காலம் இன்னும் பழமையானது என்று அறிஞர் சிலர் கூறுகிறார்கள்.

**பௌத்த சமயம் :** இது புத்தரால் 2512 ஆண்டு களுக்கு முன்பு இந்தியாவில் உண்டாக்கப் பெற்றது.

**கன்ஃப்யூஷியஸ் சமயம் :** இது கன்ஃப்யூஷியஸ் என் பவரால் சுமார் 2512 ஆண்டுகளுக்கு முன்பு சீனாவில் நிறுவப் பெற்றது.

**தாவோ சமயம்**—இது 'லாஓ—ட்ஸே' என்பவரால் 2512 ஆண்டுகளுக்குமுன் சீனாவில் நிறுவப் பெற்றது.

இந்து சமயம் தவிர, மேற்கூறிய சமயங்கள் அனைத் தும், அவை தம்மை நிறுவியவரின் ஜீவியத்தையும் அருளிய உபதேசத்தையும் அடிப்படையாகக் கொண் டிருக்கின்றன.

'இந்து' என்பது ஒரு மதத்தின் பெயரல்ல. முன் னொரு காலத்தில் அந்நியர்கள் நமது தேசத்துக்கு வந் தார்கள். அதன் மேற்கிலுள்ள சிந்து நதியைக் கண்டு அந்த நதிக்கரையிலே வசித்து வந்த மக்களை ஸிந்திகள்

என்று குறிப்பிட்டார்கள். அந்தப் பெயர் மேல்நாட்டாரின் உச்சரிப்பில் ஹிந்து என்றும், இந்தியா என்றும் வழங்கப் பெற்றது.

இப்போது நாமும் அந்தப் பெயரன்றி மறுபெயரால் மற்றவரிடம் எளிதில் நம்மைச் சுட்டிக் காட்டிக்கொள்ள முடியாதவர்களாயிருக்கிறோம்.

அந்தக் காலத்தில் நூற்றுக்கணக்கான மாணாக்கர்கள்—இந்து சமய முறைப்படி—பயின்று வந்த பெரும்பாலான கல்வி நிலையங்கள், நகரச் சந்தடிகளுக்கு அப்பால் இயற்கையான சூழ்நிலையில் அமைந்திருந்தன. இவற்றில் பயின்ற மாணாக்கர்கள் இங்கேயே உண்டியும் உறையுளும் பெற்று ஆசிரியர்களோடு நெருங்கிய உறவு பூண்டு வாழ்ந்தார்கள். இதனால் இவர்களிடம் ஆசிரியர்களுடைய நல்ல தன்மைகள் தாமாகவே வந்து படிவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது.

இந்தக் கல்வி நிலையங்கள் குருகுலங்களென்றும் ஆசிரமங்களென்றும் புனிதமான பெயரைப் பெற்று விளங்கின. ஒவ்வொன்றையும் தற்காலத்துப் பல்கலைக் கழகத்தோடு குறிப்பிட்டுச் சொல்லலாம்.

ஒவ்வொரு குருகுலத்துக்கும் தலைமை வகித்து நடத்தியவர் குலபதி என்று அழைக்கப் பெற்றார். தற்காலத்துப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் என்று இவரைச் சொல்லலாம்.

இந்த ஆசிரமப் பல்கலைக் கழகங்களில் பல துறைகளிலும் பயிற்சி பெறுவதற்கான வாய்ப்பும் வசதியும் இருந்தன. ஒவ்வொரு துறை பற்றின பயிற்சி அளிப்பதற்கும் தனித்தனிப் பிரிவுகள் இருந்தன. அநேக ஆசிரமங்களில் எட்டுப் பிரிவுகள் அல்லது இலாக்காக்கள்

இருந்தன. இவை தனித்தனிப் பெயரால் குறிக்கப் பெற்றன என்று தெரிகிறது.

1. அக்கினி ஸ்தானம்: அன்றாடம் மாணாக்கர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஓமத்தீ வளர்த்து வழிபாடு நடத்துகிற இடம். இங்கே ஓமச் சடங்குகளைப் பற்றியும் வழிபாடு நடத்தும் முறையைப் பற்றியும் சொல்லிக் கொடுத்திருப்பார்கள் என்று நாம் ஊகிக்கலாம்.

2. பிரம்ம ஸ்தானம்: வேதங்களில் பயிற்சி அளிக்கும் பிரிவு.

3. விஷ்ணு ஸ்தானம்: அரசியல் பொருளாதாரம் முதலியவற்றைப் போதிக்கும் பிரிவு.

4. மகேந்திர ஸ்தானம்: யுத்த தருமங்களையும் யுத்த நியதிகளையும் கற்பிக்கும் பிரிவு.

5. வைவசுவத ஸ்தானம்: வான சாஸ்திரத்தைப் போதிக்கும் பிரிவு.

6. சோம ஸ்தானம்: தாவர சாஸ்திரத்தைப் போதிக்கும் பிரிவு.

7. கருட ஸ்தானம்: போக்குவரவு ஸாதனங்களைப்பற்றி அறிவு புகட்டும் பிரிவு.

8. கார்த்திகேய ஸ்தானம்: யுத்த தந்திரங்கள். அதாவது அணிவகுத்தல், காவல் படைகள் அமைத்தல் முதலியவை பற்றிச் சொல்லிக் கொடுக்கும் பிரிவு.

தவிர, மாணாக்கர்களுடைய பெற்றோர்களோ அவர்களுடைய பெற்றோர்களோ பரம்பரையாக எந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்தார்களோ அதில் அந்த மாணாக்கர்களுக்கு இளமைப் பருவத்திலிருந்தே இயற்கையான

ஒருவித அறிவும் ஈடுபாடும் இருக்கும். மறக்க முடியாத இந்த உண்மையை நம் முன்னோர்கள் அங்கீகரித்துக் கொண்டு அதற்குத் தகுந்தாற்போல மாணாக்கர்களுக்கு அந்தத் தொழிலில் திறமை ஏற்படக்கூடிய மாதிரி பாடக் கிரமங்கள் நியதி செய்து வைத்தார்கள்.

இப்படிப் பல வித்தைகளைக் கற்றுக் கொடுத்த ஆசிரமப் பல்கலைக் கழகங்கள் சில, மகாபாரதம் போன்ற நூல்களில் வர்ணிக்கப் பெறுகின்றன.

உதாரணமாக, நைமிசாரணியம் என்பது ஒன்று. இங்கே வேப்பமரங்கள் நிறைந்திருந்தனாலேயே இந்தப் பெயர் கொடுக்கப் பெற்றது. இதன் தலைவராக—குல பதியாக—இருந்தவர் சௌனகர் என்பவர். இங்கே பதினாயிரம் மாணாக்கர்கள் பயின்று வந்தார்களென்று சொல்லப் பெறுகிறது. சகுந்தலையின் வளர்ப்புத் தந்தையான கண்வரிஷியும் ஓர் ஆசிரமப் பல்கலைக் கழகத்தின் தலைவரே.

நூற்றுக்கணக்காக நடைபெற்று வந்த இந்த ஆசிர மப் பல்கலைக் கழகங்களுக்கு அரசாங்கம் பலவகை மானியங்கள் அளித்து ஆதரித்தது. அரசர்கள் அப் போதப்போது இந்த ஆசிரமங்களுக்கு வந்து அறிவும் அமைதியும் பெற்றுச் சென்றார்கள். ஆனால் அரசர் களோ, அரசாங்கமோ இவற்றில் தலையிடவில்லை. பாடத் திட்டங்களையோ, போதனைக் கிரமங் களையோ வகுத்துக் கொடுக்கவில்லை. அளித்த மானி யத்துக்கு ஈடாக எந்த வகையிலும் அதிகாரத்தைச் செலுத்தவில்லை என்றே சொல்லலாம்.

ஆசிரியரும், மாணாக்கர்களும் நெருங்கிய உறவு கொண்டிருந்தார்கள். இந்த உறவு எப்படி இருக்கவேண் டும் என்பதைப்பற்றி நம் பெரியோர்கள் வெகுவாகப் பேசியிருக்கிறார்கள். ஆசிரிய—மாணாக்கர் உறவு, ரத்த

பாசமுள்ளவனுக்கிடையே நிலவும் உறவுபோல, அதாவது தகப்பனுக்கும் பிள்ளைகளுக்கும் உள்ள உறவுபோல் இருக்க வேண்டும்.

ஒருவரின் நலத்துக்கும் மேன்மைக்கும் மற்றொருவர் பாதுகாப்பாளர்போல இருக்க வேண்டும். ஆசிரியர், மாணாக்கருக்குக் குடைபோல் நிழல் தந்து, சிறுமைகள் எவையும் அவர்களை அணுகாவண்ணம் அவர்களைக் காப்பாற்ற வேண்டும். அதுபோலவே, மாணாக்கர் ஆசிரியருக்குக் குடைபோல் இருந்து அவரது நற்பெயருக்குக் களங்கம் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டும்.

நாள்தோறும் ஆசிரியரும் மாணாக்கரும் முறையே படிப்பிக்கவும் படிக்கவும் தொடங்குகிறபோது, இருவரும் சேர்ந்து "குரு சிஷ்யர்களாகிய எங்கள் இருவரையும் சேர்த்துப் பரம்பொருள் காப்பாற்றட்டும். சேர்த்துப் போஷிக்கட்டும். (நாம்) இருவரும் சேர்ந்து வீர்யத்துடன் உழைப்போமாக. எங்கள் படிப்பு ஒளி பொருந்தியதாக வேண்டும். (நாங்கள் இருவரும்) பரஸ்பரம் பகைத்துக் கொள்ளாமல் இருக்கவேண்டும்" என்ற கருத்து அடங்கிய பிரார்த்தனையைச் செய்து கொள்ள வேண்டும். இதிலிருந்து ஆசிரியர்—மாணாக்கர் உறவுக்கு எவ்வளவு புனிதத் தன்மை கொடுக்கப் பெற்றது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இந்த விதமான மேலான ஏற்பாட்டிலும் ஒரு சிஷ்யனுக்கும் குருவுக்கும் ஒரு சமயம் ஒத்துப்போகவில்லை. அப்படி வெளியேறிய சிஷ்யன் தானே சாஸ்திரங்களைப் படித்தறிய உறுதி பூண்டான்.

சாஸ்திரங்களில் ஓர் இடத்தில் "எச்சில் பரிசுத்தம்; இறந்தவன் போர்வை பரிசுத்தம்; வாந்தி பண்ணினது பரிசுத்தம்" என்று கண்டிருந்தது. இதன் பொருள்

இளைஞனுக்கு விளங்கவில்லை. முன்னாள் குருவிடம் சென்று கேட்டறியவும் மனமில்லை.

"சாஸ்திரம் பொய்யாகாது என்று எண்ணி ஒரு நாள் பகலில் ஓர் இல்லறத்தினரின் விட்டுக்குச் சென்றான். வாசலில் வந்து விழுந்த எச்சில் இலையை நோக்கி விரைந்தான். அப்போது அங்கிருந்த பெரியவர் ஒருவர் அவனைத் தடுத்து "உன்னைப் பார்த்தால் படித்த பிரம்மசாரியாகத் தெரிகிறதே! ஏன் இப்படிப் பட்ட அருவருப்பான செயலைச் செய்கிறாய்?" என்று கேட்டார்.

அப்போது அந்தப் பிரம்மசாரி "நான் தனியாகவே சாஸ்திரங்களைப் படித்து வருகிறேன். 'எச்சில் பரிசுத்தம்; இறந்தவனின் போர்வை பரிசுத்தம்; வாந்தி பண்ணினது பரிசுத்தம் என்று சொல்லியிருக்கிறதே?" என்றான்.

அது கேட்ட அவர் சிரித்துக்கொண்டார். "நீயே சாஸ்திரங்களைப் படித்துக் கொண்டால் அப்படித்தான்! சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதை அப்படிப் பொருள் செய்துகொள்வது கூடாது. சந்தர்ப்பத்துக்கு ஏற்றது போல் தொன்றுதொட்டு இருந்துவரும் அநுபவமுறையில் பொருள் கொள்ளவேண்டும்" என்று தொடங்கி இளைஞனின் சந்தேகத்தைத் தெளிவாக்கினார்.

எச்சில் பரிசுத்தம்—பசுவைக் கறப்பதற்கு முன்பு கன்றுக் குட்டியை ஊட்ட விடுகிறோம். கன்று பால் சாப்பிட்டதும் பசுவின் மடியை அலம்புவதில்லை. கன்றின் எச்சில் பட்ட காம்பிலிருந்து கறந்த பால் பரிசுத்தம். அதை ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்யலாம்.

இறந்தவன் போர்வை பரிசுத்தம்—பட்டுப்பூச்சி இறந்த பிறகுதான் அதன் உடலிலிருந்து பட்டு நூலை

இழுத்து அதை ஆடையாக நெய்கிறார்கள். அதை உடுத்துவது சிறந்தது. ஆண்டவனுக்கு அது உவப்பானதே! (ஆனால் இப்பொழுதெல்லாம் வியாபார நிமித்தம்—அப்பூச்சிகளைச் சாகவிடாமல்—தாங்களே கொன்று, பட்டு நூலை எடுத்துக் கொள்கிறார்ர்கள். அந்தப் பாபத்துக்கு அஞ்சியே காஞ்சிப் பெரியவர் பட்டு உடுத்தவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறார்.)

" வாந்திபண்ணினது பரிசுத்தம்—மருத்துவத்தில் தேனை மிகவும் சிறந்ததாகக் கொள்கிறார்கள். தேனீ தன் உடலில் சேகரித்து வைத்துப் பிறகு வெளியே கக்கிய பொருள்தான் தேன். ஆனால் ஆண்டவனுக்கு உவப்பானதே!

இந்த அரிய விளக்கங்களைக் கேட்டதுதான் தாமதம். உடனே அவன் மீண்டும் தன் பழைய குருவைத் தேடி ஓடி விட்டான். நெடுஞ்சாண் கிடையாக நமஸ்கரித்து மன்னிப்பு கேட்டுக்கொண்டு, மீண்டும் அவரடியில் இருந்து கொண்டு ஒழுங்காகப் பாடம் கேட்கத் தொடங்கினான்.

பொதுவாக, சமுதாயமானது கட்டுக்கோப்புத் தளர்ந்து போகாமல் வளர்ந்து கொண்டு போகவேண்டும். அந்தச் சமுதாயத்துக்கேற்றபடி பிரதியொரு மனிதனும் தனது தாய்நாட்டின் உண்மையான பிரஜையாக மட்டுமின்றி, உலகப் பிரஜையாகவும் வாழ்க்கையை நடத்தவேண்டும். என்றும் நிலைத்திருப்பவை எவையோ அவை மீதே மனிதன் நாட்டம் செலுத்தவேண்டும். இவையே நம் பண்டைக் கல்வி முறையின் குறிக்கோளாகும்.

குரு பக்தியைப் பற்றி நமது காஞ்சிப் பெரியவர்கள் இதோ என்ன சொல்கிறார் என்று கேளுங்கள்:

"எது தர்மம்? அந்த தர்மத்தை எப்படி அநுஷ்டானம் செய்யவேண்டும் என்று சொல்வது வேதம். வேதம் பூர்வகாண்டம், உத்தரகாண்டம் என்னும் இரண்டு பிரிவுகளைக் கொண்டது. நாம் செய்ய வேண்டிய காரியங்களை அநுஷ்டானம் செய்வதற்கு உபயோகமாக இருப்பது கர்மகாண்டம் என்னும் பூர்வகாண்டம். இதையே மீமாம்சா சாஸ்திரம் என்பார்கள். இதை இயற்றியவர் ஜைமினி மகரிஷி. வைதிக கர்மாக்களை முறைப்படி செய்வதால் சித்த சுத்தி உண்டாகிறது. அதன்பிறகு அத்வைத நிலையைப் பரம்பொருளை—அடையலாம். அத்வைத நிலையைப் பற்றிச் சொல்வது உத்தரகாண்டம். உபநிஷத்துக்கள் அடங்கிய வேதாந்தம் அது.

உழுத இடத்தில்தான் விதை முளைக்கும். நாம் எவ்வளவோ உபந்நியாசங்களைக் கேட்டாலும் நமக்குத் துக்கம் போகவில்லை. ஏன்? சித்த சுத்தி செய்து கொண்டு கேட்கவில்லை. முதலில் சித்தத்தைச்சுத்தமாக—சாந்தமாக—வைத்துக் கொண்டு கேட்கவேண்டும்.

அதற்காக என்ன செய்யவேண்டும்? வைதிக கர்மாக்களை நன்றாகச் செய்து அவற்றைப் பகவானுக்கு அர்ப்பணம் செய் என்கிறார்கள் பெரியவர்கள். அதுதான் மனசில் சாந்தத்தை உண்டாக்கும். அது உழுவதற்குச் சமானம்.

கர்மாக்களால் மனசை உழுதான பின் நீர் பாய்ச்ச வேண்டாமா? அதுதான் பக்தி. ஆசார்ய பக்தி ஈஸ்வர பக்தியை விட சிரேஷ்டமானது. குருபக்தி இருந்தால் மனம் தானாகச் சாந்தத்தை அடையும். பெரியவர்களுக்குமுன் ஒன்றை வாசித்தாலும், கேட்டாலும் மனம் ஒரு வித அமைதியோடு இருக்கிறது. கிளப்பிலும் லைபரரியிலும் அப்படி இருப்பதில்லையே!

மனம் குருபக்தியில் நனைந்தால் உடனே பயன் உண்டாகும். அதனால்தான் மகான்களிடத்தில் உபதேசம் கேட்கவேண்டும், குருமூலமாகக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்கிறார்கள். நாம் எவ்வளவோ படித்திருக்கலாம். ஆனாலும் நமக்குள்ள அஞ்ஞானத் தடிப்புக் குறையவில்லை. அது எந்த இடத்தில் குறையுமோ, அந்த இடத்தைத் தேடவேண்டும்.''

ஒன்றை மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அப்படியானால், நீங்கள் தண்ணீருக்குள்ளே மூழ்கியிருக்கும்போது காற்றுக்கு எவ்வளவு தவிப்பீர்களோ, அவ்வளவு தவிப்புடன் ஞானத்துக்கு ஆசைப்படுங்கள். அப்போதுதான்அது உங்களுக்குக் கிடைக்கும்.

## 10

**வே**தங்களில் விதிக்கப்பட்ட காரியங்களை ஏன் செய்யவேண்டும், எதற்குச் செய்யவேண்டும் என்று கேட்பதற்கு யாருக்கும் தகுதி கிடையாது. அத்தகைய வேதங்களில் விதிக்கப்பட்ட காரியங்களைத்தான் மஹரிஷிகள் அனுபவித்துச் சிறிது விளக்கமான முறையில் ஸ்மிருதிகள் என்ற பெயரில் அநேக நூல்களை இயற்றியுள்ளார்கள். வேதத்தில் இல்லாத விஷயங்களை வேதத்தில் சொல்லமாட்டா!

ஞானத்தை அடைவதற்கும், உபாசனை செய்வதற்கும் மனதிற்குச் சித்த சுத்தி ஏற்படவேண்டும். அந்தச் சித்த சுத்தி ஏற்பட வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களை மனிதன் செய்யவேண்டும்.

வேதத்தின் முன்பாகத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களை முதலில் செய்துவிட்டு, அதன் பலனை இறைவ

னுக்கு அர்ப்பணம் செய்துவிட்டுப் பிறகு அதன் பலனாகச் சித்த சுத்தியை அடைகிறான். மனம் ஏகாக்கிரத்தைப் பெற்ற அதே மனிதன் உபாசனையினால் ஞானத்தைப் பெற முயலுகிறான்.

வேதங்களில் உபநிஷத் பாகம் தவிர மற்றப் பாகங்களில் இந்திரன் முதலிய தேவதைகள் வழிபாடு மாத்திரமே சொல்லப்பட்டிருக்கும். அந்தத் தேவதா வழிபாட்டின்மூலம், மனித வாழ்க்கைக்குத் தேவையான எல்லா விதமான பொருள்களை அடைவதற்கு, உபாயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இதோ யஜுர்வேதம் என்ன சொல்கிறது என்று பாருங்கள்:

"இந்த உலகத்திலே அறிவாளிகள், சூரர்கள், வீரர்கள், அறநெறியாளர்கள் ஆகியோர் நிறைந்திருக்க வேண்டும். மக்களெல்லாரும் தம்மை ரட்சித்துக்கொள்ள வல்லவர்களாக விளங்க வேண்டும். நாட்டை ஆள்பவர்களும் சமுதாயத்தலைவர்களும் ஞானாசிரியர்களும் பகை காத்து மேன்மையுற்றுத் திகழவேண்டும். கல்வி கேள்விகளில் விருப்பமும் தானசீலமும் நிறைந்து தீய ஆசைகளை அகற்றி மக்கள் வாழவேண்டும். எங்கும் தன தானியங்கள் நிறைந்திருக்கட்டும். கால்நடைச் செல்வம் செழித்திருக்கட்டும். மக்கள் அனைவரும் நற்புத்தியுடன் நல்வாழ்வு வாழட்டும்."

உபநிஷத் பாகங்களோ, ஒவ்வொரு ஜீவனும் துக்கத்திலிருந்து பரிபூரணமாக விடுபடுவதற்காக உபாயங்களான உபாசனைகளும், ஞானங்களும் கூறுகின்றன.

வேத சப்தங்கள் எந்தெந்த ஸ்வரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அதைச் சிறிது மாற்றினாலும் அர்த்தமே மாறிப் போய்விடும். உச்சரிப்பும் அப்படித்தான்.

ஆகவேதான—வேதத்தை—ஒருவர் சொல்லக் கேட்டு, குரு உபதேச மூலமாகவே வேத சப்தமானது வந்து கொண்டிருக்கிறது.

சுலோக வடிவான—ரிக் பாகங்களும், வசன நடையான யஜுர் பாகங்களும், கான வடிவான காம பாகங்களும், வேத சப்தங்களில் உள்ளன. 'த்ரயீ' என்று இம் மூன்று வேதங்களும் வைதிக காரியங்களுக்கான ஹோமம், யாகம் முதலியவைகளுக்கு உபயோகப் படுவன.

அதர்வண வேதம், மந்திரப் பிரயோகங்களுடன் ராஜநீதி, தர்மநீதி இவைகளின் பலன்களை அடைய ஒரு சாதகமாக அமைந்துள்ளது.

வேத ஒலியானது ஸ்வரத்தையும் உச்சரிப்பு சப்தத்தையும் பிரதானமாக உடையது. இசை ஞானத்துக்கு எப்படி சப்த ஸ்வரங்கள் அமைந்துள்ளனவோ அது போன்று, உதாத்தம் — அனுதாத்தம் — ஸ்வரிதம் — பிரசயம் என்பதைப் போன்ற ஸ்வரங்கள் வேத சப்தத்திற்கு உண்டு.

வேத சப்தங்கள் எல்லையில்லாமல் ஆகாயத்தில் மிகுதியாக நிறைந்து கிடக்கின்றன.

இறைவனுக்கு அழிவு கிடையாது என்றாகிவிட்ட பிறகு அவரது மூச்சுக் காற்றான வேதங்களுக்கு அழிவேது ?

ரிஷிகள் வேதத்தை விண்ணிலிருந்து கிரகித்தார்கள். அதனால் அவர்களுடைய பெயரில் சில விளங்குகின்றனவே யொழிய, அவர்கள் வேதங்களைச் செய்யவில்லை.

வேத நூல்கள் இன்று புஸ்தக வடிவத்தில் காணப் பட்டாலும், அது ஒருவராலும் ஒருகாலத்திலும் தன் னிச்சையாகப் புதிதாக எழுதப்படாமல் 'எழுதாக் கிளவி—செய்யாமொழி' என்ற பெயர்களுடன் சப்த ரூப மாகவே ஒலி வடிவமாகவே எப்பொழுதுமே வேத சப்தங்களாக இருந்து கொண்டிருக்கின்றன.

நம்முடைய தர்ம நூல்களுள் முக்கியமாக உள்ளவை பதினெட்டாகும். அவை நான்கு வேதங்கள், நான்கு உபவேதங்கள், ஆறு வேத அங்கங்கள், ஒரு புராணம், ஒரு தர்மாஸ்திரம், ஒரு தர்க்க சாஸ்திரம், ஒரு மீமாம்ஸா சாஸ்திரம் ஆகும்.

வாழ்க்கையில் ஏற்படும் துன்பங் களைப் பற்றி சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீட ஸ்ரீ மகா சந்நிதானம், ஆத்மிகத்தோடு இணைந்து எத்துணை அழகாக விளக்கி யிருக்கிறார் பாருங்கள்.

"ஆன்மிகப் பாதையில் நாம் ஏன் செல்லவேண்டும்? அதனால் என்ன லாபம்? பரம்பொருளை அறிவதற்காக, உபநிஷத்துக்களில் கூறப்பட்டவற்றைக் கேட்பதும் அவற்றைச் சிந்திப்பதும், அவற்றில் ஒரு நிலைப்படுத்து வதும் தேவைதானா? என்று பலருக்குச் சந்தேகம் எழுகிறது.

இந்தக் கேள்விக்கான பதிலை ஆராய்வதற்கு முன்பு நாம் சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

நாம் எல்லோரும் இன்பம் பெறவே விரும்புகிறோம். துன்பம் என்றால் தொலைதூரம் செல்கிறோம். எல்லோ ரும் வெறுக்கக்கூடிய ஒன்று துன்பமாகும். புலியைக் காணும் ஒருவன் அதனிடம் விருப்பத்தோடு நெருங்குவ தில்லை. காரணம் என்னவென்றால், புலி ஒரு கொடிய மிருகம். அது தன்னைத் தாக்கினால் தனக்குத் துன்ப

முண்டாகும் என்று கருதும் மனிதன் புலியையே வெறுக்கிறான். ஆகவே நாம் புலியை வெறுப்பதற்குக் காரணம், அது தரும் துன்பம். எனவே, நாம் இயற்கையாகவே வெறுக்கக்கூடிய ஒன்று துன்பமாகும்.

நாம் அன்றாடம் செய்யும் முயற்சிகளில் முக்கால் வாசியும் துன்பத்தைப் போக்குவதையே நோக்கமாகக் கொண்டிருக்கின்றன. துன்பமென்கிற பொருள் உலகில் இல்லாவிட்டால் ஆன்மிகச் சாத்திரங்கள் தேவையில்லாமல் போய்விடும். ஆனால், துன்பத்தை நாம் அன்றாடம் அநுபவித்துக்கொண்டுதான் இருக்கிறோம். துன்பங்கள் மூன்று வகைப்படும்.

1. ஆத்யாத்மிகம். 2. அதிதைவிதம். 3. ஆதிபௌதிகம்.

பித்தம் வாதம் க்லேஷ்மம் இவை ஒழுங்காக இல்லாமலிருந்ததால் ஜுரம் போன்ற வகையில் துன்பமேற்படும். இவை உடல் சம்பந்தப்பட்ட துன்பமாகும்.

மனசினுடைய சம்பந்தம் உள்ள துன்பங்களுமுள்ளன. ஆசை, கோபம், பயம், பொறாமை போன்றவற்றால் மனசு சம்பந்தப்பட்ட துன்பங்கள் ஏற்படுகின்றன.

இவ்வகையான ஆத்யாத்மிகத் துன்பத்தினால் உடலுக்கும் மனசுக்கும் துன்பம் ஏற்படுவதால்தான் அதற்கு அப்பெயரே ஏற்பட்டது.

(ஆதி என்பது மனம். புத்தியில் ஏற்படும் சித்த சுவாதீனம் அற்றுப் போதல், பைத்தியம், ரேக்ஷை மயக்கம் போன்ற பல கஷ்டங்கள், காம, குரோத, மோக, மத, மாச்சரிய, ராக, துவேஷ, பொறாமை, பயம், வஞ்சனை, அகந்தை, மமதை முதலியன அத்யாத்மிக விஷயங்களுக்குக் குந்தகம் விளைவிக்கும் துர்க்

குணங்கள். மற்றும் இவைகள் யாவும் மனநோய்களுக்கு ஆதி எனக் கூறப்படுகிறது.

இரண்டாவது சரீரத்திற்கு ஏற்படும் நோய், வியாதி எனப்படுகிறது. இக்கஷ்டங்கள் எல்லாம் நமக்கு சர்வ சாதாரணமாக வந்துகொண்டே இருக்கிறது. இக்கஷ்டங்களை நாம் அனுபவித்துக்கொண்டு இருக்கிறோம்.),

அடுத்த வகை ஆதிபௌதிகம். பூதங்கள், மழை காற்று, தீ முதலியவற்றினால் வரக்கூடிய துன்பம் ஆதி பௌதிகத் துன்பம் எனப்படும்.

(மனிதர், பசு, பக்ஷி, புழு, பறவைகளால் ஏற்படும் துன்பங்களையும் இதில் இணைத்துக் கொள்ளலாம்.)

பிசாசு, விபத்து போன்றவைகளினால் ஏற்படக் கூடிய துன்பம் ஆதி தெய்வீகமெனப்படும்.

(வாயு, அக்கினி, ஜலம், விருஷ்டி, தேக, காலநட்சத்திர, சூரிய, சந்திர முதலிய அபிமான தேவர்களால் ஏற்படும் துன்பங்களுமாகும்.)

இவ்வாறு நாம் மூவகைத் துன்பங்களையும் அநுபவித்து வருவதால் துன்பம் என்பது உலகில் இல்லை என்று கூறமுடியாது.

துன்ப உலகிலிருந்தும், மனிதன் துன்பத்தைக் கண்டு வெறுப்பு கொள்ளாமல் இருந்துவிட்டால், அப்போதும் சாஸ்திரங்களுக்கு அவசியமில்லை. ஆனால், நிலைமை அவ்வாறில்லை. ஆகவே சாஸ்திரங்கள் மிகத் தேவை.

அடுத்ததாக, துன்பமிருக்கலாம். வெறுப்பும் கொண்டிருக்கலாம். அந்தத் துன்பத்தை நம்மால் முழுவது

மாக நாசம் செய்யவே முடியாதென்றால் அப்போதும் சாஸ்திரங்கள் தேவையில்லை.

ஆகாசம்—இசம்—நாசமற்றது. அதை என்ன செய்தாலும் நம்மால் அழிக்க முடியாது. துன்பத்தை முழுவதும் அழிக்கலாம். என்றாலும் அதை அழிப்பதற்கு நமக்கு தெரியாமலிருந்தால் அப்போதும் துன்பத்தை அழிக்க முடியாது. ஆகவே, துன்பத்தை நம்மால் முற்றும் அழிக்க முடியாது என்ற நிலையிலிருந்தாலும், அப்போதும் சாஸ்திரங்கள் இருந்து பயனில்லை என்றாகும். ஆனால் உண்மை அப்படியல்ல.

''நரதி சோகமாத் மவித்''

ஆத்மாவை அறிந்தவன் கவலையைக் கடந்து விடுகிறான் என்று சொன்ன ரீதியில் துன்பமனைத்தும் இல்லாமலிருக்கும் நிலை உள்ளது தெளிவாகிறது.

அடுத்ததாக, உபநிஷத்துக்களில் கூறப்பட்டவற்றைக் காட்டிலும் வேறு வழிகள் இருப்பின் உபநிஷத்துக்கள் தேவையல்ல என்றாகும். ஆனால் வேறுவழியேயில்லை. ஏன் என்றால், எல்லாவிதமான துன்பங்களை நீக்குவதற்கும் நாம் வேறு என்ன என்னவோ முயற்சிகள் எடுத்துக் கொண்டு பார்த்தாலும், இது வரையிலும் நமக்குத் துன்பங்களிலிருந்து விடுதலை கிடைக்கவில்லை. ஆகவே ஆத்மாவைப் பற்றிய சாஸ்திரங்கள் மிகத் தேவையாகின்றன.

சிலர் தம்முடைய வியாதிகளைக் குணப்படுத்திக் கொள்வதற்காகச் சில மருந்துகளை உட்கொண்டாலும் அவர்களுக்கு மீண்டும் நோயே வராது என்ற கூறமுடியுமா? அப்படி நோயிலிருந்தே விடுதலை கிடைப்பதில்லை என்பதை நாம் பார்க்கிறோம்.

போகங்களை அனுபவிப்பதன் மூலம் ஆசைகளைத் தீர்த்துக் கொண்டு விடலாமென்று யாராவது எண்ணினால் அது மிகவும் முட்டாள்தனமானது. தீயை அணைக்க நெய்யை ஊற்றினால், தீ மேலும் மேலும் வளருமே தவிர, குறையாது.

அதுபோல்தான் ஆசையும், சுகத்தையும் அநுபவிக்க அநுபவிக்க வளர்ந்துகொண்டே போகும். ஆகவே, நாம் ஒரு பெரிய சிக்கலில் மாட்டிக்கொண்டிருக்கிறோம். ஆசை நம்மைப் பலவகையிலும் அலைக்கழிக்கிறது. ஆசைதீர நாம் காணும் வழிகள் எல்லாம் அறவே துன்பத்திலிருந்து விடுதலையைக் கொடுப்பதில்லை.

ஆகவே, ஆன்மீக நெறிகள்தாம், சாஸ்திரங்கள் தாம் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான, மோட்சத்துக்கான வழியைக் கூறுகின்றன.

விவேகம் உள்ளவர்களுக்கு மோட்சத்தில் விருப்பம் ஏற்படுகிறது. விவேகம், வைராக்யம், தன்னடக்கம் போன்ற ஆறு குணங்களுள்ள மனிதன், சாஸ்திரங்கள் மற்றும் குருவின் உபதேசங்களைக் கேட்டு, அவற்றைச் சிந்தித்து, மனத்தை ஒருநிலைப்படுத்தி தத்துவ அறிவு பெற்றுப் பேரின்பத்தை அடைகிறான். ஆனால், இது சொல்வதற்கு மிகவும் சுலபமானது. கேட்பதற்கு அதை விட சுலபம். ஆனால் அதன்படி வாழ்க்கையை நடத்துவதுதான் கடினமானது.

எந்த ஒரு மனிதனுக்கும் எப்போதும் பிரியமாயுள்ள பொருள் ஏதுமில்லை. பொருள்கள் எல்லாம் ஒருநாள் விரும்பத்தக்கதாக இருந்தாலும், மற்றொரு நாள் வெறுப்பிற்குரியதாக இருக்கின்றது. அன்று வெறுப்புக்கு உரியதாக இருந்தது இன்று விரும்பத்தக்கதாக இருக்கிறது.

எது எப்போதும் விருப்பத்துக்கு உரியது ? ஆத்மா ஒன்றுதான் அப்படிப்பட்டது. நமக்குப் பிரியமாக இருப்பவர்கள் நாமேதான். நமது ஸ்வரூபத்தைத்தான் 'ஆத்மா' என்று பெரியோர்கள் விளக்கியுள்ளார்கள். விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்உறக்க நிலை ஆகிய மூன்று நிலைகளிலும் மனிதன் தனக்குத்தான் மிகவும் பிரியமானவன்.

விசார சக்தி உள்ள நாமே நம் ஸ்வரூபத்தைப்பற்றி விசாரம் கொள்ளாமல் மற்றவற்றைப் பற்றியே விசாரம் செய்கிறோம். அதைக் காட்டிலும் அறிவில்லாத செயல் கிடையாது. நமக்குத் தெரிந்த விஷயத்தை விசாரணை செய்யவேண்டியதே இல்லை. நமக்குத் தெரியாத விஷயத்தைப்பற்றி விசாரம் செய்வது சாத்தியமே இல்லை. நாம் இருக்கிறோம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால் நமது உண்மையான ரூபம் எவ்வாறுள்ளது என்பதுதான் தெரிவதில்லை.

இதைப்பற்றி விசாரம் செய்வதற்கு நமக்கு ஒரு ஸாதனம் தேவைப்படுகிறது. இந்த ஸாதனம் இல்லாமல் நம்மால் ஒன்றும் செய்ய இயலாது. ஆதிசங்கர பகவத் பாதர்கள் எழுதியுள்ள நூல்களே அம்மாதிரி ஆன்மீக ஞானத்தைப் பெறுவதற்கான தகுந்த சாதனங்களாகும். அந்த சாதனங்களை நாம் கற்று அவற்றின் வழியே கடந்து கொஞ்சங்கூட துன்பமே இல்லாத நிலையை பேரின்ப நிலையையடைய வேண்டும்.''

மனிதன் கற்றே கடைத்தேற பகவத் காரியங்களிலும், ஹோம, யக்ஞாதிகளிலும் உண்மையான பக்தியுடன் ஈடுபட வேண்டும். மகான்களாலும் சாதுக்களாலும் செய்யப்படும் புனித காரியங்களுக்கு மக்கள் ஆதரவு தரவேண்டும்.

இக்கலியுகத்துக்கு உகந்தது—முக்கியமானது—ஒவ்வொருவரும் பகவன் நாமாவை சிரத்தையோடு உள்

ஞுணர்வுடன் ஸ்மரணம் செய்து அவன் திருவடிகளை சரணடைந்து விடவேண்டும். நிச்சயம் நமக்கும் உலக க்ஷேமத்திற்கும் இவை நல்ல பலனைத் தரும் என்பதில் ஐயம் இல்லை.

கலியுகம் மிகவும் வேகமாகச் செல்லும் கோரமான காலமாகத் தெரிகிறது.

விஞ்ஞானத்தின் வளர்ச்சி உச்சகட்டத்தை அடையும் காலம். எந்த நிலையிலும் எப்பொழுது முடிவு பெறும் என்று சொல்ல முடியாது. இந்த நிலையில் ஞானமார்க்கமும் உச்சநிலையில் வளர்ச்சி பெற்றால்தான் உலகம் சற்று சாந்தியும் மகிழ்ச்சியும் அடைய முடியும்.

வேதம் எதைச் செய்யவேண்டும் என்று சொல்வதைப் போலவே, எதைச் செய்யக்கூடாது என்றும் தெளிவுபடுத்துகிறது.

இறைவனால் அருளப்பட்ட வேதங்களின் முழுப் பகுதியும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. கிடைத்துள்ளது சிறுபகுதியே. அந்தச் சிறுபகுதியையும் கைநழுவ விடாமல் நாம் காப்பாற்றவேண்டும். வேதங்களைப் படிப்பதால்—பாராயணம் செய்வதால் பிறவிப் பந்தங்களிலிருந்து விடுதலைகிடைக்கிறது.

வேதம் மூன்று தன்மைகளைத்தெளிவுபடுத்துகிறது. 'தத்துவம்' என்பது கடவுளின் வடிவங்களையும் குணங்களையும் சொல்லுவது. 'ஹிதம்' என்பது கடவுளை அடையும்படிக் கட்டுகளை விளக்குவது. 'புருஷார்த்தம்' என்பது கடவுள் உணர்வின் விளைவுகளை எடுத்துக் காட்டுவது.

வேதங்களின் விளைவாக எழுந்த சாஸ்திரங்களில் குறைகள் இருக்கலாம். அவை மனித முயற்சியில்

இயற்கையாகக் காணப்படும் குறைகள் என்றே சொல்ல வேண்டும். வேதம் இறைவனாலேயே அருளப்பட்டவை. அப்படியிருக்க அதில் குறை இருக்க முடியுமா? நல்ல நடத்தை உடையவனாக இருக்க அவை விழுமிய துணை ஆகிறது.

வேதங்களை மனம் போனபடி மாற்றி உச்சரிக்க நமக்கு உரிமை இல்லை. வேத பண்டிதர்கள் நாட்டின் எந்தப் பகுதியில் இருந்தாலும், அவர்களை ஒன்றுகூட்டி வேதங்களைச் சொல்லச் சொன்னால் ஒரே குரலில், ஒன்று போலவே சொல்லுவார்கள்.

தர்மத்துக்கு இலக்கணம் வகுத்துக் கூறுவது சற்று கஷ்டமே. தெய்வீகச் சட்டம் என்று அதைச் சொல்லலாம். நல்ல மார்க்கம் என்று நவிலலாம். அறநெறி என்று குறிப்பிடலாம். ஒழுக்க மார்க்கம் என்று சொல்லலாம். எல்லாவற்றுக்கும் மேலாக உலகைப் பரிபாலிக்கும் இறைவனின் பேராற்றல் என்றும் அதைக் குறிப்பிடலாம். ஒவ்வொருவரும் தர்ம மார்க்கத்தில் நின்று ஒழுக எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும். தர்மத்தைப் போற்றி, அதர்மத்தை அப்புறப்படுத்த வேண்டும் என்று, எல்லாச் சாஸ்திரங்களும் எடுத்துச் சொல்லுகின்றன.

ஆனால் நடைமுறை வாழ்க்கையில் தர்ம வழியைக் கடைப்பிடிக்கும்போது, நிறையக் கஷ்டங்களும், சோதனைகளும் ஏற்படவே செய்யும். தர்ம மார்க்கத்தில் ஆரம்பத் தொல்லைகள் இருந்தாலும், முடிவில் தர்மம் அதர்மத்தை வெற்றி கொள்ளவே செய்யும். அப்படி கஷ்டங்கள் ஏற்படும்பொழுது, விரக்தி அடைதல் கூடாது. பாண்டவர்கள் அனுபவிக்காத தொல்லையா? இருந்தும் பகவானின் உதவி தங்கள் பக்கம் இருக்கிறது என்கிற நம்பிக்கையை அவர்கள் இழக்கவே இல்லை!

வேதங்களின் உபதேசங்களையும் பாரதக் கதை உள்ளடக்கிக் கொண்டு இருக்கிறது. அதன் காரணமாக, அதற்குப் 'பஞ்சம வேதம்' என்கிற பெயரும் உண்டு. பாரதக் கதையில் வரும் குருக்ஷேத்திரப் போர், நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெற்று வரும் நிரந்தரமான போராட்டத்தின் அடையாளமாகவே குறிக்கப் படுகிறது.

இந்த உலகம் தோன்றிய காலம் தொட்டு, மனிதன் அமைதியையும் மகிழ்ச்சியையும் தேடி அலைந்து கொண்டே இருக்கிறான். அவைகளும், அவன் பிடிக்குள் அகப்படாமல் அவனை விட்டு எட்டி விலகிச் சென்று கொண்டே இருக்கின்றன. அமைதியையும் ஆனந்தத்தையும் எங்கே போய்த் தேடுவது, அது நமக்குள்ளேயே இருக்கும்போது ?

அப்படி இருந்தும், நம்மால் அவற்றை ஏன் அனுபவிக்க முடிவதில்லை? ஆன்மீகத்தில் நமக்குள்ளே அறியாமையே அவற்றை நாம் உணர முடியாமல் செய்து விடுகிறது. நமது அஞ்ஞான இருளை அகற்றிவிட்டால், அன்பையும் ஆனந்தத்தையும் பெற்று விடலாம்.

அதற்கு வழி என்ன? ஒழுக்கம், பக்தி, உண்மை ஆகிய அரிய குணங்களைப் பெற்றுள்ள பெரியவர்களின் சகவாசம், முதலில் நமக்குக் கிடைக்க வேண்டும். அது கிடைத்துவிட்டால், தீயவைகளை ஒதுக்கி விடும் சுபாவம் நம்மிடம் வளரத் தொடங்கி விடும்.

அதன் பிறகு நமக்குப் பற்றற்ற நிலை உருவெடுக்கக் கேட்பானேன்? எந்த அளவுக்குப் பற்றற்ற நிலை நமக்கு ஏற்படுகிறதோ, அந்த அளவுக்கு மன அமைதியினையும் நம்மால் பெறமுடியும். ஒரு குடும்பஸ்தன்கூட ஆன்மீகப் பயிற்சியை—வேதங்களைச் செவிமடுத்தோ, அல்லது படித்தோ—முறையாகப் பெறுவதன் மூலம்,

குடும்பக் கடமைகளைச் செய்துகொண்டே, பற்றற்ற மனநிலையை வளர்த்துக் கொண்டு விடமுடியும்.

நாம் இறைவனுக்காக ஏங்குவது போலவே இறைவனும் நம் மத்தியில்—பக்தர்களின் மத்தியில் இருக்க மிகுந்த அக்கறை காட்டுகிறான். இதோ அதைத் தெளிவாக உணர்த்தும் கதையைக் கேளுங்கள். இறைவன்—ஒவ்வொரு நாள் காலையிலும்—எழுந்தவுடன் தான் பத்திரமாக வைத்திருந்த சிறிய பெட்டி ஒன்றை வலம் வந்து வணங்கி வந்தாராம். அவர் ஏன் அப்படிச் செய்கிறார் என்பது இறைவிக்கு விளங்கவில்லை. ஒருநாள் அதி ஆவலாய் அந்தப் பெட்டியைத் திறந்து பார்த்த பொழுது, அதில் மண்ணும் புழுதியும் நிரம்பியிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு இறைவனிடம் விளக்கம் கேட்டார்கள் இறைவி. அதற்கு இறைவன் என்ன சொன்னான் தெரியுமா ?

'என்னுடைய பக்தர்களின் பாதங்களிலிருந்து நான் சேகரித்த புழுதிதான் இந்தப் பெட்டியில் இருக்கிறது' என்றார். இதனால் பகவானிடத்தில் பக்தர்களுக்கு ஈடுபாடு இருப்பதைப் போலவே, பக்தர்களிடத்தில் பகவானுக்கும் ஈடுபாடு உண்டு என்று விளங்குகிறதல்லவா !

ஒருவன் அடையும் துன்பங்களுக்கெல்லாம், பூர்த்தி அடையாத அவனுடைய ஆசைகளே காரணமாக அமைகிறது. அவன் பலன் கருதாமல் தன்னுடைய கடமைகளைச் செய்யும்பொழுது, ஏ மா ற் ற ம் அவனுக்கு ஏற்பட்டு வருத்தத்துக்கு அவன் உள்ளாவதில்லை. ஆகவேதான் பலனைப் பற்றிக் கவலைப்படாமல் கருமத்தை மேற்கொள்ளும்படி பகவான் கேட்டுக் கொள்கிறார்.

கடவுளுக்குப் பிரியமான காரியங்களைச் செய்கிற வரையில் பாவம் என்கிற ஒன்று நிகழ வழியே இல்லை என்று சுக முனிவர் விளக்கியுள்ளார். தீய எண்ணங்கள் மனத்தை ஆக்கிரமித்துக் கொள்ளாமல் இருக்க, இறைவனின் நாமத்தை எப்போதும் ஜபித்துக் கொண்டிருப்பது அவசியம் என்றும் அவர் எடுத்துக்காட்டியுள்ளார்.

ஒரு மனிதன் சிறந்தவனாக விளங்க, வாழ்க்கையில் அவனுக்கு எது துணை புரிகிறது? அவன் கற்கும் சாத்திரங்கள் அவனுடைய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக அமைகின்றன. வேதங்கள் உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரம் ஆகியவை ஆன்மீக அறிவின் ஊற்றுக் கண்களாகத் திகழ்ந்தாலும் அவைகளில் உள்ள அர்த்தத்தை அனைவரும் படித்துப் புரிந்துகொள்ளுவது என்பது சற்று சிரமமே! ஆகவேதான் கடவுளின் தாத்பரியத்தை வியாச முனிவர் மகாபாரதக் கதை மூலம் வெகு அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். மகாபாரதமே ஒரு தர்ம சாஸ்திரம்தான். அதற்கு 'ஐந்தாவது வேதம்' என்ற பெயரும் உண்டு.

வழிபாட்டுக்கு உரியவை வேதங்கள். இறைவனை அடையும் வழி அவற்றில் தெளிவாக எடுத்துக்காட்டப் பெற்றிருக்கின்றன. அதனால், வேதங்களை முறையாகக் கற்றவர்கள், நம்முடைய மரியாதைக்கு உரியவர்களாக ஆகின்றார்கள். அவர்களை மதிப்பது வேதங்களை மதிப்பதற்கு ஒப்பாகும். வேதம் கற்ற சிலரிடம் நல்லியல்புகள் இல்லாமல் இருக்கலாம். அதற்காக நாம் அவர்களைப் புறக்கணிப்பது சரியாகாது.

பக்தி மார்க்கத்தில் நிற்பவர்கள், தங்களுடைய அன்றாட அலுவல்களையும் ஈஸ்வர சேவையாக எண்ணி, மகிழ்ச்சி கொள்கிறார்கள். கடவுளின் சேவகர்கள் என்று தங்களை எண்ணிக்கொள்வதில் அவர்

களுக்கு அலாதியான அனைத்தையும் ஈஸ்வரனுக்கு அர்ப்பணித்துவிடும் நிலையை, அவர்கள் பெற்று விடுகிறார்கள்.

ஹிந்து மதம் லௌகீக வாழ்க்கைக்குக் கொடுத்துள்ள முக்கியத்துவத்தை ஒன்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம். நம்முடைய கடவுள்களும் மனைவியரோடு இல்லறம் நடத்திக் குழந்தைகளைப் பெற்று வாழ்ந்து காட்டியதாக ஐதீகம்.

மதம் என்பது வெறும் ஒழுக்கக் கோட்பாடுகளை மட்டும் உள்ளடக்கியது இல்லை. ஒருவன் ஒழுக்கமுள்ள வாழ்க்கை வாழலாம். பொறுப்புக்களைத் திறம்படக் கவனித்துக் கொண்டிருக்கலாம். கடமைகளைச் சிறப்பாக நிறைவேற்றிக் கொண்டிருக்கலாம். இருந்தும், இறைவனிடம் அவர்கள் அன்பு செலுத்தத் தவறிவிடுவார்கள். அதனால் அவர்களுடைய தர்மம் பயனற்றுப் போகிறது. தெய்வபக்தி இல்லாமல் யாராலும் முழு வளர்ச்சி அடைய முடியாது.

எந்தக் காரணம் பற்றியாவது கடவுளை நினைப்பது நல்லதுதான். ஆனால் பக்தி, உயர்வான நிலையில் உருவாக வேண்டும். மெய்யான பக்திக்கு நோக்கம் இருக்கக்கூடாது. அப்பழுக்கற்ற ஒழுக்கத்தில், தன்னலமற்ற அன்பில், அர்ப்பணிக்கப்பட்ட சேவையில் பக்தி வெளிப்படவேண்டும். அனுமன், பிரகலாதன், சுகர் ஆகியோரின் பக்தி ஒரு எடுத்துக்காட்டு.

நமக்குள்ள ஆற்றல் எல்லாம் இறைவன் அளித்தது என்கிற உணர்வு, நம் ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும். தெய்வீக ஆற்றல்தான் நம் அனைவரையும் ஆட்டிவைத்துக்கொண்டு இருக்கிறது. அவனுடைய அருள் இல்லாமல் எதுவும் நடக்காது.

இறைவனின் அன்பு உள்ளத்தை உணர உணர, அவனை நோக்கி ஈர்க்கப்படுவதும் தவிர்க்க முடியாத விஷயமாகி விடுகிறது. இந்த நெருக்கம் மேன்மேலும் அவரது அன்பை உணர வாய்ப்பாகி விடுகிறது. காலப் போக்கில் அவனிடம் உள்ள விருப்பமே பக்தியாகப் பரிண மித்து விடுகிறது.

இறைவனின் புகழ் பாடுவது ஓர் இன்பம். அவனது பெருமையை எண்ணித் தியானத்தில் இருப்பது மற்றொரு வகை இன்பம். இந்த இன்பங்களை அனுபவிக்கத் தொடங்கிவிட்டால் உலகத்தின் ஏனைய இன்பங்கள் எல்லாம் எவ்வளவு போலித்தனமானவை என்று புரிந்துவிடும். முடிவில், இறைவனோடு ஐக்கியமடைய வேண்டும் என்கிற பேரின்பம் மட்டும்தான் எஞ்சி நிற்கும்.

இறைவனின் சிறப்புக்களில் மிகவும் குறிப்பிடத்தக்கது, அவன் எவருக்கும் எளிதில் அகப்பட்டுக் கொள்ளக் கூடியவன் என்பதுதான். பகவான் சர்வ வல்லமை பொருந்தியவர். அப்படி இருந்தும், அந்தஸ்துப் பார்க்காமல், விரும்புகின்றவர்களுக்குச் சுலபத்தில் கிடைத்து விடக்கூடிய தயாள குணம் அவருடையது.

எளிய மக்களுக்கு அவர் கிடைக்காமல் போய்விட்டால் அவருடைய சர்வ வல்லமைக்கு அர்த்தம் இல்லாமல் போய்விடும். மற்றவர்களுக்கும் பாதுகாப்பளிக்கின்ற, அவருடைய கருணையால் யாருக்கும் பலன் இல்லாமல் போய்விடும். சர்வ சக்தி வாய்ந்த பகவான், வேண்டியவருக்கு, விரும்பி அழைத்தோருக்கு, விரைந்து வந்து உதவியதற்கு, நம்முடைய புராண இதிகாசங்களில் ஏராளமான சான்றுகள் உள்ளன.

பரம்பொருளை உணர்ந்து அனுபவிக்கும் இன்பம் மட்டுமே சாசுவதமானது.

இந்தப் பேரானந்தத்தை அடையும் மார்க்கங்கள் என்ன? பூஜை செய்தல், ஆலயங்களில் வழிபடுதல், ஈஸ்வர நாமத்தை ஜபித்தல், தியானத்தில் ஈடுபடுதல். இவை ஒருவனை இறைவனின் பேரின்பத்தை நோக்கி அழைத்துச் செல்லக்கூடியவை.

கடவுளின் அருள் இருந்தால் மட்டுமேதான், மனம் சரியான பாதையில் செல்லும். மத அனுஷ்டானங்களில் ஈடுபட்டு, ஈஸ்வரனையே எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்கு, தெய்வ தரிசனம் கிடைக்கவே செய்கிறது. எவ்வளவு சீக்கிரம் கிடைக்கிறது என்பது ஒருவனுடைய ஈடுபாட்டையும் முயற்சியையும் பொறுத்தது.

பக்தர்கள் தங்களுக்கு ஏற்படும் சோதனைகளைக் கண்டு பயப்படக்கூடாது. தங்களைப் புனிதப்படுத்தும் அனுபவங்களாக எண்ணி, அவற்றை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் உள்ளத்தை உறுதியானதாக ஆக்குவதற்றாகவும், மன அழுக்குகளைக் கழுவித் தூய்மைப்படுத்துவதற்காகவுமே பகவன் இந்தச் சோதனைகளை அனுப்பி வைக்கிறார். ஆகவே, இறைவனின் அருள் காரணமாகவே இந்தச் சோதனைகள் வருகின்றன என்பதைப் பக்தர்கள் உணர்ந்து கொள்ளவேண்டும்.

நிச்சயமாக, அது அவர்களுக்கு அளிக்கப்படும் தண்டனை அல்ல.

குந்திதேவி 'கண்ணா, எனக்குத் துன்பத்தையே கொடு. அப்பொழுதுதான் நான் உன்னை மறவாமல் இருப்பேன்' என்று வேண்டிக் கொண்டாள்.

இந்து சாஸ்திரங்கள் அனைத்தும் சரீரத்தின் நிலையாமையை வலியுறுத்திச் சொல்லாமல் இருப்பதில்லை.

நம்முடைய சரீரம் அழியக்கூடியது. அதில் குடிபுகுந்திருக்கும் ஆத்மா மட்டும்தான் அழிவில்லாதது.

வாழ்க்கை நிலையில்லாதது. மரணம் எந்தச் சமயத்திலும் நேரலாம் என்பதால், விரைந்து ஆன்மீகப் பக்குவம் பெற்று, தெய்வீகப் பேரானந்தத்தை அனுபவிக்க நம்மைத் தயார்படுத்திக்கொள்ள வேண்டும். ஆகவே வாழ்க்கையை ஈசுவர வழிபாட்டுக்கான வாய்ப்பாகக் கருதி, ஒரு நிமிஷத்தைக்கூட வீணாக்காமல், அவனுடைய பணியில் ஈடுபட வேண்டும்.

நம்முடைய வேதங்கள், ஒரு கிரஹஸ்தன் தன்னுடைய வருமானத்தை எப்படிச் செலவு செய்யவேண்டும் என்பதற்குத் தெளிவான வழிகளை வகுத்துக் காட்டியிருக்கின்றன. தர்மம் செய்வது, அதில் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

குடும்பத்தில் உள்ளவர்களின் தேவைகளைப் புறக்கணித்து விட்டுத் தர்மம் செய்யவேண்டும் என்று நம்முடைய சாஸ்திரங்கள், எந்த இடத்திலும் சொல்லவில்லை. மாறாக பெருமைக்காகவும், புகழுக்காகவும் தானதர்மம் செய்வதை, நம்முடைய வேத சாஸ்திரங்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு கிரகஸ்தனுக்கு, குடும்பக் கடமைகள்தாம் பிரதானம் என்றே சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆத்மா, ஈஸ்வர சொரூபத்தை எப்படித் தேடிச் செல்கிறது என்பதை, மணிவாசகப் பெருமான் அருமையாகத் தன்னுடைய பாடல்களில் சித்தரிக்கிறார். 666 பாடல்களில் ஆன்மீக வாழ்க்கையின் சாராம்சத்தைச் சொல்லியிருப்பதோடு, உபநிஷதங்களின் சாரத்தையும் வடித்துத் தந்து இருக்கிறார்.

உலகபந்தத்தில் கட்டுண்டு கிடக்கும் ஆத்மா, எப்படிக் குற்றங்கள் புரிந்து வீழ்ச்சி அடைகிறது என்பதையும், பிறகு தட்டுத் தடுமாறிச் சரியான தடங்கண்டு, மெல்ல மெல்ல ஈஸ்வரனை எப்படி நெருங்கிச் செல்கிறது என்பதனையும், மணிவாசகப் பெருமான் வெகு அழகாகப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடியிருக்கிறார். அதையெல்லாம் படித்து இன்புறலாமே!

பூஜை செய்யும்போது, மனம் கடவுளிடம் ஒன்றிப் போயிருக்க வேண்டும். இந்த ஐக்கிய பாவமும் உணர்ச்சி ஒன்றுதலும் மட்டுமேதான் பூஜையைப் பலனுடையதாக ஆக்கும். வெறும் மந்திர முணுமுணுப்போ, பூஜைக்கு எடுத்துக் கொள்ளும் நேரமோ முக்கியமானதில்லை. மனதை ஒருமைப்படுத்தி இறைவனிடம் செலுத்தாதவரை பூஜை, வெறும் சடங்காகவே இருந்து வரும்.

ஹிந்து சாஸ்திரங்கள், நம்முடைய பெண்களுக்கு உயர்வான இடத்தைக் கொடுத்துப் போற்றி வந்திருக்கின்றன. குடும்பத்திலும் சரி, சமூகத்திலும் சரி பெண்ணுக்குச் சிறப்பான இடம் இருந்திருக்கிறது. "ஹிந்து சமுதாயத்தில் பெண் அடிமையாக நடத்தப்படுகிறாள்" என்று சொல்வதற்கு ஆதாரமே இல்லை.

எல்லாச் சமயங்களிலும், ஆண்களின் சம பங்குதாரர்களாகவே பெண்களும் இருந்திருக்கிறார்கள். அதே சமயம், கணவனோடு இணங்கி அவர்கள் நடப்பது குடும்பத்துக்குச் சிலாக்கியமாக இருக்கும் என்கிற கருத்தும், நம்முடைய சாஸ்திரங்கள் சொல்கின்றன. கணவன் செய்யும் புண்ணிய காரியங்களினால் ஏற்படும் பலனில் சரிபாதி பெண்களுக்கும் உண்டு. ஆனால், கணவன் செய்யும் பாவங்களின் பலன் பெண்ணைச் சேராது என்று ஹிந்து சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

'ஆன்மிக விஷயங்கள் 'ரிட்டையர்' ஆன பிறகு கவனிக்க வேண்டிய ஒன்று' என்று பலரும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதைவிட விவேகமற்ற செயல் வேறு எதுவும் இருக்க முடியாது. ரிட்டையர் ஆன பிறகும், ஒருவன் வாழப் போகிறான் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது?

வாழ்நாளோ குறுகியது. அதில் சரிபாதி நேரத்தை தூங்கிக் கழித்து விடுகிறோம். பெரும் பகுதி குழந்தைப் பருவமாகவும், சிறுவயதுப் பிராயமாகவும் கழிந்து விடுகிறது. இதையெல்லாம் கழித்து விட்டுப் பார்த்தால் வாழ்நாள் என்பது மிகச் சொற்பமே!

அதனால்தான், பெரியவர்கள், ஆன்மீகத்தை அன்றாட வாழ்க்கையில் ஒரு பகுதி ஆக்கிவிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இளமையில் கல்வி கற்க வேண்டும் என்பதைப் போலவே, பக்தி உணர்வையும் இளமைப் பருவத்திலேயே குழந்தையிடம் ஏற்படுத்தி விடவேண்டும்.

உண்மையே பேச வேண்டும் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது எளிமையானது போலவும், சுலபமானது போலவும் தோன்றுகிறதல்லவா! ஆனால் வாழ்க்கையில் இதைக் கடைப்பிடிக்க முயலும்போது, பலவிதமான தொல்லைகள் குறுக்கிடுகின்றன. சில அசாதாரணமான சந்தர்ப்பங்களில், உண்மையைச் சொல்லுவதே பாவமான காரியத்துக்குத் தூண்டுகோல் போல ஆகவிடுவதும் உண்டு.

அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் என்ன செய்வது? அப்போது உண்மைக்குத் திரை இட்டு மறைப்பது பாவம் ஆகாது என்று சாஸ்திரங்கள் அநுமதி அளிக்கின்றன.

ஒரு நல்ல காரியத்துக்குத் தாராளமாக வழங்குவதைப் போல மனத்துக்கு நிம்மதி அளிக்கக் கூடியது

எதுவும் இருக்க முடியாது, ஆனால் கொடுக்கும்போது எந்தவிதமான மனத்தயக்கமும் இல்லாமல் கொடுக்க வேண்டும்; பிரதிபலனை எதிர்பார்க்காமலும் கொடுக்க வேண்டும்.

ஒருவன், புகழின் உச்சியில் சவாரி செய்து கொண்டிருக்கலாம். அதிலிருந்தும் தனக்கு வீழ்ச்சி ஏற்படலாம் என்பதை அவன் மறத்தல் ஆகாது. சுயமுயற்சி தேவை தான். கடவுளையும் மீறிக் காரியம் செய்துவிடலாம் என்று கர்வம் கொண்டு விடக்கூடாது.

உண்மையான பக்தன், கடவுளின் ஆணையை அப்படியே ஏற்றுக் கொண்டு, அதை மதித்துச் செயல் படுகிறவனாக இருப்பான். உயர்வு ஏற்படும் பொழுது செறுக்கு அடைவதும் இல்லை. வீழ்ச்சி ஏற்படும் பொழுது துயர்ப்படுவதும் இல்லை. எல்லா நிலைகளிலும் கடவுளிடம் நம்பிக்கை வைத்து நிம்மதியாக இருக்கிறான்.

மனிதனாய்ப் பிறக்கின்ற ஒவ்வொருவனும் அதி மனிதனாக இருக்கவேண்டும் என்கிற லட்சியத்தோடு வாழவேண்டும். அதற்கான வாய்ப்புத்தான் இந்தப் பிறவி. கடவுளோடு தொடர்புடைய எந்தக் காரியமும் தெய்வீகத் தன்மையைப் பெற்று வருகிறது. அத்துடன் நிரந்தர மதிப்பும் அதற்கு ஏற்பட்டுவருகிறது.

வேதங்களோடு உபநிஷதங்கள் இதிகாசங்கள் புராணங்கள் மற்றும் பல்வேறு சாஸ்திரங்கள் அனைத்தும், ஆன்மீக ஆனந்தத்தை அனுபவிப்பதற்குத் தேவையான விஷயங்களை, மனித சமுதாயத்துக்குக் கொடுத்து உதவிக் கொண்டிருக்கின்றன; ஹிந்து மதத்திற்கு ஏற்பட்ட அபாயத்தைத் துணிச்சலோடு எதிர் நோக்கிச் சமாளித்தவர் ஆதிசங்கரர். வேதங்களின் அடிப்படையில் ஹிந்து மதத்தை உறுதியான அஸ்திவாரத்தின்மீது அவர் அமைத்தார். நம்முடைய சாஸ்திரங்கள் அனைத்துக்கும் வேதங்கள்தாம் அஸ்திவாரம்.

ஒருவனின் மனம் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். கடவுளிடத்தில் மாறாத நம்பிக்கையும், அவனுடைய மதக் கோட்பாடுகளில் ஆழமான விசுவாச மும் அவனுக்கு இருக்கவேண்டும். தினசரி நடவடிக்கை களில் மத அனுஷ்டானங்கள் இடம் பெறும்போதுதான், அது வாழ்க்கையில் ஒரு முக்கிய அம்சமாகத் திகழ முடியும்.

காலையில் எழுந்தவுடன் கடவுளுக்குப் பிரார்த் தனை செய்தல் வேண்டும். பின்னர், வேலைக்குச் செல்லும்போது கடவுளின் அருளை வேண்டிப் பெற வேண்டும். அவருடைய அருள் இல்லாமல் எந்தக் காரிய மும் வெற்றி பெறாது என்பதால், எந்தக் காரியத்தைத் தொடங்கும்போதும், அவரை வேண்டிக் கொள்வது, தடை நீங்கிக் காரிய சித்தி பெற உதவியாக இருக்கும்.

கடவுளை உணர்வதற்கு எத்தனையோ மார்க்கங் கள் இருக்கின்றன. அவற்றில் ஒரு வழி இறைவனுக்கு ஊழியனாகப் பணிவிடை செய்வது. அதிலும் பலன் கருதாமல் செய்வது அப்படிச் செய்யும்போது, எத்த னையோ சோதனைகளைச் சமாளிக்க வேண்டியதாக இருக்கலாம். அப்போதும் மனந்தளரரமல், பயன் கருதாப் பணியில் உறுதியுடன் செயல்படவேண்டும்.

புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் என்ற முறை யில்பூஜை செய்ய இயலாத வேளையில் மானஸிக பூஜை செய்யலாம். அத்தனை விஷயங்களையும் மனத்தால் பாவித்து, பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடலாம்· அதற்குப் பலன் உண்டு.

இப்பூஜைகளின் மூலம் வாழ்க்கையில் ஏற்படக்கூடிய துன்பங்களும் குறையும். ஆத்யாத்மிக விசாரமும் ஏற் படும்.

மனத்தில் பகவானை நிறுத்தி வழிபடுவது தியானம். தியானத்தின் மூலமாகவும், பாஹ்ய பூஜையின் மூலமாக வும், ஜபம் செய்வதின் மூலமாகவும், பலவிதமான உபாசனைகள் இருக்கின்றன. உபாசனை செய்கிறவர் கள் லட்சக்கணக்கில் கோடிக்கணக்கில் ஜபம், தர்ப்பணம், ஹோமம் முதலியவைகளும் செய்வார்கள்.

நம்முடைய வாழ்க்கைக்குத் தேவையான, இக லோக சுகத்திற்காகச் செய்யப்படும் பகவத் உபாசனை, நம்முடைய வாழ்க்கையில் ஏற்படும் எல்லாத் துக்கங் களும் போய், பரிபூரண சுகத்தை அடைவதற்குச் செய் யப்படும் உபாசனை இவ்விதமாக இறைவழிபாட்டில் நிறைவேறுகின்றன!

பிரார்த்தனையென்பது நிர்குண, சகுண, சாகார, அவதார சொரூபத்தினிடம் முறையிட்டுக் கொள்வ தாகும். தமது யோகாப்பியாசத்தின் மூலமாகச் சரீரம், மனம் இரண்டையும் ஒருநிலைப்படுத்திச் சகுண, சாகார, அவதார, நிர்குண மூர்த்திகளைத் தியானம் செய்வதே யோகம். உலகம் எவ்விதம் இயங்குகிறது, இதற்கெல்லாம் மூலசக்தி எங்கே இருக்கிறது, எந்த ஆதாரத்தின்கீழ் இவைகள் நடைபெறுகின்றன என்று விசாரத்தின் வாயிலாக அறிந்து கொண்டு பரமாத்மா வின் ஞானத்திற்கே விரோதமான அஞ்ஞானம் போக் கிக்கொண்டு ஞானத்தைப் பெறுவது விசாரம். எப்படி யும் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் கடவுள் வழிபாடு என்பது இன்றியமையாதது ஆகும்.

ஒருவன், யானையினுடைய பாதத்தில் காலை வைத்து ஏறிய பிறகே, யானை அவனை முதுகில் ஏறி அமர்ந்துகொள்ள அனுமதிக்கிறது. அது போலவே இறைவனின் பாதத்தை யார் உறுதியாகப் பற்றிக்கொள் கிறார்களோ அவர்களுக்கே இறைவன் அடைக்கலம் அளித்துப் பாதுகாப்புத் தருகிறான்.

கடவுளின் படைப்பில் உயர்ந்து நிற்பவன் மனிதன். விசேஷ வசதிகளைப் பெற்றிருப்பவனும் அவனே. பல்வேறு பிறப்புகளுக்குப் பிறகு அவன் இந்த நிலைக்கு உயர்ந்திருக்கிறான். அவனுடைய எதிர்காலம்—அதாவது அடுத்த பிறவி—எப்படி இருக்கும் என்பதை இப்போது அவன் ஆற்றும் காரியங்களே முடிவு செய்யும்

மோட்சத்தை அடைவதுதான் ஒவ்வொரு மனிதனின் லட்சியமாக இருக்க வேண்டும். அதற்கான வழிகளில், நல்லோர்களின் சகவாசம் முக்கியமானது என்று நம்முடைய சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. சத் விஷயங்களில் ஈடுபாடு கொண்டோருடைய தோழமை, தீய எண்ணங்களிலிருந்து விடுபட நமக்குத் துணைபுரிகிறது. அவர்கள் வாழும் சூழ்நிலையும், செய்யும் தெய்வீகப் பணிகளும் நம்மைப் புனிதப்படுத்தி விடுகின்றன.

ஆத்ம விடுதலைக்கான காரியங்களில் அவன் வெற்றிகரமாக ஈடுபட்டால், இப்பிறப்பிலேயே அவன் மோட்சத்தை அடைந்து விடக்கூடும்.

ஒழுக்கக் கோட்பாடுகளே 'தர்மம்' என்று அழைக்கப்படுகிறது. கடவுளின் கட்டளைகள்தாம் ஒழுக்கக் கோட்பாடுகள். இறைவன் எதற்காக நம்மைப் படைத்திருக்கிறானோ, அந்தப் படைப்பின் நோக்கத்தை நாம் பூர்த்தி செய்யவேண்டும். பக்தி இல்லாமல் செய்யப்படும் எந்தக் காரியங்களையும் இறைவன் ஏற்றுக்கொள்வதில்லை. நோக்கம்தான் பிரதானம். ஒரு மனிதனின் நோக்கத்தையே இறைவன் பிரதானமாகக் கவனிக்கிறான். தனக்குப் புகழ் வேண்டும் என்பதற்காகவோ, பாராட்டுதலைப் பெறவேண்டும் என்பதற்காவோ, காரியங்களைச் செய்து கொண்டிருக்கக் கூடாது.

பிறவித் தளையை அறுப்பதற்கு ஒரு வாய்ப்பாகவே இந்தப் பிறப்பை நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

ஈஸ்வரனை உணரும் எண்ணமே இல்லாமல், வெறும் லோகாயத விஷயங்களில் உழன்று கொண்டிருப்பது சரியான வாழ்க்கை ஆகாது.

பக்தி என்பது, கொடுப்பதைத் தவிர கேட்பது அல்ல. நிபந்தனையற்ற சரணாகதியே பக்தி என்று அழைக்கப்படுகிறது. கொடுப்பது 'அவனை'ப் பொறுத்த விஷயம். எப்போது கொடுப்பது என்பது அவனுக்குத் தெரியும்.

நாம் செய்யும் எந்த வேலையும் கீழானதல்ல. ஆனால் செய்கின்ற வேலையை மன ஈடுபாட்டுடன் செய்யவேண்டும். அதில் நம்மை முழுக்கவும் அர்ப்பணித்துக் கொண்டு செய்யவேண்டும். அதற்குள்ள ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டுச் செய்யவேண்டும். அப்போது, நாம் செய்யும் வேலை 'தெய்வீக வழிபாடு' என்கிற அந்தஸ்தைப் பெற்றுவிடும்.

பக்தியை நாரதர் மூன்று வகையாகப் பிரிக்கிறார். முதல் வகையினர்—கடவுளின் உருவச் சிலைகளையும் படங்களையும் வழிபட்டு அதனால் அளவில்லாத ஆனந்தத்தைப் பெறுகின்றார்கள்.

இரண்டாவது வகையினர்—கடவுளின் ஆன்மீகத் தலைவர்களுடன் நெருங்கிப் பழகி அவர்களின் உறவால் இறைவனை உணர்ந்து ஆனந்தமடைகிறார்கள். மூன்றாவது வகையினர்—எங்கும் எல்லாப் பொருள்களிலும் ஆண்டவன் இருப்பதை உணர்ந்து அனுபவித்து, அதனால் இன்பம் துய்ப்பவர்கள்.

சுகமோ துக்கமோ, எதுவும் அளவுக்கு மீறி பாதிக்க அனுமதிக்கவிடக்கூடாது. எந்த உணர்ச்சியும் அளவு கடந்தால் மனிதனுக்குப் பகை ஆகிவிடும்.

பரப்பிரம்மம் எல்லையற்ற உன்னதமான குணங்களைக் கொண்டது. எங்கும் வியாபித்திருப்பது. சர்வ வல்லமை படைத்தது. கருணைக் கடல். அன்புச் சாகரம். ஆத்மாவும் பொருளும் கடவுளின் சேவகர்கள். ஈஸ்வரனை நம்பியே, ஈஸ்வரனுக்குக் கட்டுப்பட்டே அவை இருக்கின்றன; செயல்படுகின்றன. நாம் அனுபவிப்பது எல்லாம் கடவுளுக்குச் சொந்தம். ஆகவே எல்லா உடைமைகளின் மீதும் அவனுக்கு உரிமை உண்டு.

ஆன்ம விடுதலைக்குக் குடும்பம் ஒரு இடையூறு என்பர் சிலர். அது அவ்வளவு சரியாகாது. கிரகஸ்தாஸ்ரமத்தில் ஒளி மிக்க பகுதிகள் உண்டு. சந்நியாஸ்ரம சிரமத்தைவிட இதன் வாயிலாக ஏற்படும் விமோசனம் எளிமையானது. குடும்ப தர்மத்தை ஒழுங்காகச் செய்தால் போதும். கடவுளிடம் பரிபூரண நம்பிக்கை வைத்துப் பற்றற்று மகிமை ஆற்றினால் அதுவே விமோசனத்துக்கு வழிகாட்டிவிடும். குடும்ப வாழ்க்கை ஆன்மாவைப் பந்தப்படுத்துவதும் விமோசனத்துக்கு அழைத்துச் செல்வதும், சம்பந்தப்பட்டவரின் மனோபாவத்தைப் பொறுத்தே இருக்கிறது.

மற்றவர்களுக்கு நன்மை செய்வது ஓர் உயர்ந்த குறிக்கோள். ஒருவனுக்குத் தன்னால் அது முடியாமல் இருக்குமானால், உதவுகிறவர்களுக்குத் துணையாக நிற்கலாம். அல்லது மற்றவர்கள் அத்தகைய பணியில் ஈடுபடும்போது அதைக் குறை சொல்லாமலாவது இருக்கலாம்.

புலன் இன்பங்கள் நிலையில்லாதவை; மாயத் தன்மை வாய்ந்தவை. எதை மனிதன் சந்தோஷம் என்று எண்ணி ஓடுகிறானோ, அது சாசுவதமானது அல்ல. எளிதில் மறைந்துவிடக் கூடியது. முடிவில் அது ஒருவனை துக்கத்திலே கொண்டுபோய் ஆழ்த்தி விடும்.

லோகாயத இன்பங்களில் ஈடுபடுகிறபோது, நல்லவை களை மறந்து விடுகிறார்கள். தீயவைகளால் கவரப் பட்டு, அதற்குப் பலியாகிப் போகிறார்கள். நிலையான இன்பத்திலிருந்து அவர்கள் விலகிச் சென்று விடுகிறார் கள். மனிதன் மிகுந்த கவனத்துடன் நடந்து கொள்ள வேண்டியது இந்தச் சூழ்நிலையில்தான். கடவுள் பக்தி யுள்ளவர்களுக்கு இது மாதிரி சங்கடங்கள் ஏற்படுவ தில்லை. அவர்கள் சரியான விஷயத்தை எளிதில் தெரிந்து கொண்டு விடுவார்கள். அதைச் சரியான சமயத்தில் கடவுள் கொடுத்து உதவுவார்.

ஆன்மீகக் கடமைகளைச் செய்யும்போது, அதற்கு என்ன லாபம் என்று பார்த்துச் செய்யக்கூடாது. பக்தர் களுக்கு என்ன தேவை, அதை எப்போது அளிப்பது என்று இறைவனுக்குத் தெரியும். ஆகவே, கேட்காமலே அவன் கொடுப்பான்.

பேராசை, ஏமாற்றத்துக்குக் காரணமாகிறது. முடி வில் அதுவே அழிவுக்கும் வழி வகுக்கிறது. ஆசையை நிறைவேற்றிக்கொள்ளத் துடிக்கிறவன், கோபத்துக்கு ஆளாகிறான். வாழ்க்கையில் வெற்றி பெறச் சில பல ஆசைகளை வளர்த்துக் கொள்வதில் தவறில்லை. ஆனால் மற்றவர்களை அழித்து மிகுதியான செல்வத் தையும் செல்வாக்கையும் பெற முயற்சிப்பது, பெரும் தீமையில்தான் முடியும்.

இதே ஆசையை இறைவனை அடையும் வழிகளில் திருப்பினால், ஒருவனுக்கு அது எவ்வளவோ நிம்மதி யைப் பல இடங்களில் தெளிவுபடுத்துகிறது. அத்துடன் குடும்ப ஒற்றுமையினையும் சகோதர ஒற்றுமையினை யும் பேணிக் காக்கவேண்டியதின் அவசியத்தினை, அது சிறப்பாக எடுத்துச் சொல்லுகிறது. இறைவனின் ஆசி யில்லாமல் உருவாக்கப்படும் திட்டங்கள் அனைத்தும் தோல்வியில் முடியும் என்பது மகாபாரதம் உணர்த்திடும்

மற்றொரு நீதி. இறைவன்மீது நம்பிக்கை வைத்து செய்யப்படும் காரியங்கள், சுலபத்தில் நிறைவேறுவதை மகா பாரதம் சுட்டிக் காட்டுகிறது.

இந்திர பதவி அடையத் தவம் இயற்றும் ஒரு மன்னன் புலன் இன்பங்களுக்கு அடிமையாகும்போது, அவன் இடம் பறிக்கப்பட்டு மறுபடியும் பூமிக்கு வந்து விடுகிறான்.

விஞ்ஞானம் எவ்வளவுதான் வளர்ந்திருந்தாலும் சூரியனையும் சந்திரனையும் மனிதனால் ஆட்டிப் படைக்க முடிவதில்லை. கண்ணுக்குப் புலனாகாத ஏதோ ஒரு மகத்தான சக்தியே அவைகளை இயக்கிக் கொண்டிருக்கிறது.

நம்முடைய இதிகாச புராணங்கள், மனித இனத்துக்கு வழிகாட்டும் ஒப்பற்ற கலங்கரை விளக்கங்கள்.

யார் விரும்பினாலும் இறைவனை அடையலாம். அதற்குத் தடையே இல்லை. கடவுளையும் மனிதனையும் ஒரு மெல்லிய திரைதான் பிரித்து வைக்கிறது. இந்தத் திரையை, மனிதன் விரும்பினால், சுலபத்தில் கிழித்து இறைவனைத் தரிசித்து விடலாம். மனிதன் தன்னை அடைவதற்கான சூழ்நிலைகளை இறைவனே ஏற்படுத்தி வைத்திருக்கிறான். ஆன்மீக ஞானம் பெறுவது ஒரு வழி. ஆலயங்களுக்குச் சென்று ஆண்டவனை வழிபடுவது ஒரு வழி. மனித சமுதாயத்துக்குச் சேவை செய்வது ஒரு வழி. தானதர்மங்கள் செய்வது ஒரு வழி. இப்படியாகப் பல வழிகள்.

புண்ணிய காரியங்களை மனமுவந்து செய்யவேண்டும். தவறுகளை மன்னிக்க இறைவன் தயாராக உள்ளான். ஆக, சிறு தவறுகள் செய்திருந்தாலும் அதற்காக மனம் வருந்தி, ஈஸ்வரனிடம் பக்தி செலுத்தினால்

அவன் பிறப்பு அறிந்து, மோட்சத்தை அருளவே செய்வான்.

வேதங்கள் காட்டிய வழியில் நிற்கும் வரை நமக்கு வீழ்ச்சியில்லை.

ஆன்மீக உயர்வு பெற உபநிடதங்கள் நமக்குத் துணை நிற்கின்றன. புராண இதிகாசங்கள் நல்ல வாழ்க்கை வாழும் வழியை நமக்குச் சொல்லிக் கொடுக்கின்றன. நாம் செய்யவேண்டியதெல்லாம், அவற்றைப் பயன்படுத்திக்கொண்டு, இந்த உலகத்தில் வாழ் வாங்கு வாழ்ந்து வீடுபேறு அடைவதுதான். இந்து சமயம் அதற்குத் தெளிவான பாதை போட்டுக் கொடுக்கிறது. அதனால் இந்து மதத்தில் பிறந்தோரும், பின் பற்றுவோரும் மிகுந்த மகிழ்ச்சி கொள்ளலாம்.

ஒவ்வொரு ஹிந்துவும், இந்து தர்மங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். அறிந்து கொண்டால் நாம் எவ்வளவு உயர்ந்தவர்கள் என்று பெருமிதம் ஏற்படும். உலகிலுள்ள மதங்களுக்கெல்லாம் முற்பட்டதாக—தாய் மதமாக—கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலேயே தோன்றிய தொன்மை, நம் இந்து மதத்துக்கு உண்டு.

# 11

"ஹிந்து மதம் என்றால் அதற்கு உண்மையில் அர்த்தம் என்ன?" இந்தக் கேள்வி இன்று பலராலும் எழுப்பப்படுகிறது. இதற்குப் பதில் சொல்ல வேண்டுமானால் நாம் ஒன்றை அறிந்துகொள்ள வேண்டும். நம்முடைய மதத்தின் பெயர் உண்மையில் 'ஸநாதன தர்மம்' என்பதேயாகும், ஹிந்து மதம் என்ற சொல் பிறகுதான்ஏற்பட்டது.

'ஸநாதன தர்மம்' என்ற சொல்லுக்குப் பொருள் நிலையான தர்மம் என்பதேயாகும். அது வாழும் வழியைக் குறிக்கிறது. வாழவேண்டிய வழி என்று சொல்லும்போதும், நாம் வாழும் வழியை ஒழுங்குபடுத்துவது எது என்பதைப்பற்றி நமக்கு சிந்தனை எழுகிறது. நமது வாழ்வில் நலம் பெற நமக்கு வழிகாட்டியாக இருப்பது வேதந்தான். ஆகவே, நமக்கு வேதந்தான் ஸநாதன தர்மத்தின் ஆதாரமாகும்.

ஏன் நமது தர்மம் ஸநாதனமானது, அல்லது ஓர் ஆரம்பமே இல்லாதது என்று சொல்லவேண்டும்? ஏனென்றால் அதற்கு ஓர் ஆரம்பம் இருக்கிறது என்று சொன்னால் அதில் பொருளே இருக்காது. உதாரணத்துக்குப் பின்வரும் கருத்துக்களை ஆராயலாம். கடவுள் புனிதமான தர்மத்தை ஒரு குறிப்பிட்ட ஒருவரிடத்தில் வெளிப்படுத்தினார் என்று வைத்துக்கொள்வோம். இங்கே ஒரு கேள்வி எழலாம். அத்தகைய வருடத்திற்கு முன் இறந்தவர்களெல்லாம் சொர்க்கத்திற்குச் சென்றார்களா? நரகத்திற்குச் சென்றார்களா?

ஆராய்ச்சிக்காக வேதம் அவ்வருடத்தில்தான் உபதேசிக்கப்பட்டது என்று நாம் எடுத்துக் கொண்டோம். ஆகவே அவ்வருடத்திற்கு முன்பு மக்கள் எக்காரியத்தைச் செய்தாலும் தீய பலன்களே கிடைத்து வந்தன. ஆகவே அவர்கள் நல்ல காரியம் செய்தாலும் நரகந்தான் அனுபவித்தனர் என்று சொல்வது நியாயமா? கடவுள் அநியாயமாக மக்களைத் தண்டித்தார் என்றல்லவா ஆகிவிடும்!

மேலும், வேதம் மூலமாக இறைவன் தர்ம அதர்மங்களைப் பற்றி உபதேசித்திருக்காத நேரத்தில் அங்கு ஒரு விதமான கட்டளைகளும் இருந்திருக்கவில்லை. ஆகவே பதிலென்ன என்றால், வேதம் தோன்றுவதற்கு

முன் மக்கள் நரகந்தான் சென்றனர் என்று சொல்வது தவறாகிவிடும்.

இன்னொரு சாத்தியக் கூறும் இருக்கிறது. வேதம் உபதேசிக்கப்படாமல் இருந்த காலத்தில் அனைத்து மக்களும் சொர்க்கம் சென்றிருக்கலாமே! இதுவும் தவறான கூற்று. ஏனெனில், இப்படி வைத்துக் கொண் டால் கடவுள் தர்மத்தை அறிவிக்கும் முன்னர் மக்க ளனைவரும் சொர்க்கம் சென்றனர். ஆனால் தர்மம் அறிவிக்கப்பட்ட பிறகு அவர்களில் சிலர் மட்டும் சொர்க் கத்திற்குச் செல்ல வேண்டிய நிலையும் வந்து விட்டது. ஆகவே, நரகம் செல்லவேண்டியதுதான் கடவுள் வேதம் உபதேசம் செய்ததற்குப் பலன் என்றல்லவா முடிவு வரும்!

எனவே கடவுள் ஒரு குறிப்பிட்ட வருஷத்திலோ அல்லது காலத்திலோ வேதத்தை உபதேசித்தார் என்று கூறினால், இது போன்ற தவறான கருத்துக்களைத் தான் நாம் பெறமுடியும். அதே சமயம் எப்போது இறைவன் உலகைப் படைத்தானோ, அன்றே வேதத் தையும் உபதேசித்தான் என்று வைத்துக் கொண்டால், தவறான கருத்துக்கள் வர இடமேயில்லை.

ஆகவே, மனிதனைப் படைத்த சமயத்திலேயே தர்மத்தையும் கடவுள் அவனுக்கு உபதேசம் செய்தி ருக்க வேண்டும். சிலர் படைப்பின் ஆரம்பம் குறித்துக் கேள்வியெழுப்பலாம். இதற்குப் பதில்:

கனவில் ஒருவன் தன்னை முப்பது வயது ஆனவ னாகப் பார்க்கலாம். அக்கனவிலேயே ஆராய்ச்சி செய் தால், ஒருவன் முதலில் சிறு குழந்தையாக இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகும். ஆனால் உண்மையில் ஸ்வப்னத்தில் அவ்வாறு இருந்ததா? இல்லை. ஏனெனில் கனவு திடீரென்று தோன்றுவது. இதேபோல் படைப்

பின் விஷயத்திலும் இப்போதுள்ள நிலையிலிருந்து பார்த்தால், காலத்தைப் பின்னுக் கிழுப்பது சரியெனத் தோன்றினாலும், அவ்வாறு ஆராய்வது உண்மையில் சரியல்ல. ஏனென்றால் அது யுக்திக்குப் பொருத்த மில்லை.

வேதம் 'என்று சொல்லும்போது, யாருக்கெல்லாம் அதில் விசுவாசம் உள்ளதோ அவர்களெல்லாம் வைதிகர் களென்று அழைக்கப்படுகின்றார்கள். அவர்கள், சாங்கிய யோகத்தை அநுசரிப்பவர்களாகட்டும். நியாய வைசேஷிகத்தை அநுசரிப்பவர்களாகட்டும், பூர்வ மீமாம்ஸத்தையோ வேதாந்தத்தையோ அநுசரிப்பவர் களாகட்டும், எதுவரையில் அவர்களுக்கு வேதத்தில் நம்பிக்கையுள்ளதோ அதுவரையில் அவர்கள் வைதிகர் கள்தாம். சிலர் இங்கு ஒரு கேள்வி எழுப்பலாம். ஒருவன் வேதத்தையே கற்காதவனாய் இருந்தால் அவனை எப்படி வைதிகன் என்று நாம் அழைக்கலாம்.

சாஸ்திரங்களில் அனைவருக்கும் பொருளாகுமாறு சில சாமான்ய தர்மங்களும், சிலருக்கென்று விசேஷ தர்மங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. அஹிம்சை, வாய்மை, திருடாமை, தூய்மை, புலனடக்கம் போன் றவை சாமான்ய தர்மங்கள். இவற்றை அனைவரும் கடைப்பிடிக்க வேண்டும். மனத்தாலும் இந்த ஐந்தை யும் மிகவும் முக்கியமாகக் கடைப்பிடிக்கவேண்டும்.

யாரும் தர்மத்தைச் செய்வதிலிருந்து தடுக்கப்படுவ தில்லை. இப்போதிருக்கும் சூழ்நிலையில் ஒவ்வொரு வரும் தம்மால் முடிந்தவரையில் தர்மத்தை அனுசரிக்க வேண்டும். பணம் படைத்தவர்கள் மட்டுமே தர்மத்தை அனுசரிக்க முடியும் எனக் கருதுவது தவறான கூற்றா கும். உதாரணத்திற்கு, செல்வன் ஒரு கோவிலைக் கட்டுவதன் மூலம் தர்மத்தை அனுசரிக்கலாம். நம் ஏழை அங்கு உடல் மூலமாக ஏதாவது உதவி செய்து

அங்கு வந்து சிரத்தையோடு வணங்குவதாலோ தர்மத்தை அனுசரிக்கலாம்.

இன்று நமது மதம் இருக்கும் நிலையைப் பற்றி யாரும் வருத்தமுறத் தேவையில்லை. மேலும் எந்த ஒரு சமயத்திலும் உலகம் இவ்வாறு இருந்திருக்காமல் இல்லை என்று மீமாம்ஸகர்கள் கூறியுள்ளார்கள். பல வருஷங்களுக்கு முன்னர் ஓர் இராமனும், ஓர் இராவணனும் இருந்திருந்தாலும், இன்று சிறு சிறு இராம இராவணர்களாகப் பலர் இருக்கின்றனர். இது ஒன்று தான் மாறுதலாக இருக்கிறது.

ஆகவே, இராமர் என்ற ஹிந்து மதத்தை எத்தனை ராவணர்கள் வந்தாலும் அழிக்க முடியாது. இந்துமதம் சத்தியத்தின் அடிப்படையில் ஏற்பட்ட ஆதி அந்தமில்லாத ஸனாதனமதம்.'' என்று வெகு அழகாக விளக்கியிருக்கிறார் சிருங்கேரி சராதா பீடாதிபதி ஸ்ரீ பரமாச்சாரியார் சுவாமிகள்.

ஸனாதான தர்மப்படி பாரத புண்ய பூமியில் மனித வாழ்க்கையை நான்கு படிகள் அல்லது கட்டங்களாக நமது மகரிஷிகள் பிரித்திருக்கிறார்கள். அதன்படி பிரம்மச்சரியம்,, கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் எனப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்த நான்கு நிலைகளையும் கருத்தில் கொண்டு வாழ்ந்தால், மனிதன் உலகில் பிறந்து வாழ்ந்து வந்த நோக்கம் நிறைவேறும் என்பது கருத்தாகும்.

இந்த நான்கு நிலைகளில் பிரம்மச்சரியமே அடிப்படையானது. கல்வி கற்கும் இளமைப் பருவமே பிரம்மச்சரிய ஆஸ்ரமம் என்பதாகும். வெறும் ஏட்டுக் கல்வியில் கருத்து வைப்பதோடு அது நின்றுவிடுவதில்லை. அவன் பிரம்மத்தில் மூழ்கியிருக்க வேண்டும். அவன் எது செய்தாலும் எல்லாம் பிரம்ம பலம் என்பதை

அறிந்தே செய்வான். புலனடக்கமும், ஒழுக்கமும் பிரம்மச்சரியத்திற்கு இன்றியமையாத பயிற்சியாகும். உறுதியும், உழைப்பும் அவனிடத்தே உதிக்கின்றன• உடல் வளர்ச்சிக்கு ஒவ்வொரு உறுப்பும் துணைபுரிவது போன்ற உலக நன்மைக்கு ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் உறுதியும் உற்சாகமும் கொண்டதாய் இருக்க வேண்டும்.

குருகுல வாசம் இந்த பிரம்மச்சரியத்தில் சிறப்பு அம்சமாகும். ஒழுக்கம், மனத்தை ஒருமைப்படுத்துதல், கர்மம் புரிதல் இவைகளே பிரம்மச்சரியத்தின் சிறந்த குணங்களாகும்.

ஜாதி மத வேறுபாடு, உயர்வு, தாழ்வு என்ற மனப் பான்மை கூடாது. தனக்கிட்ட பணியைத் தானே செய் தல் மிகவும் முக்கியம். ஆசை, பந்த பாசங்கள் முதலிய வைகளை விலக்க வேண்டும். ஜபம், தியானம் முதலிய வைகள் மனத்தை சுத்தமாக்கும்.

மற்றவர்களுக்கு சேவை செய்யவேண்டும் என்ற மனப்பான்மை இப்பிரம்மச்சரிய ஆசிரமத்தில் இருக்க வேண்டும். வேத புராணங்களைப் படித்தல், மனனம் செய்தல் முதலியவைகள் பிரம்மச்சர்ய ஆசிரமத்தில் முக்கியமானவைகளாகும்.

இந்தக் காலத்தில் இவற்றையெல்லாம் கடைப் பிடிக்க முடியுமா என்று எண்ண வேண்டாம். இருபத் தைந்து வயதுவரை அவனை ஒழுங்குபடுத்துவது பெற் றோரின் கடமையாகும். இப்பொழுதுள்ள பள்ளிப் படிப் புக்கு இவை ஒத்துப்போகாமலிருக்கலாம். அதற்காகப் பின்வாங்குதல் கூடாது. வீட்டில் 'அப்பாவே' அவனுக்கு குருவாக இருந்து அவனது கடமைகளை விளக்கிச்

சொல்லி வழிக்குக் கொண்டு வரவேண்டும். முடியுமா? முடியுமா? என்று கேட்டுக் கொண்டு சும்மாயிருத்தல் கூடாது.

வேத காலத்து பிரம்மசரிய தர்மம் இதுதான்—இதில் வித்யாப்பியாசம் செய்யவேண்டும். குருபக்தி, மாத்ரு பக்தி, பித்ருபக்தியுடன் இருப்பது—பிரம்மசரியத்துடன் இருப்பது—யோகாப்பியாசம் முதலியவைகளைக் கற்றுக் கொள்வது—அவரவர்கள் அதிகாரத்துக்கு ஏற்றவாறு சந்தியாவந்தனம், சமிதாதானம்—வேத பாடங்கள் படிப்பது முதலியவைகளைச் செய்து, ஆகாரங்களைத் தானே—சுயமாக செய்துகொள்ளாமல் கிரஹஸ்தர்கள் வீட்டிலோ—குரு வீட்டிலோ—பிக்ஷை எடுத்தோ சாப்பிடுவது ஆகியவை பிரம்மச்சர்ய தர்மங்களாகும்.

வாழ்க்கையின் மேம்பாட்டிற்கு எத்துணை பலமான அஸ்திவாரம் பார்த்தீர்களா?

பிரம்மச்சரியத்தில் இவ்வாறு நல்ல பயிற்சி பெற்ற பின், அந்த வாலிபன் இல்லறத்தை ஏற்றுக் கொள்கிறான். இந்த கிரகஸ்தாஸ்ரமத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடமுண்டு. கணவன் தன் தர்மத்தை ஏற்று நடத்தவேண்டும்.

பொருளை ஈட்டுதல், அவைகளை—தர்மத்தை அடிப்படையாகக் கொண்டு—குடும்பம், சமூகம், மற்றும் இல்லற தர்மத்தை ஒட்டியிருப்பவர்களுக்குப் பகிர்ந்தளித்து, குடும்பப் பொறுப்பில் தன் இல்லாளுடன் சம பங்குடன் கடமைகளைச் செய்தல், சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுதல், மனைவி, மக்கள், சுற்றத்தாரிடம் அன்புடன் நடந்து கொள்ளுதல் முதலியவைகள் மிகவும் முக்கியமானதாகும்.

இதில் மனைவியின் பங்கும் சிறந்ததாகும்.

மனைவியானவள் தன் ஸ்திரி தர்மத்தை அனுஷ்டித்தல், கணவனுக்கேற்ற மனைவியாக நடந்து கொள்ளுதல், கணவனைக் கண் கண்ட தெய்வமாக மதித்து நடத்தல், சுற்றத்தாரையும், அதிதிகளையும் முறைப்படி உபசரித்தல், பெண்ணுகவுள்ள தெய்வீகத் தன்மையை உணர்தல், உலகத்தில் அவதரித்த சிறந்த மஹான்கள் தலைவர்கள் முதலியோர் தங்கள் தங்கள் அன்னையாரின் சிறந்த உபதேசங்களை ஏற்று உயர்ந்ததை எண்ணி, அதன்படி நடந்துகொள்ளுதல் முதலியவைகள் ஸ்திரி தர்மப்படி பெண்கள் சமுதாயத்திற்கு செய்யக் கூடிய சிறந்த தொண்டாகும்.

மனைவியானவள் வீட்டிற்கு சிறந்த கிரஹலக்ஷ்மியாக திகழ்தல், கணவன் மனைவி இருபாலரும் அன்பால் பிணைந்து தங்கள் வம்ச விருந்திற்காக மக்களைப் பெற்றெடுத்து சிறந்த நன்மக்களாக வளர்த்தல் முதலியவைகள் கிரகஸ்தாஸ்ரமத்தில் சிறந்த தர்மமாகும்.

அதிதிகளுக்கும், பிரம்மசாரிகளுக்கும், சந்நியாசிகளுக்கும், ஆகாரம் கொடுப்பது—தர்மத்துக்கு விரோதமில்லாத முறையில் சுகங்களை அநுபவிப்பது-கிருஹஸ்தர்களுக்கு ஏற்பட்ட கிருஹஸ்தாஸ்ரம தர்மங்களைக் கடைப்பிடிப்பது, அவற்றுள் முக்கியமாக ஆறு கர்மாக்களைத் தவறாமல் செய்வது (அதாவது ஸ்நானம், சந்தியாவந்தனம், ஜபம், ஹோமம் தேவதா பூஜை, வைக்வதேவம்) இந்த ஆறு கர்மாக்களையும் மந்திர பூர்வமாக அல்லது மந்திரம் சொல்லிக்கொண்டோ அல்லது மந்திரம் சொல்லாமலோ கட்டாயமாய்ச் செய்வது, அதுபோல் முக்கியமாகவுள்ள படிப்பது—படிப்பிப்பது—தானம் வாங்குவது—தானம் கொடுப்பது—யாகங்கள் பண்ணுவது—யாகங்கள் பண்ணவைப்பது ஆகிய இந்த ஆறு காரியங்களையும் தவறாமல் செய்வது. ஆகியவை கிருஹஸ்த தர்மங்களாகும்" என்று விவரிக்கிறார் ஜகத்

குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்.

கிரகஸ்தாஸ்ரமம் ஐம்பது வயது வரை கணக்காகும். இந்த கிரஹஸ்தாஸ்ரமத்தை ஒழுங்காகக் கடைப்பிடிப்பதில்—இந்தக் காலத்திலும்—எவ்வித சிரமமும் இருக்க முடியாதே! சினிமா, டி. வி.க்கு இடையிலும் ஒழுங்காக நடந்து கொள்ளலாம். அனைத்திற்கும் மனத்திண்மைதான் காரணம். பெற்றோர்கள் கிரஹஸ்தாஸ்ரமத்தை ஒழுங்காக நடத்தி வந்தால்தான், அவர்களுடைய மகனுடைய பிரம்மச்சரிய ஆஸ்ரமமும் ஒழுங்காக நடைபெற்று வரும். இப்படியெல்லாம் நடந்து கொள்ளவேண்டும் என்று மனதில் உறுதி ஏற்படுத்திக் கொண்டால், ஒழுங்கான—கிரஹஸ்தாஸ்ரமம் நடத்த எவ்வித சிரமமும் இராது.

அதன் பிறகு—அல்லது கிரகஸ்தனாயிருந்து நன்மையடைய முடியாதவன், வானப்பிரஸ்தம் என்ற துறவி வாழ்க்கை மேற்கொள்ள சாதனாமுறை வழி வகுக்கிறது.

வீடு, நகரம், நாடு முதலியவைகளிலிருந்து பிரிந்து அருகிலுள்ள நந்தவனம், காடு போன்ற ஏகாந்தமான ஸ்தலங்களுக்குச் சென்று குடிசைகளில் வாழ்ந்து வாழ்க்கையைப் பந்தபாசமின்றி கழிக்கக் வேண்டும்.

வனத்திலுள்ள எல்லா ஜீவன்களிடமும் அன்பாயிருந்து அவைகளுக்குச் சேவை செய்யும் மனோபக்குவத்தை அடையவேண்டும்.

மனத்தைக் கட்டுப்படுத்தி ஒருநிலைப் படுத்தவும், திரிகரண சுத்தியுடனும், ஆச்சார அனுஷ்டானங்களுடனும் அதை கற்றுக்கொள்ளவேண்டும். வானப்ரஸ்த நிலையில் ஜெபதபம், தியானம் இன்றியமையாதது.

மனத்தை ஒருமைப்படுத்துதல் கூடியவரை மௌனமாக வாழ்வது சாலச் சிறந்தது.

சாத்விகமான உணவைப் பற்றின்றிப் புசித்தல் அவசியம். வனத்தில் இயற்கையாகக் கிடைக்கக்கூடிய காய், கனி, கிழங்கு வகைகளை உபயோகித்தல் இந்நிலைக்குப் பொருந்தும். நல்லது கெட்டது என்ற பாகுபாடில்லாமல் சீத, உஷ்ணம் என்ற கால வேற்றுமைகளைப் பொருட்படுத்தாது எல்லாவற்றிலும் இறைவனைக் காணும் முயற்சியில் ஈடுபட வேண்டும்.

தற்கால நிலையில் கானகம் என்று செல்ல முடியா விட்டாலும் (காடுகள் அழிந்து கொண்டிருக்கும் நேரம் இது) 'அவுட் ஹவுஸ்' இருக்குமே. கடவுள் சிந்தனையில் தனித்து வாழலாமே! பந்த பாசத்தையும் அறுத்துக் கொள்ளலாமே! உணவு வகையையும் ஒழுங்கு செய்து கொள்ளலாம். பற்றின்றி வாழலாம்.

அதன் பிறகு சந்நியாசம், அதாவது அறுபது வயதுக்குமேல். இது துறவி வாழ்க்கையாகும். காவி உடை அணிந்து, மொட்டையாகவோ அல்லது ஜடாதாரியாகவோ இருப்பதோடு, சந்நியாசமென்பது இறை ஐக்கியத்தைத் தவிர மற்ற எல்லா ஆசைகளையும் விட்டொழிப்பது என்பதாகும்.

சந்நியாசம் பல நிலையிலும் எடுத்துக் கொள்ளலாம். அவற்றுள் ஒன்று பிரம்மசரிய ஆஸ்ரமத்திலிருந்து சந்நியாசம் மேற்கொள்வது. மற்றொன்று கிரஹஸ்தாஸ்ரமத்திலிருந்து சந்நியாசம் பெற்றுக் கொள்வது. வானப்பிரஸ்தத்திலிருந்து சந்நியாசம் ஏற்றுக்கொள்வது மற்றுமொரு வகை. ஆகவே சந்நியாசம் பெற்றுக்கொள்வதற்கு வயது முதலிய நியமங்கள் எதுவும் இல்லை. எப்பொழுதும் மனத்தில் திடமான வைராக்கியம் ஏற்படுகிறதோ அப்பொழுதே சந்நியாசத்தைப் பெற்றுக்.

கொள்ளலாம். ஆகவேதான் சந்நியாச ஆஸ்ரமம் என்று தனியாக இருந்தாலும் அதை மேற்கொள்வதற்குத் தனியாக ஓர் ஆஸ்ரமத்தை அடைந்த பிறகுதான் போகவேண்டுமென்ற நிர்ப்பந்தம் இல்லை. சந்நியாச ஆஸ்ரமமானது ஞானத்தை அடைவதற்குச் சாதனமாக ஏற்பட்ட ஓர் ஆஸ்ரமமே!

சந்நியாசம் என்பது எல்லாவற்றிலும் இறைவனையே காணும் பரிபக்குவத்தை அடைய முயற்சிப்பதாகும். சந்நியாச நிலையில் மனிதன் தீய எண்ணங்களிலிருந்தும் தீயோர்களிடமிருந்தும், தீய தூண்டுதல்களிலிருந்தும் விலகி நின்று, இறைவனின் பேரருளைப் பெற, சதா காலமும் பிரயத்தனம் செய்யவேண்டும். தினசரி ஒரு சில மணிகளாவது கூட்டு பஜனை, இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களைப் படித்தல் போன்றவைகளில் ஈடுபட்டு மனத்தை நிர்மலமாகவும் நிச்சலமானதாகவும், பரிசுத்தமான நிலையிலும் கொண்டுவரும் முயற்சியில் ஈடுபடவேண்டும்.

குடும்ப நபர்கள் விஷயத்தில் பற்றின்றிப் பந்தபாசமின்றி நடந்துகொள்ள வேண்டும்.

சந்நியாச நிலையில் இருக்கும் தம்பதியர் பிரதிபலன் எதிர்பார்க்காத கர்மங்களையும், கடமைகளையும் புரிய வேண்டும்.

தான தருமகாரியங்களில் ஈடுபடுதலும் தன் மக்களுக்கும், சமூகத்திற்கும் சேவை செய்தலும் முக்கியமான சாதனையாகும். பொருளாசை, மக்கள் பற்று முதலியவைகளிலிருந்து விடுபட்டு எல்லாவற்றையும் தியாகம் செய்து, எல்லாவற்றிலும் இறைவனைக் காணும் முயற்சியில் ஈடுபடுவது சந்நியாச ஆஸ்மரத்தின் முக்கிய குறிக்கோளாகும்.

இறைவன் மனிதனது மேல்தோற்றத்தைக் கவனிப்ப தில்லை. அவனுடைய இதயம் எப்பேர்ப்பட்டது என் பதையே கவனிக்கிறார். அதனால்—தற்காலத்தில்—வெள்ளை வேட்டி துறவியாகவே இருக்கலாம். மனபக்கு வந்தான் தேவை.

அரிது, அரிது மானிடப் பிறவி அரிது. அந்த அரிதான பிறவியை எடுத்து—கேவலப்படுத்தி—வீணாக் கிக் கொள்வது ஒழுங்காகுமா? இறைவனிடம் ஐக்கிய மாகுவதே அனைவருடைய நோக்கமாக இருக்கவேண் டும். இந்த வர்ணாஸ்ரம தர்மங்கள் அதற்கு அநுசரணை யாகவே அமைந்துள்ளன. அவைகளைக் கடைப்பிடிப் பதில் எவ்வித சிரமமுமில்லை. தற்காலச் சூழ்நிலைக்கேற் றாற்போல் அமைத்துக்கொண்டு மேன்மையுறலாம்.

**''முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமாய்**
**அச்சதுரம் உம்முளே அடங்க வாசி யோகமாய்**
**மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமாய்**
**உச்சரித்த மந்திரம் ஓம் நமசிவாயவே!''**

**—சிவவாக்கியர்**

ஏதாவது நல்ல வார்த்தைகளாகப் பேச வேண்டும். பகவான் நாமாவைச் சொல்லவேண்டும். பகவானை நினைக்க வேண்டும். நம் பெரியோர்கள் எவ்வளவோ நல்ல விஷயங்களைச் சொல்லியிருக்கிறார்கள்; எழுதி வைத்திருக்கிறார்கள். அவைகளையெல்லாம் படித்துப் புரிந்து கொள்ளவே ஒரு ஆயுட்காலம் போதுமா என்பது சந்தேகம்.

பகவான் நாமாவைச் சொல்லுவது புண்ணியம். மற்றவர்களையும் சொல்ல வைப்பது அல்லது நினைக்க வைப்பது இவைகளாலும் புண்ணியம் உண்டு. சொல்ல வைப்பவர்களுக்கும் புண்ணியம்; சொல்கிறவர்களுக்கும் புண்ணியம். பாவம் புண்ணியம் என்பதெல்லாம் கண் ணுக்குத் தெரியாது. அனுபவிக்கும்போதுதான் தெரியும்.




# 12

பகுத்தறிவின் பெயரால் இறுமாப்போடு அழிவுப் பாதையில் சென்று, அறியாமையில் மூழ்குவோருக்கு அறிவுறுத்துவது இந்த—தலைசிறந்த விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் கருத்துக்கள்.

"நமக்கு ஏற்படும் அநுபவங்களில், புலன்களுக்கு அப்பாற்பட்ட—உணர்வுக்கு எட்டாத—தர்மம் ஒன்று இருக்கிறது என்று உள்ள அநுபவமே மகா செளந்தரிய மானது. இந்த உணர்வே சகல கலைகளுக்கும், விஞ்ஞா னத்துக்கும் அடிப்படை.

எவன் ஒருவன் இதை அறிந்துகொள்ளவில்லையோ, எவனுக்கு வியப்போ திகைப்போ ஏற்படுவதே இல் லையோ, அவனுக்குக் கண்கள் இருந்தும் பார்வை இல் லாதவையே! அவன் இருந்தும் இல்லாதவனே. இனம் புரியாத ஒரு மறை உண்மையை நுகர்வதில் பீதி தோன் றலாம். அதிலிருந்தே உதித்தது சமயம்.

நம்மால் ஊடுருவிக் காணமுடியாத ஒன்று இருக் கிறது என்ற உணர்வு; பரவசப்பட்ட உணர்ச்சியில் மொந்தாகாரமாகவே·தோன்றும் ஒரு பிரகாசம்—இந்த அறிவும், இந்த உணர்ச்சியுமே சமயப் பற்றுக்குச் சான்று. இந்த விதத்தில்தான் நான் சமய நம்பிக்கை உள்ளவன். 'ஜீவன் சாசுவதமானது' என்ற மறை உண்மை, எல்லா ஜீவராசிகளும் அதிசயப் படைப்புகள் என்ற உணர்வு; பிரபஞ்சத் தோற்றத் தத்துவத்தின் ஒரு சிறு பகுதியையாவது தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அவா; அதற்காக எடுக்கும் தீவிர முயற்சி—இவை போதும் எனக்கு."

தம் மனத்தில்பட்ட கருத்தை இப்படி உரைத்தவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்—தலை சிறந்த விஞ்ஞானி. இந்த தத்துவஞானத்திலிருந்து உதித்ததே இயற்கையிடமும், எல்லா ஜீவராசிகளிடமும் அவர் கொண்ட பக்தி. அந்தப் பக்தியின் உருவே அவர்.

"நமது வாழ்வின் கருத்து என்ன? எல்லா ஜீவராசிகளும் வாழ்வதன் கருத்துத்தான் என்ன? இவற்றுக்கு விடை காண்பதே சமயப்பற்று". இந்தப் பிரச்னையை எழுப்புவதில் ஏதாவது பயன் உண்டா? என்று ஒருவர் கேட்கலாம். என் விடை இதுவே.

தன் வாழ்வோ, பிறர் வாழ்வோ பொருள் அற்றது என்று ஒருவன் எண்ணினால் அவனுக்குச் சுகம் ஏது? துக்கந்தான். வாழ்வதற்குள்ள உரிமையையே அவன் இழந்து விடுகிறான். 'நான்' என்ற அகந்தையை, எந்த அளவுக்கு எந்த விதமாக ஒருவன் ஒழித்து நிற்கிறானோ அந்த அளவும் விதமுமே அவனை மதிப்பிடுவதற்கு உற்ற அளவுகோல்கள்' என்கிறார்.

விஞ்ஞானி காணும் தெய்வம், கோயில் கொண்ட தெய்வமாக இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. ஆயினும், கோயிலின் கடவுளைப் போலவே விஞ்ஞானியின் கடவுளும், பிரம்மாண்டம் முழுவதும் ஒத்து இயக்கச் செய்யும் கடவுள். உயர்ந்த தத்துவங்கள் கொண்ட கடவுள். படைக்கும் கடவுள். படைத்தவற்றையெல்லாம் உய்விக்கும் கடவுள்.

ஐன்ஸ்டீன் சொன்னார்: "உலகத்தைக் கடவுள்—ஏதோ சூதாட்டம் போல்—பகடை பன்னிரண்டு என்று பாய்ச்சிகை உருட்டுவதாக நான் எண்ணவேயில்லை அறுதியிட்ட திட்டத்தோடு உலகம் இயங்குகிறது" என்றஇது, அவரது ஆழ்ந்த விசாரணையின் முடிவு.

அண்டத்துக்கே 'நியந்தா' உண்டு என்ற இந்த தத்துவத்தை வேத நூல்களிலும், தெய்வ பக்தியைக் கூறும் பிற நூல்களிலும் காணலாம். மேலும் அவர் சொன்னார்: "மனிதன் தன் உடைமைகளும் ஆசாபாசங்களும் வீணே என்று அறிவான். 'இயற்கை' நமக்குத் தோற்றுவிக்கும் மகோனதன்தத்துவம், வியக்கத் தக்க நியதி, ஒழுங்கு, சிந்தனை உலகில் காணும் அதே நியதி, ஒழுங்கு, தத்துவம் அனைத்தையும் மனிதன் அறிவான்."

இவைகளையே தமது தத்துவ போதத்தில் வற்புறுத்துகிறார். ஆதலால் இயற்கையே அவரது கோயில் ஆகிவிடுகிறது. அடக்கம், பக்தி, ஆத்ம சிந்தனை இவற்றுக்குக் கேந்திர ஸ்தாபனம் அந்தக் கோயில்.

இந்த நிலையில் நம் இந்துமத ஆசாரியர்கள் என்ன சொல்கிறார்கள்—சொல்லியிருக்கிறார்கள்—என்பதைப் பார்ப்போம்.

தெய்வ தத்துவத்தை ஆராய்ந்த இந்துமத ஆசாரியர்கள், 'மண்ணும் அவனே, சுழலும் சக்கரமும் அவனே இடமும் அவனே.' 'புலனாகும் ஒவ்வொன்றிலும் இருக்கிறது அந்தத் தெய்வம். எல்லாவற்றுக்கும் வெளியேயும் இருக்கிறது அது' என்பார்கள். ஆதி முதல் கடவுளுக்கு ஆயிரம் பெயர்கள். ஒன்று, அத்ருச்ய-புலன்களுக்கு அப்பாற்பட்டது. இன்னொன்று வ்யக்த ரூபமானது-புலன்களால் உணரக்கூடியது. இந்த அபூர்வநிலை இறைவன் ஒருவனுக்கு உண்டு.

"எந்தப் படைப்புக்கும் காரண காரியம் உண்டு என்பதை விஞ்ஞானி அறிவான். அதிலேயே அவன் ஊறினவன். கடந்தது போலவே வருங்காலம் ஒன்றும் இருக்கவேண்டும். அதன் தன்மை இத்தகையது என்ற நிச்சயம் அவனுக்கு உண்டு. அவனது நெறிமுறை தெய்வபக்தியில் தோன்றியது அல்ல. மானிடப் பண்

பிலே பிறந்தது அவனது சமய உணர்ச்சி எத்தகையது பகுத்தறிவு பெற்ற மனிதன் எவ்வளவோ ஆராய்ந்து முடிவு காண்கிறான். இயற்கையில், அதன் நியதிகளில் காணும் உயர்ந்த லட்சியங்களின் வெறும் சாயலே விஞ்ஞானி ஆராய்ந்து காணும் முடிவுகள். இதை உணர்ந்து பரவசமாகியிருக்கும் மனோதர்மமே விஞ்ஞானியின் சமய உணர்ச்சி'' என்கிறார் ஐன்ஸ்டீன்.

எத்தகைய சொற்கள் : 'நாம் விஞ்ஞானத்தில் முன்னேறியிருக்கிறோம்; பொறிஇயல் தேர்ச்சி பெற்றுவிட்டோம்' என்று இறுமாப்பு அடைந்து முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறோமே! இதன் விளைவு நம்முடைய அழிவே என்று சில சமயம் நினைக்கத் தோன்றுகிறதே!

புகழ்பெற்ற ஆராய்ச்சியாளரான மாக்ஸ் முல்லருக்கும் வழிகாட்டியாக அமைந்தவர் பேராசிரியர் வில்ஸன் ஆவார். அந்த ஆங்கிலேயர் 1808-இல் அலுவல் நிமித்தம் கல்கத்தாவுக்கு வந்தார். கல்கத்தாவின் நாணயச்சாலையில் 1832 வரை அலுவல் பார்த்துவிட்டு இங்கிலாந்து திரும்பியதும், பாரதநாடு குறித்துத் தம் நினைவுகளை இப்படிக் குறிப்பிட்டார் அவர்.

''கல்கத்தா நாணயச்சாலையில் என்னுடன் பணிபுரிந்த இந்தியர்கள் எப்போதும் சிரித்த முகமாக இருப்பார்கள். தமது பணியில் முனைந்திருப்பார்கள். அந்த மகிழ்ச்சி ததும்பிய, அறிவு பொலிந்த முகங்களை என்னால் ஒருநாளும் மறக்கவே முடியாது. அவர்கள் மதுவகை எதுவும் குடிப்பதில்லை.

ஒழுங்குமுறையை விரும்புகிறவர்கள், உத்தரவுக்குக் கீழ்ப்படிபவர்கள், அவர்களிடம் சூதுவாது கிடையாது. மற்ற நாடுகளில் காவல்கட்டு, பாதுகாப்பு ஆகிய எச்சரிக்கைக்கு இருக்கிற அவசியம், அங்கே இருப்பதாகத் தோன்றவில்லை. இந்த இந்தியரிடம் அடிமைப் புத்தி துளியும் இல்லை.

"பண்பையும் நேர்மையையும் சொல்லிலும் செயலிலும் காட்டுகிறார்கள். இவர்களுக்கு உரிமை அளித்து, இவர்களுடன் சுவாதீனம் கொண்டாடினால் மிகத் தரமான நகைச்சுவையை இவர்களிடமிருந்து ரஸிக்கலாம். நம்மை எவ்வளவு உயர்தரமாகக் கிண்டல் செய்து நம்மையே மகிழ்விக்கிறார்கள்."

அவரது மனம் திறந்த குறிப்புகளைப் படிக்கப் படிக்க நம் மனம் எத்துணைப் பரவசப்படுகிறது!

இந்தியர்களிடம் இத்தனை பிரியமும் மதிப்பும் வைத்திருந்த ஆங்கிலேய ஆதிகாரி வில்ஸன் 1786-ஆம் ஆண்டு செப்டம்பர் 26-இல் பிறந்தவர். ஸோஹோ ஸ்க்வயர், ஸெயிண்ட் தாமஸ் ஆஸ்பத்திரி இரண்டிலும் கல்வி பயின்றவர்.

இந்தியாவுக்கு வேலைக்காக வந்தவர், ஸம்ஸ்க்ருத மொழியில் ஈடுபட்டார். அதை முறையாகப் பயின்றார். பல பண்டிதர்களிடம் ஸம்ஸ்கிருதம் படித்தார். அவர்களைப்பற்றி ஒரு சமயம் மாக்ஸ்முல்லரிடம் இவ்விதம் தெரிவித்தார்.

"நான் ஒழிந்த நேரங்களில் ஸ்ம்ஸ்கிருதம் படிக்கத் தொடங்கினேன். பல வித்வான்கள் அறிமுகமானார்கள். இவர்களிடம் ஞான நிறைவையும், மதிநுட்பத்தையும், செயல் முனைப்பையும், உண்மை பேசுவதையும், சுவையாக அளவளாவதையும் காண்கிறேன். இவர்களுடைய பேச்சில் இனிமையும் காம்பீர்யமும் கலந்திருப்பதைக் கண்டேன். ஹிந்து வித்வான்களிடம் அதிசயிக்கத்தக்க எளிமை காண்கிறது. தன்னடக்கம் இவர்களுக்கு இயல்பான சிறப்பு. ஆனால் ஐரோப்பியர்களின் உறவால் சிலரிடம் ஆடம்பரம் குடிகொண்டு வருவதையும் கண்டேன்.

ரிக்வேதத்தை முதலில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பெருமை இவருக்குத்தான் உரியது.

இவர் 1811 முதல் 1833 வரைக்கும் வங்காளத்தி லுள்ள ஏஷியாடிக் ஸொஸைட்டியின் செயலாளராகயிருந் தார். இந்தியாவிலிருந்து திரும்பிச் சென்றதும் 1333-ல் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தில் ஸம்ஸ்கிருதப் பேராசிரியராக நியமனம் பெற்றார். 1836-ல் 'இண்டியா ஹவுஸ்' நூல் நிலையத் தலைவராக அவரை நியமித் தார்கள். 1837-ல் ராயல் ஏஷ்யாடிக் ஸொஸைட்டி யின் டைரெக்டரானார். ஸம்ஸ்கிருத—இங்கிலிஷ் அக ராதி, மேகதூதத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு, விஷ்ணு புராணப் பதிப்பு, ஸம்ஸ்கிருத இலக்கணம் இவை போன்ற இன்னும் பல ஸம்கிருத நூல்களைப் பதிப் பித்தும் மொழிபெயர்த்தும் பெருமை சேர்த்தார்.

ஆனால் அவருக்கு அழியாப் புகழுக்கு அடிகோலிய மகத்தான சாதனை, ரிக்வேதத்தை அவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததுதான்.

இன்றும் மேலைநாடுகளில் வேதத்தை ஆராய்கிற வர்களுக்கு அது உறுதுணையாக உள்ளது. வேதங்களை அறிந்துகொள்ள ஸாயண பாஷ்யத்தின் உதவி இன்றி யமையாதது என்பதை இப்பேராசிரியர் வில்ஸன் உறுதி யாகக் கூறியிருக்கிறார்.

ஸாயண பாஷ்யத்துடன் ரிக்வேதத்தை முதலில் பதிப்பித்த மாக்ஸ்முல்லர், வில்ஸனிடம் மிக்க மதிப்பு வைத்திருந்தார்.

உண்மையில், பாரதநாடும், பாரத மக்களும் பற்றிய பிரபல நூலான—இந்தியா; அது நமக்கு போதிக்கக் கூடியது என்ன?—என்பதை உருவாக்குவதற்கும் பேரா சிரியர் வில்ஸனின் கருத்துக்களிலிருந்தே ஊக்கம் பெற்

றார் மேக்ஸ்முல்லர். இருவரும் மேல்நாட்டிலே இந்திய வேத நூல்களுக்கும் பெருமை மிக்க பலகணியாக விளங்கினார்கள்.

வில்ஸன் 1860, மே மாதம் காலமானார். பல ஆண்டுக்காலம் வில்ஸனின் உதவியாளராகப் பணி புரிந்த மாக்ஸ்முல்லர், அவர் காலமானபின் சில ஆண்டுகள் கழித்து, அவருடைய பதவிக்கு உயர்த்தப் பெற்றார்.

இவர்களெல்லாம் 'ஹிந்து' என்பதைப்பற்றி மிகவும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தார்கள். ஹிந்து என்பது சமயப் பெயரல்ல. இந்தியரெல்லாம் ஹிந்துக்களே! என்ற கருந்துக்கு வந்தார்கள்.

ஹிந்து என்னும் பெயர், மிகப் பழமையானது இல்லை. இந்தியருக்கு யவனர்கள் கொடுத்தது இந்தப் பெயர். ஆனால் ஹிந்து என்னும் சொல்லின் உபயோகம் இஸ்லாம் சமயம் தோன்றுவதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவெங்கும் இருந்திருக்கிறது.

ஈரானியர் 'ஸ'வை 'ஹ' என்று உச்சரித்து வந்தார்கள். ஆகவே 'ஸிந்து' என்ற சொல்லை 'ஹிந்து' என்று உச்சரித்தார்கள். அந்தக் காலத்தில் ஸிந்து நதிக்கரையில் வசித்து வந்த ஆரியருடன் அவர்கள் பழகி வந்தார்கள். ஸிந்துவே 'ஹிந்து' என்று மாறி, நாளடைவில் இனம் என்னும் பொருளில் 'ஹிந்து' என்றும், இந்தியா என்னும் பொருளில் 'ஹிந்துஸ்தான்' என்றும் வழங்கிற்று.

பழைய காலத்து ஸம்ஸ்கிருத நூல்களிலும் பாலி நூல்களிலும் 'ஹிந்து' என்ற சொல்லைக் காணவில்லை. ஆகவே, இந்தியரல்லாதவர்கள்தாம் இந்தியரை ஹிந்து அல்லது 'இண்டோ' என்று சொல்லி வந்தார்கள்.

பழைய நாளிலே எழுதியது பாரசீகரின் புனித நூலான 'அவேஸ்தா'. அதிலிருந்து இந்த விஷயம் புலனாகிறது.

டேரிஸ் என்ற அரசனின் கல்வெட்டுக்களில் 'ஹிந்து' என்ற சொல் காண்கிறது. ஆகவே ஹிந்து என்ற சொல் லின் பரம்பரை மிகவும் பழமையானது என்று தெரிகிறது.

ஆனால் இந்தியாவில் வசித்து வரும் அனைவரும் ஒரே இன ஹிந்துக்களா அல்லது பல இனத்தவர்களா என்று ஆழ்ந்து ஆராய்ந்தால், இந்தியாவில் வசித்து வரும் எல்லா இன மக்களையும் அடக்கிய பெயராகவே வழங்கி வந்திருக்கிறது, அந்த 'ஹிந்து' என்ற சொல்.

இந்த நாடு, குறிப்பிட்ட சில இனத்தவர்களின் பிறப் பிடம் மட்டும் அல்ல. இங்கே உள்ள மக்கள் இனங்களின் பட்டியலை எழுதினால், அது மிக நீண்டிருக்கும். நீக்ரோ உள்பட, ஆக்நேயர், திராவிடர், கிராதர், ஆரியர் ஆகிய அனைவரும் இந்த நாட்டின் மூல இனத்தவர். பிற இனத்தவரான ஹூணர், யவனர் போன்றவர்கள் படையெடுத்து வந்து இங்கே குடியேறிய வர்கள். இவர்கள் அனைவருக்கும் உள்ள நம்பிக்கை, இயல்பு, எண்ணம், கற்பனை, நடத்தை ஆகிய எல்லாம் ஒன்று சேர்ந்து உண்டாகிய பண்பாடே ஹிந்துப் பண்பாட்டின் மூலம்.

பெரும்பாலும் ஹிந்துப் பண்பாட்டை வைதிகப் பண்பாடு என்றும் கூறுகிறார்கள். ஆனால் உண்மை யாகவே இந்த வைதிகப் பண்பாட்டை முற்றும் ஆரியரின் படைப்பு என்று திட்டவட்டமாகக் கூறிவிட முடியாது. திராவிடர், ஆக்நேயர் முதலியவருடைய பிரபாவமும் அதில் வெளிச்சமாகப் புலனாகிறது. அத னால் ஹிந்து ஸ்தானத்தில் வசித்து வரும் அத்தனை பேரையும் ஹிந்துக்கள் என்று குறிப்பிட்டால் தவறாகாது.

இந்தியர் அனைவரும் ஆரியரும் அல்ல, திராவிடரும் அல்ல. பல இனத்தவர்களின் கலப்பினங்கள் இங்கே தோன்றியிருக்கின்றன. மற்ற இனத்தவர்களுடன் ஆரியர்களின் திருமண இணைப்பு ஏற்பட ஏற்பட அப்படி இணைந்தவரெல்லாம் தம் சொந்த இனப் பெயர்களை விட்டுவிட்டு' 'ஹிந்து' என்னும் பெயரையே ஏற்றுக்கொண்டார்கள்.

அந்நிய நாட்டினர் படையெடுத்தபோது தென்னிந்தியாவே அவர்களின் உய்விடமாயிற்று. 'கலியின் வலிமை அதிகரிக்க அதிகரிக்கத் தர்மம் க்ஷீணித்துக் கொண்டே போயிற்று. யவனர்களின் படையெடுப்பினால் ஹிந்துக்கள் விந்தியத்தைக் கடந்தார்கள் என்று சாலிகா புராணத்தில் கூறியிருக்கிறது. 'சாரங்கர பத்ததி'யிலும் இப்படியே கூறியிருக்கிறது.

படையெடுத்து வந்தவர்கள் 'ஹிந்து' என்ற சொல்லுக்குத் திருடன், தூர்த்தன் என்றெல்லாம் பொருள் கற்பித்தார்கள். பின்னாளில்தான் ஹிந்து என்பவன் உண்மையான தர்மத்தைக் கடைப்பிடிக்கும் அறிஞன். வைதிக தர்மத்தைப் போற்றுபவன் என்றெல்லாம் பொருள் கொண்டார்கள்.

'அத்பதகோஷ்' என்னும் அகராதி ஹிந்துவைப் பற்றி வீரமூட்டும் பொருளில் வர்ணிக்கிறது. தீயோரை அழித்து நல்லோரைக் காப்பாற்றுவதுதான் ஹிந்துவின் கடமை என்று அது கூறுகிறது.

புத்த ஸ்ம்ருதியில் 'ஹிம்ஸைகளைப் பொறுத்துக் கொள்பவனே' அதாவது பிறரால் ஹிம்ஸை ஏற்பட்ட போதிலும் தன் நன்னடத்தையைக் கைவிடாமல் வேதங்களைப் படித்து அறிபவனே ஹிந்து' என்று எழுதியிருக்கிறது

'சப்தகல்பத்ரும' என்றும் அகராதியில், 'ஹினத்தைத் தூஷிப்பன் ஹிந்து' என்று எழுதியிருக்கிறது.

'பாரிஜாத ஹரணம்' என்ற நாடகத்தில் ஒரு செய்யுளில் ''ஆயுத சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவன் 'ஹிந்து' என்றும் 'அவன் தன் தவசின் பலத்தினால் பாவங்களையும், உடலையும், துஷ்டர்களையும், விரோதிகளையும் அழிப்பதில் வல்லவன்' என்றும் கூறியிருக்கிறது.

''ப்ருஹஸ்பதி ஆகம''த்தில் 'ஹிமாலயத்திலிருந்து மஹாசமுத்திரம் வரையிலுள்ளதும் தேவர்கள் படைத்ததுமான நாடு ஹிந்துஸ்தானம்' என்று இருக்கிறது.

'மாதவ திக்விஜயத்தில்' ஓங்காரத்தை மூலமந்திரமாகக் கொண்டு, மறுபிறப்பில் நம்பிக்கையுடன் பசுக்களைப் பேணி, ஹிம்சையை வெறுப்பவனே ஹிந்து என்று எழுதியிருக்கிறது.

இக்கருத்துக்களை யெல்லாம் கொண்டு நாம் அறிவது என்ன?

மிகப் பழமையான ஸம்ஸ்கிருத நூல்களில் 'ஹிந்து' என்னும் சொல் காணக் கிடைக்காத போதிலும், இந்தச் சொல் 'ஆரியர்' என்னும் சொல்லைக் காட்டிலும் இந்தியர்களுக்கு மிகவும் பொருத்தமானது. இது இந்தியாவில் வசித்து வருபவர்களுக்கும் இந்திய மதத்தைத் தழுவும் மற்ற அனைவர்க்குமே பொருத்தமான பொதுவான பெயர்.

பெயர் பெற்ற யாத்திரிகரான ஹுயன் ஸாங்கின் காலத்தில் இந்தச் சொல் இந்தியா வெங்கும் பெரிதும் வழங்கி வந்தது. ஹிந்து என்ற சொல்லை ஹுயன்ஸாங் தம் சீன மொழியில் 'இந்தேர்' என்று இதை மொழி பெயர்த்திருக்கிறார். இதன் பொருள் 'சந்திரன்' என்பதாகும். நட்சத்திரங்களின் நாயகனாகச் சந்திரனுக்கு

முதலிடம் கிடைத்திருப்பதைப்போல், இந்தியருக்கு அந்தக் காலத்திலேயே கிடைத்திருந்த கௌரவம் காரணமாக, உண்மையாகவே சீனர்கள் இந்தியரை ஹிந்து என்று குறித்து வந்தார்கள்.

இப்படியெல்லாம் வெளிநாட்டவர் நமது வேதத்தையும் பாரம்பரியத்தையும் மிகவும் புகழ்ந்து போற்றியுள்ளார்கள்; தகுந்த மரியாதையையும் கொடுத்து வந்தார்கள்.

நம் முன்னோர்களைக் காட்டிலும் நாம் மிகவும் நாகரிகம் உடையவர்கள் என்று பெருமைப்பட்டுக் கொள்கிறோம். நமது வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது என்று சொல்லிச் சந்தோஷம் அடைகிறோம். இந்தத் தரத்தை எப்படிக் கணிக்கிறோம். ஆகாய விமானங்கள், மோட்டார் வாகனங்கள், டெரிலின், நைலான் துணிகள், ரேடியோ, ட்ரான்ஸிஸ்டர், டெலிவிஷன் இப்படி நவீனக் கருவிகளைக் கொண்டே கணிக்கிறோம். எளிய வாழ்க்கையினால் ஏற்படக்கூடிய சந்தோஷத்தைத் துறந்து விட்டோமே! இது நியாயமாகுமா?

# 13

நமது சனாதன தர்மத்தின், பாரதப் பண்பாட்டின், தேச கலாசாரத்தின் ஜீவ நாடியாக விளங்குவது வேதமே. அனைத்துத் தர்மங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் நீதி நூல்களுக்கும் தாயாக விளங்குவது நமது வேதம் ஒன்றே!

ஆகவே, ஸத்யம் வத: தர்மம் சர, அதாவது உண்மையே பேசு, அறவழியில் நட என்பன போன்ற மகா

வாக்கியங்களை நமது வேதங்கள் கூறுகின்றன. எல்லா வித வித்தைகள் அறிவுகள் வேதத்திலிருந்துதான் வந்தவைகளாகும்.

நம் முன்னோர்கள் விட்டுச் சென்ற நான்கு வேதங்களும் அநுபவப் பூர்வமான உண்மைகளின் தொகுப்புகளாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் உருண்டோடி விட்ட போதிலும் வேதங்கள் உரைத்த உண்மைகள் துருப்பிடித்து வீணாகவில்லை. இன்றையச் சிக்கல்களுக்கும் அவை அருமருந்தாகவே உள்ளன. ஏனெனில் வேதங்கள் காலத்தை வென்றவையாகும்.

வேதத்தை அடிப்படையாகக் கொண்டே தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று சொல்லக்கூடிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற தர்மத்தின் அடிப்படைத் தத்துவங்களை ஏற்படுத்தினர் நமது முன்னோர்கள்.

அறத்தினால் பரலோகத்தில் சுகமும், பொருளினால் இகலோகத்தில் சுகவாழ்வும், இன்பத்தினால் மக்கட்பேறும், வீடு என்ற நியதியினால் ஜனனமற்ற நிலையையும் அடையும் பேற்றை மனிதன் அடைகின்றான்.

இறைவன் வேதங்களை அனுக்ரஹித்தார். அவைகளைக்கொண்டே மனிதனின் நல்வாழ்வுக்காகத் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களை ஏற்படுத்தினார். தர்ம சாஸ்திரத்தை மனுவும், அர்த்த சாஸ்திரத்தை பிரகஸ்பதியும், காம சாஸ்திரத்தை நந்தீஸ்வரரும், நஸ்யகேதுவும், உலக மக்களுக்கு உபதேசித்தார்கள்.

வேதங்கள் நம் ஆன்மீக முன்னேற்றத்தை வலியுறுத்துவது உண்மைதான். ஆனால் அடிப்படையில் அவை நம் முன்னோர்களின் பொதுவான வாழ்க்கைத்

கண்ணோட்டத்தையே விளக்குகின்றன. ஆத்மாவைப் பற்றி மட்டுமல்ல, உறுதியான உடல், கருணை உள்ளம், சுறுசுறுப்பான புத்தி, எதிர்காலம் பற்றிய திடமான நம்பிக்கை ஆகியவைகளின் அவசியத்தையும் அவை கூறுகின்றன.

வேதங்கள் குறிப்பாக வாழ்க்கையை ஒரு யுத்தமென்றும், நாம் அதில் வீர உணர்ச்சியுடன் ஈடுபட வேண்டும் என்றும் ஆலோசனை தருகின்றன. இதனால்தான் விவேகானந்தர், 'எழுவீர், விழிப்பீர், லட்சியத்தை அடைவீர்' என்று கம்பிரமாகத் துவங்கும் வேதப் பாடலை மிகவும் விரும்பினார். இப்பாடல் நான்கு வேதங்களிலும் உள்ளது குறிப்பிடத்தக்கது.

வேத புருஷனான பகவானிடமிருந்து வேதங்களையும், வேதங்களிலிருந்து தருமங்களையும், தருமங்களின் மூலமாக யாக யக்ஞங்களையும், யாக யக்ஞங்களின் மூலமாக மழையையும், மழையின் மூலமாக உணவுப் பொருள்களும், உணவுப் பொருள்களின் மூலமாக உடல்களும் என்ற நியதிப்படி ஜீவன் இயற்கையை அனுபவித்துக் கொண்டிருக்கிறது.

பாரதப் புண்ணிய பூமியில் பிறந்தவர்கள் எப்படி பாரத புத்ரர்களாகக் கருதப்படுகிறார்களோ, அது போலவே வேதக் குழந்தைகளாகவும் கௌரவிக்கப்படுகின்றனர். பாரத மக்களுக்கெல்லாம் அன்னையாக விளங்குபவள் வேதமாதாவே.

வாழ்க்கை ஒரு போராட்டம் என்பது நாமறிந்ததே. ஆனால் செல்வம், புகழ், பதவி ஆகியவைகளைப் பெறுவதில் உள்ள சிக்கல்களையே போராட்டம் என்று நினைக்கிறோம். வேதங்கள் கூறும் யுத்தம் வேறு விதமானது. அது வெளியே நடப்பதில்லை. வேதங்களின் கருத்துப்படி மனிதன் தன் முழு மனிதத் தன்மையைப்

பெறுவதற்காகச் செய்யும் முயற்சியே வாழ்க்கை என்ற யுத்தமாகும்.

இப்போராட்டம் பணக்காரன் ஆவதற்கல்ல. பண்பாளன் ஆவதற்கு. இப்போரில் உடலே யுத்த பூமி. நல்லுணர்வுகளும் தீய ஆசைகளுமே போரிடும் படைகள். சாமவேதத்தில் இதற்கென வேண்டப்படுகிறது. "எங்கள் உடல் ஆண்மையும் சக்தியும் நிறைந்ததாக ஆகட்டும். அப்பொழுதுதான் நாங்கள் ஒவ்வொரு போரிலும் வெற்றி காணமுடியும்."

இப்பாடலிலிருந்து வாழ்க்கையில் நாம் பலமுறை போராட நேரிடும் என்று தெரிகிறது. இதற்குக் காரணமுண்டு. பகைவன் எதிரில் இருந்தால் அவனை வென்றதும் போர் முடிகிறது. ஆனால் வேதங்களின் கருத்துப்படி பகைவன் நம் மனதின் உள்ளே ஒளிந்து நிற்கிறான். பலமுறை போரிட்டு ஒவ்வொரு முறையும் வென்று, இப்பகைவனை அழிக்க வேண்டியுள்ளதால் இப்போராட்டம் மிகவும் நுணுக்கமானது.

இத்தகைய போராட்டத்தில் உண்மையான வீரனே வெற்றி பெறமுடியும். அப்படிப்பட்ட வீரன் யார் என்ற கேள்விக்குப் பதிலாக, ரிக்வேதத்தில் இவ்வண்ணம் கூறப்படுகிறது. "அவனை யாரும் எந்த சக்தியும் வெல்ல முடியாது. அவன் சலிப்படையாத மனமுடையவன். முதுகில் மண்படாதவன். எப்படியாவது வெற்றி பெற ஆசைபட்டுக் கௌரவக் குறைவாக நடக்காதவன். உயர்ந்த மலைகளும் ஆழ்ந்த நதிகளும் அவனுக்கு அச்சம் தராது."

நம் முன்னோர்கள் தெய்வ வழிபாடே தங்களைக் காக்கும் சாதனமென்று எண்ணி வானளாவிய கோவில்களைக் கட்டினார்கள். சிறந்த முறையில் ஆச்சார அனுஷ்டானங்களுடன் இறைவழி முறைகளைக்

கையாண்டார்கள். கோவில் உற்சவங்களைப் பெரும் விழாவாக நடத்தினார்கள்.

வேத சாஸ்திரங்களில் குறிப்பிட்டபடியே கோவில்கள் கட்டப்பட்டன. இறைவனை எழுந்தருளும்படி பிரார்த்திக்கும் சொற்களையே மந்த்ரங்களாகவும் அவர்கள் கருதினார்கள். வேதங்களில் கூறியுள்ளபடியே கோவிலின் முன்வாயில், முலஸ்தானம், கோபுரம், கொடிக்கம்பம், சிகரம், மண்டபங்கள் முதலியவைகள் சிற்ப சாஸ்திர நியதியின்படியே கட்டப்பட்டன.

கோயில்களில் ஓதப்படும் மந்த்ரங்கள் அனைத்தும் மணியோசையை அனுசரித்தே உள்ளன. இவ்விதம் அனுஷ்டித்தால்தான் தேவதைகள் நற்பலன்களை அளிப்பார்கள் என்பது நம் முன்னோர்களின் நம்பிக்கையாகும். வேத மந்த்ரங்களை வேதத்தில் கூறியுள்ளபடி அக்ஷர சுத்தமாக மனப்பாடம் செய்யவேண்டும்.

இறைவனிடம் இடையறாது செலுத்தி வரும் அன்பே பக்தியாகும். புலன்களுக்குப் புலப்படாத ஒப்பில்லாத இன்பமே ஞானமாகும். புலன்களைத் தன்னிச்சையாகத் திரிய விடாமல், தெய்வ சம்பத்தை ஏற்படுத்திக்கொண்டு சித்தத்தோடு அவைகளை ஒன்றச் செய்வதே யோகம் எனப்படும். இந்த யோகம் என்பது ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைவது என்ற சித்தாந்தமாகும்.

ஆத்மாவின் உணர்ச்சி மட்டுமே வேதங்களின் வேண்டுகோள் அல்ல. அவை வலிமை மிக்க உடலின் அவசியத்தையும் உணர்த்துகின்றன.

இக்கருத்தை ஒட்டிய பாடல் ஒன்று அதர்வ வேதத்தில் உள்ளது. ‘‘என் வாயில் ஒலியும், நாசியில் மூச்சும், கண்களில் பார்வையும், செவிகளில் கேட்கும் சக்தியும் குறைவின்றி ஏற்படும். கேசம் நரைக்காமல் பற்கள்

கெடாமலிருக்கட்டும். புஜங்களில் பலமும், தொடை களில் சக்தியும் கால்களில் வேகமும், பாதங்களில் உறுதி யும் உண்டாகட்டும். அனைத்தும் சிதைவுற இல்லாம லும், என் ஆத்மா குறைகள் இல்லாமலும் விளங் கட்டும் ''

இன்றைய மனிதனின் மற்றொரு வியாதி தனிமை உணர்வு. நாம் ஒவ்வொருவரும் ஒரு தீவு. உணர்ச்சி நம்மைத் துன்புறுத்தி வருகிறது. ஆனால் நன்கு கவ னித்தால் இயற்கை பல்வேறு உருவங்கள் தரித்து நம் முடன் உரையாடக் காத்திருப்பதை அறிய முடியும்.

இயற்கையின் சூழலில் மனித சிருஷ்டி துவங்கியது. எனவே, இயற்கை அன்னையை விட்டு விலகி நிற்கும் வரை மனிதன் நிம்மதி பெறமுடியாது. நண்பர்கள் துரோகம் செய்தாலும், உறவினர்கள் உதறித் தள்ளி னாலும், இயற்கை ஆறுதலளிக்கும். ஆகவேதான் இயற்கையின் பெருமை வேதங்களில் விரிவாகக் கூறப் பட்டுள்ளது.

இயற்கை பற்றிய ரிக்வேத பிரார்த்தனை இதோ உள்ளது. ''நெறி முறைப்படி வாழ்பவனுக்குக் காற்று இனியது. நதிகள் இனியவை; செடிகள் நமக்கு இனிமை தரப்படும். இரவு இனிதாக அமைத்து சூரியோதயம் இனிமையாகட்டும். பூமியின் தூசி இனிமை பெறட்டும். விண்ணுலகில் உள்ள நம் தந்தையாகிய இறைவன் இனிமையாக இருக்கட்டும். காட்டுமரங்களும், சூரிய னும், பசுக் கூட்டங்களும் நமக்காக இனிமை பொருந்தி விளங்கட்டும்.

இதிகாச புராணங்களும் உபநிஷத்துக்களும் வேதங் களின் துணை அங்கங்களாக இருந்த போதிலும், ஒன் றன் பிரமாணம் மற்றொன்றின் பிரமாணத்திற்குப் பொருந்தாது.

தற்கால வாழ்க்கையில் நம்மைத் திகைக்க வைக்கும் சிக்கல்களுக்கும் வேதங்களில் உரிய ஆலோசனை தரப் பட்டுள்ளது. அவைகள் கூறுவதற்கேற்ப நாம் வாழ்க்கை யைச் சுவை நிறைந்த ஒரு போராட்டமாகக் கருதி லட்சியத்தை நோக்கி உறுதியாகவும் உற்சாகமாகவும் முன்னேற வேண்டும்.

அதற்குத் தேவையான வீர இயல்புகளை வளர்த் துக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் புழுவைப் போல் கேவலமான வாழ்க்கை நடத்தாமல் நாம் கம்பீர மாக விளங்க முடியும். இப்புதிய சூழ்நிலையில் தோல்வி உணர்ச்சிக்கு இடமில்லை.

இயற்கையுடன் ஒட்டி வாழக் கற்றுக்கொண்டு விட்டால் பின்னர் தனிமை உணர்ச்சிக்கும் இடமில்லை. இத்தகைய கண்ணோட்டம் வாழ்க்கை வாழ்வதற்கே என்ற நம்பிக்கையை உண்டாக்கும். இந்நிலையில் 'நாம் நூறு இலையுதிர் காலங்கள் வரை வாழ்வோம். காதால் கேட்போம்; பேசுவோம்; தலை உயர்த்தி நடப்போம். ஆம். நூறு இலையுதிர்காலங்களுக்குப் பின்பும் இவ் வாறே வாழ்ந்திடுவோம்.''

கீதையில் பகவான் 'வேதங்களின் மூலம் அறியப்படு பவனும், உபநிஷத்துகளுக்குக் கர்த்தாவும் நானே. வேதங்களை அறிந்தவனும் நானே' என்கிறான். ஆகவே பாரதத்தாயின் மக்களாகிய நாம், நம்மை பெற் றெடுத்த அன்னையை நேசிப்பது போலவே வேத மாதாவையும் நேசிக்க வேண்டும்.

அப்பொழுதுதான் நமக்கு, இரக்க உணர்வு, தர்ம சிந்தை, கோபமின்மை, அடக்கமான நடத்தை, நல்ல— பிறரைப் புண்படுத்தாத—சொற்கள், மனிதாபிமானம், மற்றவர்களைப்பற்றி நினைத்துப் பார்க்கும் உணர்வு— இன்னும் கணக்கிலடங்காத நல்ல குணங்கள் ஏற்படும்.

பக்தியின் படிகளை ஏற ஏற, நமக்கு மனிதத்தன்மை அதிகரிக்கும். வேற்றுமை உணர்வு மறையும். உண்மையின்மேல் பிடிப்பு ஏற்படும்.

ரிக்வேதம் இந்திரன் முதலிய தெய்வங்களின் துதி மட்டுமில்லை; அந்தக் காலத்து மக்களின் சமுதாயத்தையும் அது சித்திரித்துக் காட்டுகிறது. வேத காலத்தில் இருந்த நம் முன்னோரின் வாழ்க்கையையும் எண்ணங்களையுங்கூட விளக்குகிறது.

அந்தக் காலத்திய மக்கள் சமூகம் வாழ்க்கை செழிக்கவேண்டி உற்சாகத்துடன் பல அலுவல்களில் ஈடுபட்டது, ராஜ்யத்தின் வளம் கொழிக்கவும் போரில் வெற்றி பெறவும் முயன்று வந்தது போன்றவற்றைத் தெரிவிக்கிறது.

வேத முனிவர்கள் 'வீரர்களான புதல்வர் பிறக்கட்டும்! போர்களில் வெற்றி உண்டாகட்டும்' என்று தெய்வங்களிடம் அடிக்கடி வேண்டுவார்கள். ரிக்வேதத்தில் ஆறாம் மண்டலத்தில் இருக்கும் ஒரு ஸூக்தம் முழுவதும், வில், பாணம், தேரோட்டி, தேர், குதிரை, பற்பல ஆயுதங்கள் இவைகளைப்பற்றி வர்ணிக்கின்றன.

'ஜீ முதஸ் யேவ' என்று தொடங்கும் சுலோகம் போர்க்களத்தில் இறங்கும் சூரனைப் புகழ்கிறது.

அதர்வ வேதம் இதையும்விட அதிகமாக உலக விஷயங்களைக் குறிக்கிறது. போர், ஆயுதம் இவற்றைப் பல ஸூக்தங்கள் புகழ்கின்றன. சமாதான காலத்தில் அரசனுக்கும் அரசுக்கும் நலம் தரும் விஷயங்களையும் இந்த வேதம் கூறுகிறது. சிந்தனை, சொல், செயல் இசை ஒருமித்து விளங்க வேண்டும் என்னும் ஸூக்தங்களும் உண்டு. இப்பொழுது நம் பாரதநாடு இத்தகைய

ஒருமைப்பாட்டைத்தானே வேண்டுகிறது? இதை அந்தக் காலத்திலேயே நம் முனிவர்கள் கண்டுணர்ந்தார்கள்.

ஆகவே பல ஸூக்தங்களில் 'ஸங்கச்சத்வம்' ஸம்வதத்வம், ஸம்வோ மநாம்ஸிஜாநதாம்' என்று கூறினார்கள். அதர்வ ஸூக்தங்கள் சில, ராஜ்ய சபையில் கலவரமின்றிச் சர்ச்சை செய்யவேண்டும் என்பதையும் கருத்தொருமையையும் வேண்டுகின்றன. வேதத்தைச் சார்ந்த அரச நீதியில் குடியரசைப் பற்றிய பல அம்சங்கள் இருக்கின்றன. 'விகதம்' என்ற மக்கள் சபை முக்கியமானது.

ராஜ்யம் ஆளுவதைப் பற்றியும் ஆளுநரைப் பற்றியும் சேனையின் பலத்தைப் பற்றியும் அதர்வ ஸூக்தங்கள் பல, விளக்கமாகக் கூறுகின்றன. வேதங்கள், வீரர்களான மக்கள் வேண்டும் என்று மட்டும் கோரவில்லை; சபைகளில் சென்று மக்களைக் கவரும் முறையில் பேசும் திறமை வாய்ந்த இளைஞர் வேண்டும் என்றும் கூறுகின்றன.

'ஆப்ரஹ்மத் ப்ராஹ்மண' என்று தொடங்கும் மந்த்ரம், வேதத்தில் பல இடங்களில் காணப்படுகிறது. அது எண்ணத்தில் மட்டும் ராஜ்ய பக்தியைக் கூறாமல் ராஜ்யம் நிலைபெற்றுச் செழிப்பாக இருக்க என்ன என்ன வேண்டுமோ அவற்றையெல்லாம் கூறுகிறது.

யஜுர் வேதத்தில் இருக்கும் 'சமகம்' என்ற பகுதி மக்கள் சமுதாயத்துக்கு வேண்டிய எல்லாவித வளத்தையும் வேண்டுவதாகும்.

ரிக்வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் இருக்கும் 'வளகாம்ப்ருணி' ஸூக்தம் சொல்லையே சிறந்த சக்தியாகக் கூறியுள்ளது. 'அகம்ராஷ்ட்ரி' என்று தொடங்கும் சுலோகத்தில் சொல், தன்னையே நாட்டின் சிறந்த வேததையாகக் கூறிக்கொள்கிறது.

ராஜ்யத்தின் மீதும் ராஜ்யத்தில் இருக்கும் ஆறு, மலை, காடு முதலியவற்றின் மீதும் ஈடுபாட்டை வேத கால முனிவர்கள் அதிகமாக வளர்த்திருக்கிறார்கள். ரிக்வேதத்தில் ஒரு சுலோகம் கங்கை, யமுனை, ஸரஸ்வதி முதலிய எல்லா நதிகளையும் அன்புடன் அழைக்கிறது.

நாம் இந்தப் புண்ணிய பூமியைப் 'பாரதத்தாய்' என்று உள்ளத்தில் வைத்து வழிபடுகிறோம். பக்கிம் சந்திரர், சுப்பிரமண்ய பாரதியார் இருவரும் பாரதத்தைச் சிறந்த தாயாகவும் பராசக்தியாகவும் வழிபடுகிறார்கள். நாம் பூமிதேவியை, உலகத்தைப் படைத்தாளும் பகவான் விஷ்ணுவுக்கு மனைவி என்று வழிபடுகிறோம். இந்தக் கருத்துக்களுக்கெல்லாம் வேதந்தான் மூலம்.

அதர்வ வேதத்தில் மிகச் சிறந்தது பிருதிவி ஸூக்தம். அதில் முன்கூறிய கருத்துக்களைக் காணலாம். அதில் ஒரு வரி 'பூமியான தாய் பிள்ளையான எனக்குப் பாலைக் கொடுக்கட்டும்' என்று வேண்டுகிறது.

வேத காலத்து வேள்விகளில் அசுவமேதம் முக்கியமானது. ஒரு ராஜ்யம் என்பது ஒரு சக்கரவர்த்தியின ஆளுகைக்கு உட்பட்டது. இந்த முறையில் ஒரு ராஜ்யம் என்ற கருத்தை இந்த வேள்விகள் வளர்த்தன. சக்கரவர்த்திதான் அசுவமேதம் செய்யவேண்டும். இந்தக் கருத்தை ஐதரேய பிராம்மணத்திலும் தைத்திரியப் பிராம்மணத்திலும் உள்ள ஆசிர்வாத மந்த்ரங்களிலே காணலாம்.

புராணங்கள்பல, ராஜரிஷிகள், சக்கரவர்த்திகளின் கதை வாயிலாக 'ஒரு ராஜ்யம்' என்ற கருத்தை நிலை நாட்டியுள்ளன. இமயம் முதல் தென்கடல் வரையில்

உள்ள இந்த நாட்டைப் பிறருக்கு இடம் கொடுக்காமல் ஆளுபவன்தான் சக்கரவர்த்தி என்ற கருத்தைக் கௌடில்யர் விளக்கியுள்ளார்.

பதினெட்டுப் புராணங்களும் உபபுராணங்களும் தம் பாரத நாட்டை முழுமையாக அதன் நதி, மலை, நகரங்கள், புண்ணிய தீர்த்தங்கள் உட்பட வர்ணிப்பதைப் பல இடங்களில் காணலாம். வடதிசையில் இமாலயத்தையும், தென்திசையில் கன்யாகுமரியையும் எல்லையாக வைத்து அவை கூறத் தவறியதில்லை.

'ஆஸேதுஹிமாசலம்' என்று நாம் எப்போதும் கூறும் சொற்றொடர் கூட நமக்குப் புராணம் அளித்தது தான். காசிக்கும் ராமேசுவரத்துக்கும் போகாமல் தீர்த்த யாத்திரை பூர்த்தியாகாது நாம் நித்யமும் கூறி வரும், 'கங்கே சயமுயமுநேனசவ' என்று சுலோகம் நாட்டின் முக்கிய நதிகளையும் 'மஹேகத்ரோ மலய' என்ற சுலோகம் நாட்டின் முக்கிய நகரங்களையும் ஒன்று சேர்த்துக் கூறிப் பாரதம் முழுவதும் ஒரே நாடு என்ற எண்ணத்தை உருவாக்குகின்றன.

எந்தச் சடங்கின் தொடக்கத்திலும் செய்யும் சங்கல்பத்தில் பாரதம் முழுவதும் நினைவூட்டப் பெறுகிறது. வடநாட்டிலும் சரி, தென்னாட்டிலும் சரி எங்கே நீராடினாலும் கங்கையும் காவேரியையும் சேர்த்து மக்கள் நினைக்காமல் இருப்பதில்லை.

தேச பக்தி என்பதே தாய் நாட்டைத் தெய்வமாகக் கருதி வழிபடுவதுதான். இந்தக் கருத்தைப் புராணங்கள், 'இது புண்ணிய பூமி, கர்ம பூமி இங்கே தேவர்களும் பிறக்க ஆவல் கொண்டுள்ளனர்' என்றெல்லாம் கூறுகின்றன. இதையே விசேஷமாக விஷ்ணு புராணத்திலும், பிரம்ம புராணத்திலும் காணலாம். அதிகம் கூறு

வானேன்? 'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்தவே—ஜநநீஜந்ம பூமிஸ்ச ஸ்வர் காதயிகரீயஸி—என்பது புராணங்களிலிருந்து உணர்ந்த கருத்தாகும்.

'பிற நாட்டினர்கள் வேதத்தில் நம்பிக்கை இல்லாத வர்கள். அவர்கள் நம் நாட்டை ஆக்ரமித்தால் தடுத்து விரட்ட வேண்டும்' என்ற கருத்தும் நம் பழைய வட மொழி நூல்களில் இருக்கிறது. 'ஸம்வத்ஸரம்', 'சகாப்தம்' இந்த இரண்டு எண்ணிக்கைகளும் நம் நாட்டிலிருந்து பகைவரை முறியடித்த நாளை ஒட்டி ஏற்பட்டவையே!

பாரதத்தின் சிறப்பைப் பரதமுனி எழுதிய நாட்டிய சாஸ்திரத்திலும் காண்கிறோம்.

தென்நாட்டில் அவதரித்த சங்கர பகவத்பாதர் திக் விஜயம் செய்து பாரதம் முழுவதும் அத்வைதக் கோட்பாட்டைப் பரப்பியதுடன் அங்கங்கே மடங்களை யும் நிறுவினார். அவருடைய செயலும் பாரதம் முழுவ தும் ஒன்று என்ற கருத்தையே நிலை நாட்டுகிறது.

''கண்ணுக்கு நாட்டியம், காதுக்குப் பாட்டு, மன சுக்கு நவரஸங்கள் என்பதாக இந்திரிய ஸௌக்யங் களைக் கருதுவதாகத் தோன்றினாலும் இந்த வித்தை கள் ஸாமவேதத்தை அடிப்படையாகக் கொண்டு உண்டானவை என்பதனாலேயே இவற்றுக்குப் பெருமை ஏற்படுகிறது. வேதங்களுக்குள்ளே தாம் ஸாமமாக இருப் பதாகவும் பகவானே சொல்லியிருப்பதால் இன்னும் பெருமை!

ஸாம கானத்தின் ஸ்வரங்களிலிருந்துதான் ஸப்த ஸ்வரமும் உண்டாகியிருக்க வேண்டுமென்று ஸாம கானத்தைக் கேட்கிற எவருக்கும் தெரிகிறது. ஸாம

கானம் என்று பெயர் இருப்பதிலிருந்து அதுவே ஸங்கீத வித்யையுடன் சேர்ந்ததுதான் என்று தெரிகிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 'ஸாமகானப்பிரியா' என்று அம்பிகைக்கு ஒரு பெயர் சொல்லியிருக்கிறது. சிவனுக்காக அஷ்டோத்ரத்திலும் 'ஸாம ப்ரியாய நம:' என்று ஒரு பெயரைச் சொல்லி விட்டு, உடனே இது அதன் கான விசேஷத்துக்காகத்தான் என்று தெரிவிக்கிறாற்போல் அடுத்ததாக 'ஸ்வரம யாய நம:' என்ற நாமாவைக் கொடுத்திருக்கிறது. மஹா விஷ்ணுவான ஸ்ரீ கிருஷ்ணன் தம்மை வேதங்களில் ஸாமம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாகவும் பார்த்தோம்.

''இதிலிருந்து சங்கீதம் முதலான கலைகளுக்குள்ள தெய்விகத் தன்மை தெரியவரும்'' என்கிறார்கள் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்கள்.

# 14

தலைசிறந்த அறிஞர்களான ஜைமினி போன்ற கர்மவாதிகள், வியாசர் போன்ற வேதாந்திகள், சங்கரர், ராமானுஜர், மத்வர் போன்ற ஆசாரிய புருஷர்கள் கொள்கையளவில் பெரிதும் மாறுபட்ட கருத்துக்களைக் கூறினாலும் தங்களுக்குப் பிரமாணமாக வேதத்தையே எடுத்துக் கொண்டுள்ளார்கள்.

அதன் பிரமாண்யத்தை எவரும் மறுக்கவில்லை. வேதத்துக்கு அத்தகைய சிறப்பு ஏன்?

''ஜாகரியாயை சிர ஸுப்தானாம் ச்ருதிரம்பாவத்''

என்கிறார் பகவான் வியாசர், தமது சித்தாந்த சூத்திரத்தில். குழந்தை உறங்கிக் கொண்டிருக்கையில் அதற்குப் பசி தெரியாது. அதை உரிய காலத்தில் எழுப்பிப் 'பால்

நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' நம்மை விழிப் படையச் செய்து மெய்யறிவைப் புகட்டவே வேதம் ஏற்பட்டிருக்கிறது என்கிறார்.

வேதம் பிரமாணம் என்பதில் திடமான நம்பிக்கை கொண்டு அதைக் கசடறக் கற்க வேண்டும். அதில் கூறப்பட்டுள்ள நித்திய கர்மாக்களைச் சிரத்தையுடன் செவ்வனே அனுஷ்டிக்க வேண்டும். அவற்றால் பாவங் கள் நீங்கி உள்ளத் தூய்மை பெற்று, அதனால் தெளிவு பெற்ற அறிவால் வேதத்தை ஆராயும்போது அதில் கூறப்பட்டுள்ள உண்மைகள் நமக்குப் புலனாகும்.

வேதம் பிரமாணம் என்பதற்கு வியாசர் பல கார ணங்களைக் காட்டுகிறார்.

''மான மாம்னாய : ததாம் னாயத்வாத்''

பிரமாணம் வேதம் பரம்பொருளிடமிருந்து தோன்றி யதால்.

''ஸம்வேத்யர் வாதர் தஸ்ய''

அதில் கூறப்பட்டவற்றை நேரிடையாக உணர்ந்து அனுபவித்தால் தெரிந்துகொள்ள முடியுமாதலால்.

''சிஷ்ட உபஜுஷ்ட திஷ்டத்வாச்ச''

மெய்ப்பொருளைக் கண்டறிந்த பெரியோர்களால் அடையப் பெற்று உபதேசிக்கப்பட்டதால்.

''ஸ்ரவத்யா ஹி ச்வாஸ வன்னிக்ருதே:''

மூச்சுக்காற்று மாதிரிப் பிரயாசையின்றித் தோன்றிய தால் குற்றமற்றது. சுவாசக்காற்று இயற்கையில் வரு கிறது. அனாயாசமாக வருகிறது. எனவே முயற்சிக்குக்

காரணமான ராஜஸத் தொடர்பற்றது. ரஜோகுணத் தொடர்பற்றதால் வேதம் தோஷமற்றது.

''மானம் குர்வாம்னாயோ தோஷா ஸம்ப்ருக்தே''

தோஷம் முற்றிலும் அற்றிருப்பதால் எல்லாவற்றிலும் மேலான பிரமாணம் வேதமே.

வேதம் உண்மை என்பதில் சந்தேகம் தோன்றலாகாதே தவிர, அதைப் பற்றிய ஆராய்ச்சியில் எவ்வித மான தடைகளும் விதிக்கப்படவில்லை. பெரியோர்கள் பல கோணங்களிலிருந்து வேதத்தில் கூறப்பட்ட உண்மைகளை ஆராய்ந்து பலவிதமாகத் தங்கள் தங்கள் சித்தாந்தங்களை நிலைநாட்ட முயன்றிருக்கிறார்கள்.

வேதத்தை ஆராய்ந்து மெய்ப்பொருளை அறியும் வழியை வேதமே நமக்குக் கற்றுத் தருகிறது.

''ச்ரோ தவ்யோ மந்தவ்யோ நிதித்யாசிதவ்யோ
சாக்ஷாத்கர் தவ்யச்ச''

வேதத்தில் கூறப்பட்ட மஹா வாக்கியங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். பின் அவற்றைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். பின்பு நிதித்யாசனம் செய்யவேண்டும்.

நிதித் யாசனம் என்றால் என்ன?

''வ்ருத்தி சந்தானோ நிதித் யாசனம்'' என்கிறார் வியாசர்.

நானே பிரம்மம் என்ற பாவனையில் ஒரே தொடரில் சிந்தனைப் பிரவாகம் நிதித்யாசனம். அப்பாவனையில் இந்தச் சரீரம், நான், உலகம் மெய் என்ற மயக்கம் முற்றிலும் நீங்கி நானே பிரம்மம் என்ற அனுபவ நிலையில் நிற்பது சாக்ஷாத்காரம்.

மெய்ப்பொருளை உணருவதற்குள்ள தடங்கல்களை யும் வியாசர் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

அறிவில் மந்தத்தனம், குதர்க்கம், விஷயங்களில் ஈடுபாடு, மதிமயக்கம், பிராரப்தம் இவை யாவும் மெய்ப் பொருளை உணரவிடாத தடங்கல்களாம். இத்தடங்கல் களை நீக்கி உள்ளத் தூய்மை பெறவே, நம் சாத்திரங் கள் நாம் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தையும் நித்திய கர்மாக்களையும் விரித்திருக்கின்றன. இக்கர் மாக்களை, இப்பிறவியிலோ முன்பிறவியிலோ செய்து உள்ளத் தூய்மை பெறாத வரையில், மனிதர்களின் மனம் பரம்பொருளை நாடிச் செல்லாது என்கிறார் வியாசர்.

''நாந்தருத்ப்ரவண மனானுச்ரவி கானாம்''

பொருளாசை, பாலாசை போன்ற ஆசைகள் முற்றி லும் நீங்கும் வரை வேதத்தில் கூறப்பட்ட கர்மாக்களைச் செய்யவேண்டும்.

''ப்ராஹ் மணமுதக்ரம் ஏஷணாசேத்''

''வேதத்தில் ஊன்றிய மக்கள் மற்ற மார்க்கங்களைத் தேடலாகாது. வேத மார்க்கத்தில் நிற்பவர்களால் அடைய முடியாதது ஒன்றுமே இல்லை'' என்கிறார் சூதர், தமது சூத சம்ஹிதையில்.

வேதத்தில் கூறப்பட்ட ஒழுக்கத்தையும் கர்மாக் களையும் கடைப்பிடித்து ஒழுகும்போது, வேதமே நம்மைப் படிப்படியாக மேல் நிலைக்கு ஏற்றிச் செல்லும். கிரஹங்கள் நாள்தோறும் கிழக்கில் தோன்றி மேற்கில் மறைகின்றாற்போல் தோன்றுகின்றன. ஆனால் உண்மையில் மேஷத்திலிருந்து ரிஷபம், ரிஷபத்தி லிருந்து மிதுனம் இவ்வாறு மேற்கிலிருந்து கிழக்கில்தான் படிப்படியாகச் செல்கின்றன.

இது போலவே நம்மை நாள்தோறும் கர்மாக்களில் ஈடுபடுத்தினாலும் வேத மார்க்கம் படிப்படியாக நம்மைப் பரம்பொருளிடம் மெய்யான இன்ப நிலைக்கு இட்டுச் செல்லும் என்கிறார் வியாசர்.

ஸாமவேதத்திலுள்ள சாந்தோக்கிய உபநிஷத்தில் எல்லா வித்தைகளிலும் வல்லவரான நாரதரே வித்யா கர்வத்தைவிட்டு ஆத்மஞானத்திற்காக ஸநத் குமாரரை நாடும் வரலாறு கூறப்படுகிறது.

''ஐயனே! நான் மந்திரங்களை மட்டும் அறிந்தவனேயன்றி ஆத்மாவையறிந்தவனல்லன். 'ஆத்மாவை அறிந்தவனே சோகத்தைக் கடப்பான்' என்று தேவரீரைப் போன்றவர்கள் சொல்லக் கேட்டுள்ளேன். நான் சோகத்திற்குட்பட்டிருக்கிறேன். என்னைத் தேவரீர் சோகத்தைத் தாண்டும்படி செய்விக்க வேண்டும்'' என்று வேண்டுகிறார்.

சுகத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பிய அவருக்கு ஸநத்குமாரர் பூமா வித்தையை உபதேசித்து அருள்கிறார்.

''எது அளவு கடந்ததோ, அதுவே சுகம். அல்பத்தில் சுகமில்லை. அளவு கடந்ததே சுகம். அளவு கடந்ததை தெரிந்துகொள்ள வேண்டும்'' என்று தொடங்கி ''எங்கு வேறொன்றைக் காண்பதில்லையோ, வேறொன்றைக் கேட்பதில்லையோ, வேறொன்றை அறிவதில்லையோ அது பூமா (அளவு கடந்தது); ஆனால் எங்கு வேறொன்றைக் காண்கிறானோ, வேறொன்றைக் கேட்கிறானோ, வேறொன்றை அறிகிறானோ அது அல்பம். எது அள்வு கடந்ததோ அது அழிவற்றது. எது அல்பமோ அது அழிவுடையது'' என்று எல்லா வியவாஹாரத்திற்கும் அதீதமான அத்வைதானந்தம் உபதேசிக்கப்படுகிறது.

மேலும் கூறுகிறார்: 'அளவு கடந்த அதுவே ஆத்மா. ஆத்மாவிலேயே இன்பமும், ஆத்மாவிலேயே விளையாட்டும், ஆத்மாவிலேயே கூடி மகிழ்தலும், ஆத்மாவிலேயே ஆனந்தமும் உடையவன் 'ஸ்வராட்' தன்னைத்தானே ஆள்பவன் ஆகிறான்.''

''எந்த ஆனந்தத்தின் அம்சத்தின் அம்சத்தின் திவலையில் லயமடைந்திருக்கும் மனது, ஸமுத்திரத்தில் கரைந்து போன ஆலங்கட்டியின் தன்மையையடைந்து ஆனந்த ஸ்வரூபமாகவே யிருக்கிறது. அந்த நிஜானந்த மாகிற அமிர்த வெள்ளம் நிறைந்த பரபிரஹ்மமாகிற ஸமுத்திரத்தின் பெருமையை வாக்கினால் சொல்ல இயலாது. மனத்தில் எண்ணிப் பார்க்கவும் முடியாது'' என்கிறார் சங்கரர் விவேகசூடாமணியில்.

எல்லாவித சுகங்களும் பிரஹ்மானந்த சொருபத்தில் அடக்கம். தைத்திரிய, பிரஹதாண்யக் உபநிஷத்துக்கள் அதன் சிறப்பை நிர்ணயிக்கின்றன.

சாதுவாயும், யௌவனம் நிறைந்தவனாயும், அத்தியயனம் செய்தவனாயும், ஆளும் திறமையுள்ளவனாயும், திடசித்தமும் உடல் வன்மையும் பெற்றவனாயும் ஒருவன் இருந்து, எல்லாச் செல்வங்களும் நிறைந்த இந்தப் பூமி முழுவதும் அவனுடையதாகவும் இருக்குமேயானால், அவன் அடையக்கூடிய ஆனந்தம் ஒரு மனித ஆனந்தத்தின் அளவு.

மனுஷ்ய கந்தர்வர்கள், தேவகந்தர்வர்கள், பிதிருக்கள், பிறவி தேவர்கள், கர்மதேவர்கள் இந்திரன், பிரஹஸ்பதி, விராட்புருஷனாகிய பிரஜாபதி, ஸூதாந்தமாவாகிய பிரம்மா இவர்களின் ஆனந்தம் முறையே படிப்படியாக ஒன்றைவிட அடுத்தது நூறுமடங்காக உள்ளது.

சுருதிப்பொருள் அறிந்துணர்ந்து ஆசைகளிலே ஆழ்ந்து மடியாதவனாய் உள்ள ஜீவன் முக்தனின்

ஞானானந்தமோ இந்த எல்லா ஆனந்தத்தையும் அடைந்து இதற்கெல்லாம் அப்பாற்பட்டதாய் உள்ளது.

அளவு கடந்தது. மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது. அதைத் தேடி வேறு லோகத்திற்குச் செய்ய வேண்டியதில்லை. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இந்த ஞானானந்தம் பிரகாசிக்கிறது.

இதை மனதிற்கொண்டு 'எந்த ஆனந்தக் களிப் புக்கடலின் வெகு நுண்ணிய திவலையினாலேயே இந்திரன் முன்னிட்ட தேவர்குழாமெல்லாம் ஆசை நிறை வேறியவராகின்றனரோ, எந்த அழிவற்ற ஆனந்த சாகரத்தில் மனம் கரைந்தபின் பிரம்மத்தை அறிப வராக மட்டுமின்றிப் பிரம்மமாகவே ஆகின்றனரோ, அந்த வெகு துர்லபமான மகாத்மா தேவேந்திரனாலும் வணங்கப்பட்ட பாதங்களையுடையவன். இது என் அதிதிடமான முடிவு' என்று ஞானானந்தமாய்த் திகழ் வோரின் பெருமையை உலகற்திற்கு—மனிஷா பஞ்சகத் தில்—எடுத்துரைக்கிறார் சங்கரர்.

"இதன் பெருமை யெவர்க்கு யார் சொல்வர் அது வானால் அதுவாவர் அதுவே சொல்லும்" என்கிறார் தாயுமானவர்.

அப்பேரின்பம் குரு வடிவம் தாங்கி வரும்போது அன்பு உருவாகிறான். ஞானானந்த ஸாகரன் கருணா ரஸ ஸாகரனாகிறான். அவன் கருணையைப் பேசி ஞானானந்தத்தை விளக்குகிறார் தாயுமானவர்.

**"காராரும் ஆணவக் காட்டைக் களைந்து அறக்**
**கண்டு அகங்காரம் என்னும்**
**கல்லைப் பிளந்து நெஞ்சகமான பூமிவெளி**
**காணத் திருத்தி மேன்மேல**

பாராதி அறியாத மோனமாம் வித்தைப்
பதித்து அன்பு நீராகவே
பாய்ச்சி அது பயிராகு மட்டும் மாமாயைவன்
பறவை யணுகாத வண்ணம்

நேராக நின்று விளைபோகம் புசித்து உய்ந்த
நின்னன்பர் கூட்டம் எய்த
நினைவின் படிக்கு நீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரம் என்றும்

ஆராரு மறியாத சூது ஆன வெளியில் வெளி
யாகின்ற துரிய மயமே
அண்டபகிரண்டமும் அடங்க ஒரு நிறைவாகி
ஆனந்தமான பரமே.''

'பெரிய பொருள்' என்பது பிரஹ்மம். துரிய வடிவே ஆத்மா; பிரஹ்மமே ஆத்மா. அகண்ட ஏகரஸமான அதுவே ஞானானந்தம்.

மறைகள் முரசு அறையும் அத்துவித வஸ்து. அறிவினுக்கறிவாகி ஆனந்தமயமான ஆதி அனாதி ஏக தத்துவ சுவரூபம். சித்தமறியாதபடி சித்தத்தில் நின்று இலகும் தேஜோமயம்.

நனவு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் எந்த உதய அஸ்தமன ரஹிதமான சைதன்யமானது தொடர்ந்து மிகத் தெளிவாக விளங்குகிறதோ, எது நான்முகனான பிரம்மா முதல் எறும்பு ஈறாகவுள்ள எல்லா உடல்களிலும் ஊடுருவி இருந்துகொண்டு, உலகில் அஸங்க ஸாக்ஷி மாத்திரமாக இருக்கிறதோ, அந்த கேவல நிர்விகல்பமான ஞானமே நான். நித்யதிருக் ஸ்வரூபமான நான், அறியப்படுபொருள் அல்ல என்றபடி 'பிரஹ்மகம் ஆத்மா. அதுவே நான்' என்னும் உண்

மையை மகாவாக்கியங்கள் மூலமாக வேதம் அறிவிக்கின்றது.

ஒவ்வொரு மனிதனும் இரண்டு மாறுபட்ட முடிவுகளினால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளான். ஒன்று 'ச்ரேயஸ்' என்றும், மற்றது 'ப்ரேயஸ்' என்றும் அழைக்கப்படுகிறது. இவை யிரண்டுமே மாறுபட்டவை. மாறுபட்ட அதிகாரிகளால், மாறுபட்ட வழிமுறைகளைக் கொண்டு மாறுபட்ட சம்பந்தத்துடன் மாறுபட்ட முடிவை அளிக்கக்கூடியவை.

'ச்ரேயஸ்' என்ற முடிவை நோக்குவோமானால் எவன் ஒருவன் பேறு என்ற ஒன்றையும் விரும்பாமல் உலகில் செய்தடையும் அனைத்துமே மாறுபட்டுக்கொண்டிருக்கக் கூடியது. ஆகையால் 'நிலையற்றது' என்றறிந்து அதனிடம் எள்ளளவும் ஆசையின்றி, மனம் திடப்பட்டவனாய் 'நிலையான ஆத்ம ஆனந்தத்தை' அடையக் கருதி அதற்காக ஒரு குருவை நாடி, அவர் மூலம் கேட்டுணர்ந்து, தான் 'ஒப்பற்ற உண்மைப் பொருள்' என்றுணர்ந்து அதில் செம்மைப்பட்டு நிற்கிறானோ அதுதான் இம்முடிவு.

'ப்ரேயஸ்' என்பதோ திடபுத்தியற்று, இவ்வுலகிலுள்ள பொருள்களோ, அல்லது மேலுலகங்களோ ஆநந்தத்தைத் தரவல்லது என்று கருதி அதை அடைய வேண்டி, பலவிதச் செயல்கள் புரிந்து அச்செயல்களினால் ஏற்படும் பலன்கள், பின் விளைவுகளில் மயக்கமுற்று பல பொருள்களைப் பெறுவதிலும், பெற்ற பொருள்களைக் காப்பதிலுமே காலத்தைக் கழித்து, முடிவில் அவை அனைத்தையும் விட்டுச்சென்று மறுபிறப்பெடுத்து அல்லலுறுகிறான்.

மேற்கூறிய இரண்டுமே மனிதர்களால் விரும்பப்படுவதாயினும், 'ச்ரேயஸ்', 'ப்ரேயஸி'லிருந்து மாறுபட்

டது; உயர்ந்தது. 'ச்ரேயஸ்' ஞானம், 'ப்ரேயஸ்' அக்ஞானம். இவை இரண்டும் ஒன்றாயிருப்பின் ஒன்றைத் துறந்து மற்றதைக் கடைப்பிடிக்க வேண்டிய தேவையில்லை. இவையிரண்டும் இப்படி மாறுபட்டிருத்தலால் மனிதன் தேர்ந்தெடுக்க வேண்டியவனாகிறான்.

இந்த இரண்டில் அக்ஞானத்தின்—அவித்யையின்— ரூபமாகிய ப்ரேயஸை விட்டொழித்து 'ச்ரேயஸ்' மட்டுமே சிறந்தது என்றுணர்ந்து அதை அடைய வேண்டி உறுதி கொண்டவர்கள் 'சாதுபலதி' மங்களத்தை அடைவார்கள். அதாவது மங்கள ஸ்வரூபமாகவே ஆகிவிடுவார்கள் என்பது கருத்து.

அது மட்டுமின்றி இவர்கள் 'நிறைவை அடைந்தவர்கள்' என்பது பொருள்.

ஆனால் மற்றவர்களோ இந்த ஞானத்திலிருந்து வெகுதூரம் விலகியவர்களாக, முடிவான நன்மையைக் கைவிட்டு நடைமுறையிலுள்ள பலன்களையே பெறுபவர்களாக விளங்குகிறார்கள். இவையிரண்டுமே மனிதனால் கைக்கொள்ளக் கூடியதாக உள்ளபோது எப்படி பொதுவாக மனிதர்கள் இவை யிரண்டில் 'ப்ரேயஸ்' ஒன்றையே தேர்ந்தெடுக்கிறார்கள் என்ற வினா தோன்றுகிறது. இதற்கு ஏதேனும் காரணம் இருக்கவேண்டுமே!

இவையிரண்டையும் அடைவதற்கான வழிமுறைகளும், அதனால் ஏற்படும் பலன்களும் மாறுபட்டிருப்பினும் இந்த இரண்டுக்குமுள்ள வேற்றுமையை மந்த புத்தி உள்ளவர்கள் அறிந்து கொள்வதில்லை. அதனால் மனம் குழம்பியவர்களாய்த் தற்காலிகமாக அவர்களுக்கு உள்ள பொருளைக் காப்பதற்கும் இல்லாத பொருளை அடைவதற்கும் வேண்டிய முயற்சிகளையே செய்கின்றனர்.

எப்படி ஞானத்தினால் மாத்திரம் 'ப்ரேயஸ்', உலக சுகங்களைப்—பெற முடியாதோ அது மாதிரி செய்யும் செயல்களால் 'ச்ரேயஸ்'—நிறைந்த அழிவற்ற சுகத்தை —தெளிய முடியாது.

இப்படி இவையிரண்டையும் ஆராய்ந்து தெரிந்து தெளிந்த புத்தியுடையவன் எவனும் 'ச்ரேயஸ்' ஆகி, உயர்ந்த நிரதிசய ஆனந்தத்தையே தெளிய விரும்புவான். இவர்களைத்தான் 'தீரர்'கள் என்று கூறுகிறது. மற்றவர்களோ தங்களுக்குள் ஏற்பட்ட குழப்பத்தில் திளைத்து மதிமயங்கி அல்லலுறுவார்கள். இக்கருத்தையே

'ச்ரேயச்ச ப்ரேயச்ச மநுஷ்ய மேதா :
தௌ சம்பரித்ய விவிளக்தி தீரா :
ச்ரேயோ ஹிதீரோத பிப்ரேய ஸோவ்ருணீதே
ப்ரேயோ மந்தோ யோக க்ஷேமாத் வ்ருணீதே''

என்ற மந்த்ரம் கூறுகிறது.

## 15

உபநிஷத்தில் பரம்பொருளான இறைவனைப்பற்றிக் கூறும் பொழுது 'நேதி, நேதி' அதாவது 'இது அல்ல, இது அல்ல' என்று ஒவ்வொன்றாக விலக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரபஞ்சத்திலே மனிதனுடைய அனுபவத்தில் பார்க்கப்படுகின்ற ஒன்றும் மெய்ப் பொருளல்ல. மெய்ப் பொருளான பரம் பொருளானவர் தூய அறிவும், அன்பும் தேஜோ வடிவமுமானவர்; நித்தியமானவர்; அழிவற்றவர்.

ஆனால் உலகத்தில் காணும் எல்லாப் பொருள்களும் காலத்தால் அழிபவை. இன்று தோன்றி நாளை மறை பவைகளாகும். எல்லாம் துன்பம் நிறைந்தவை. ஆகவே இவைகளில் எதுவும் மெய்ப் பொருள் இல்லை என உபநிஷத் கூறுகிறது.

ஆனால், உயிரும் மெய்ப் பொருளும் ஒன்றே. உடலோடும் மனத்தோடும் கலந்த ஏதோ ஓர் சிற்றுயிர் போல் நாம் தோன்றுகிறோம்.

இந்த உடல், மனம், முதலியவைகளை நீக்கிப் பார்த்தோமானால் எஞ்சி நிற்பது மெய்ப் பொருளான ஜீவாத்ம சொருபம் என்பதை அறியலாம்.

இவைகளை விளக்க நான்கு வேதங்களிலும் நான்கு மஹா வாக்கியங்கள் அமைந்திருக்கின்றன. அவை யாவன 1. தத்—த்வம்—அஸி. 2. அஹம் பிரம்மாஸ்மி. 3. ப்ரக்ஞானம் பிரம்ம 4. அயம் ஆத்மா ப்ரம்ம என்பவைகளாகும்.

தத்-த்வம்-அஸி என்பதில் மூன்று சொற்களே உள்ளதைக் காணலாம். தத்-த்வம்-அஸி என்பதைக் கூட்டாக 'தத்வமஸி' என்றும் கூறலாம்.

தத என்ற சொல் நம்மைவிட எங்கேயோ வெகு தூரத்தில் உள்ள பரம்பொருளான இறைவனை அது என்று படர்க்கையாகக் கூறும் சொல்லாகும். த்வம் என்பது குரு, சிஷ்யனை நோக்கி நீ என்று முன்னிலைப் படுத்திக் கூறும் சொல்லாகும். அஸி என்னும் சொல் ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்றாக இணைந்திருப்பதைக் கூறும் சொல்லாகும்.

அதாவது, உபநிடத காலத்தில் ஒரு மாணவன் தன் குருவை நோக்கி, நான் யார் என்று கேட்க, குருதேவர் அதுவே நீயாக இருக்கிறாய் என்பதாகக் கூறினார்.

நம்முள் பல பேருக்கு இதைப் பற்றிய ஐயம் எழக்கூடும். எங்கோ கண்ணுக்குத் தெரியாத வெகு தூரத்திலுள்ள பரம்பொருளும், நம் ஆத்மாவும் எப்படி ஒன்றாக இருக்க முடியும்? என்பதே !

"அவரே சகலமும் என்றால் நாமும் அவராகத் தான் இருந்தாக வேண்டும். சமுத்திரமாக இருக்கிற அவரேதான் ஆற்று ஜலம், குளத்து ஜலம், கிணற்று ஜலம், அண்டா ஜலம், ஜம்பு ஜலம், உத்தரணி ஜலம் போல் தம் சக்தியைச் சிறுசிறு ரூபங்களாகச் செய்து கொண்டு பலவித ஜீவஜந்துக்களாகியிருக்கிறார். இதில் மனிதனாகும்போது பாப புண்ணியத்தை அனுபவிக்கவும், பாப புண்ணியம் கடந்த நிலையில் தாமே ஆகி விடவும் வழி செய்திருக்கிறார். மனிதனாகும்போது மனசு என்ற ஒன்றைக் கொடுத்து அதைப் பாப புண்ணியங்களில் ஈடுபடுத்திப் பலனை அநுபவிக்கச் செய்கிறார்.

மனசு ஆடிக் கொண்டேயிருக்கிற நிலையில் உள்ள நாம் எடுத்த எடுப்பில், பாப புண்ணியமற்ற நிலையை அடைந்து, அவரே நாம் என்று உணர முடியாது. ஆகவே அவரே தாமாக இருந்தாலும், அதை நாம் அனுபவத்தில் உணருவதற்கு அவரது அருளைப் பிரார்த்திக்க வேண்டியவர்களாகவே இருக்கிறோம். அவர் மகாசமுத்திரம். நாம் உத்தரணி ஜலம் என்கிற எண்ணத்தோடு ஆரம்பத்தில் பக்தியே செய்யவேண்டியவர்களாக இருக்கிறோம்.

சுவாமி கொடுத்துள்ள மனசுதான் இப்போது நம்மை அவரிடமிருந்து பேதப்படுத்துகிறது. இந்த மனசை எடுத்த எடுப்பில் போ என்றால் போகாது. ஆகவே ஒருத்தரை மட்டும் பற்றிக் கொள்ளவேண்டும். மனசை அவர் குரங்காகப் படைத்திருக்கிறார். அந்தக் குரங்கு இப்போது தேகத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்

டிருக்கிறது. ஆனால் ஸ்வாமி இந்தத் தேகத்தை நசிப்பதாக அல்ல வைத்திருக்கிறார்!

இந்த அழுகல் பழத்தை மனக்குரங்கு விட்டுவிட வேண்டும். அழுகாத பழம் கிடைத்தால் முதல் பழத்தைக் குரங்கு போட்டுவிடும்.

அழுகாத மதுரமான பழம் பரமாத்மாதான். அதை மனத்தால் பிடித்துக் கொண்டு சரீரப் பிரக்ஞையை விட்டுவிட அப்பியசிக்க வேண்டும். இதற்குத்தான் பக்தி, பூஜை, க்ஷேத்திராடனம் எல்லாம் வைத்திருக்கிறது. இவற்றில் மேலும் மேலும் பக்குவமடைந்து சரீரப் பிரக்ஞை, அகங்காரம் அடியோடு போய்விட்டால், அவர் பரமாத்மா, நாம் ஜீவாத்மா என்கிற பேதமே போய் அங்கே நாமாக அத்வைதமாக ஆகி விடுவோம்.

'நீ வேறெனாதிருக்க, நான் வேறெனாதிருக்க, என்று அருணகிரிநாதர் பாடிய அநுபவத்தை அடைவோம்'' என்று காஞ்சி காமகோடி பரமாச்சார்யாள் அவர்களும் அருளியுள்ளார்கள்.

''பெரிய பொருள்'' என்பது பிரஹ்மம்; துரிய வடிவே ஆத்மா; பிரஹ்மமே ஆத்மா. அகண்ட ஏக ரஸமான அதுவே ஞானானந்தம். மறைகள் முரசு அறையும் அத்துவித வஸ்து; ஸ்வப்பிரகாசத்தனி; அறிவினுக்கறிவாகி ஆனந்த மயமான ஆதி; அனாதி ஏகதத்வ ஸ்வரூபம்; சித்தமறியாதபடி சித்தத்தில் நின்று இலகு தேஜோமயம்.

''ஊர் அனந்தம் பெற்றபேர் அனந்தம்
உறவு அனந்தம் வினையினால்
உடல் அனந்தம் செய்யும் வினைஅனந்தம் கருத்தோ
அனந்தம் பெற்ற பேர்

சீர் அனந்தம் சொர்க்கநாதமும் அனந்தம்நல்
தெய்வமும் அனந்த பேதம்
திகழ்கின்ற சமயமும் அனந்தம் அதனால் ஞான
சிற்சக்தியால் உணர்ந்து
கார் அனந்தம் கோடி வருஷித்துஎன அன்பர்
கண்ணும் விண்ணும் தேக்கவே
கருதரிய ஆனந்தமழை பொழியும் முகிலைநம்
கடவுளைத் துரியவடிவை
பேரனந்தம் பேசி மறையனந்தம் சொலும்
பெரிய மௌனத்தின் வைப்பை
பேசரும் அனந்தபத ஞான ஆனந்தம்ஆம்
பெரிய பொருளைப் பணிகுவாம்''

என்கிறார் தாயுமானவர்.

நினைவு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் எந்த உதய அஸ்தமன ரஹிதமான சைதன்யமானது தொடர்ந்து மிகத் தெளிவாக விளங்குகிறதோ, எது எல்லா உடல்களிலும் ஊடுருவி இருந்து கொண்டு, உலகில் அஸங்க ஸாஹி மாத்திரமாக இருக்கிறதோ, அந்தக் கேவல நிர்விகல்பமான ஞானமே நான். நித்ய திருக் ஸ்வரூபனே நான். அறியப்படுபொருள் அல்ல என்றபடி 'பிரஹ்மமே ஆத்மா, அதுவே நான்' என்னும் உண்மையை மஹாவாக்கியங்கள் மூலமாக வேதம் அறிவிக்கின்றது.

பரம்பொருளானவர் மனிதனுடைய கற்பனைக்கு எட்டாதவர், மிகவும் பெரியவர், கண்களுக்குப் புலனா காதவர். அளவு கடந்த ஆற்றலுடையவர். ஆனால் மனித உயிரோ, சிற்றறிவோடு கூடிய குறைந்த ஆற்றல் உடையது. இறைவன் பிரபஞ்சத்தை

யும், எண்பத்தி நான்கு லக்ஷம் ஜீவராசிகளையும் படைத்தவர். உயிர் இறைவனால் படைக்கப்பட்டது. இறைவனுக்கு பிறப்பில்லை. உயிருக்குப் பிறப்புண்டு. இரண்டும் எப்படி ஒன்றாக இருக்க முடியும் என்பது தான் இன்றை மனிதனுக்குள்ள சந்தேகம்.

ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்று கூறும் பொழுது பரமாத்மா என்ற பரம்பொருளில் எந்தப் பொருளில் எந்த தேஜோ மயம் என்ற உண்மை விளங்கு கிறதோ, அதே தேஜஸ் சிறு உடலும் சிற்றறிவும் கொண்ட மனிதனுடைய உள்ளத்திலும் தேஜோமயமாய், சத்திய சொரூபமாய் விளங்குகிறது.

"விக்ஞானம் ஆனந்தம் பிரஹ்ம" என்கிறது பிருஹதாரண்ய கோபநிஷத். உபநிஷத் ஸ்வரூபத்தை அகண்ட ஏக ரஸம் என்று அறிவித்து, மனோவாக்குக் கெட்டாத அந்த பிரஹ்மத்தை, அஞ்ஞாத (பொய்), ஜட, துக்கமான வியவ ஹாரிக பிரபஞ்சத்திலிருந்து பிரித்து எளிதிலுணர, அதை ஸத் சித் ஆனந்தம் என்ற மொழி யினால் குறிப்பிடுகின்றது.

எல்லாத் தோற்றத்திற்கும் அடிப்படையாகவும், ஆறு விதமான விகாரங்களற்றதும், மூக்காலத்திலும் அறிவு அடையாமல் இருப்பதும், தேசம், காலம், மற் றொரு வஸ்து இவைகளால் வரையறுக்கப்படாமலும் இருக்கும் நிர்விசேஷமான இருப்பே 'ஸத்' ஆகும்.

ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளிலும் தொடர்ந்து விளங்கும் ஸாக்ஷியாக வும், அறியும் விருத்திகள் அனைத்திற்கும் அடிப்படை யாகவுள்ள துரிய வடிவமான ஆத்மா, அறிவு அறியாமை இரண்டிற்கும் அப்பாற்பட்ட கேவல அறிவு, சின்மாத்ர மாகும். அதுவே 'சித்'. 'ஸ்வயம்பிரகாசமான அதைப் பின்பற்றியே இவையனைத்தும் விளங்குகின்றன" என் கிறது கடோபநிஷத்.

யாவருக்கும் தன்னிடத்திலேயே நீங்காத பரம பிரிய மிருக்கிறது. இவ்விதமான மேலான பிரீதிக்கு விஷய மாக இருக்க வேண்டுமானால் அது தெவிட்டாத பேரின்ப வடிவமாக இருக்க வேண்டுமல்லவா? அதுவே 'ஆனந்தம்', "இந்தப் பரமானந்தத்தின் ஒரு திவலை யைக் கொண்டுதான் பிரதான பிராணிகளெல்லாம் வாழ்கின்றன" என்று ஜனகருக்கு யாக்ஞவல்கியார் உப தேசிக்கிறார்.

பரமாத்வாவிலும், ஜீவாத்மாவிலும் பிரகாசிப்பது அந்த மெய்ப்பொருள்தான். மெய்ப்பொருள் என்ற அள வில் இரண்டும் ஒன்றாக இருந்தபோதிலும் மாயையின் காரணமாக மனிதன் தன் தெய்வத்தன்மையை உணர முடிவதில்லை. பெரிய தீக்குண்டத்திலிருந்து வெளி வரும் தீப்பொறி எவ்வாறு பெரும் திப்பிழம்பிலிருந்து வந்ததோ, பெரிய பாத்திரத்திலுள்ள தண்ணீரிலிருந்து சிறுதுளி எவ்வாறு வந்ததோ அது போலவே ஆயிரம் கோடி சூரியப்பிரகாசமான பரம்பொருளிலிருந்து சிறு ஜ்வாலையான ஜிவாத்மா வேறுபடுவதில்லை. அளவில் தான் வித்தியாசம் உண்டு. மெய்ப்பொருள் என்ற தத்துவம் பரமாத்மாவிலும் ஜீவாத்மாவிலும் நன்றாகவே காணப்படுகிறது.

மெய்ப்பொருளின் ஒரு தோற்றம் இறைவனாகவும், மற்றொரு தோற்றம் உயிராகவும் விளங்குகிறது. மாயை யோடு கூடிய மெய்ப்பொருள் இறைவனாகவும், அவித்யையின் விளைவாக உடல், மனம், புத்தி இவற் றோடு கூடிய மெய்ப்பொருள் உயிர் எனப்படுகிறது.

மாயையின் சுத்த ஸத்வ குணத்தோடு கூடிய மெய்ப் பொருள் பரமாத்மாவென்றும், அசுத்த ஸத்வ குணத் தோடு கூடிய மெய்ப்பொருள் ஜீவாத்மா எனவும் கூறப் படுகிறது.

முக்காலத்தையும் கடந்து நிற்கும் ஸத் தெளிவாக விளங்குவதால் ஸத்தே சித்தாகும். விளங்குவதே இருப்ப தால் சித்தே ஸத்தாகும். ஸத், சித்தே நிரதிசபய ஆனந்தம்.

ஜாக்ரத் ஸ்வப்னங்களில் ஜீவேச்வர ஜகத்தாய் விரியும் மனம் காரணாவஸ்தையான சுஷுப்தியில் லயமடைகிறது. அறிதலை இறந்த அந்த சுஷுப்தியில் ஆனந்தம் விளங்குதல் அதற்கே தெரிதலால் அவ் வானந்தமே அறிவு ஆகும். அவ்விடத்து மற்றொன் றில்லை. பிரளயம், சுஷுப்தி ஆகியஇரண்டிலும் ஸத்தாக நின்று இருளையறியும் போது அவ்வறிவு தானாயிருப்ப தால் அறிவே ஸத்தாகும். இவ்விதமாக சுருதி யுக்தி, அனுபவங்களால் சச்சிதாநந்தத்தின் பொருள் ஒன்றாக விளங்கும் ஸ்வரூபமே ஞானானந்தம்.

தானாயிருத்தலே தன்னையறிவதாகும். அதுவே ஆத்ம சுகம். ஆகவே ஞானமே ஆனந்தமாகும். இந்த ஸ்வரூப ஞானம் எதிரிட்டறியும் அறிவு அல்ல; ஸ்வரூபா னந்தம் எதிரிட்டனுபவிக்கப்படும் ஆனந்தமுமல்ல.

விஷயசுகம் அளவற்றது. மாறி மாறி உண்டாகும் தன்மையுடையது. வெறுத்துவிடுவதற்கும், விரும்பி ஏற்றுக் கொள்வதற்கும் தகுதியுடையது. ஆத்மா னந்தமோ அளவற்றது. நிரதிசயமானது. அதாவது அதைவிட மேலான இன்பம் ஒன்றும் இருக்கமுடியாது. அப்பேரின்பம் மாறாது ஒரு தன்மையுடையது. அதுவே நமது ஸ்வரூபம். ஆகவே அதை வேண்டிக் கொள்ளவும் முடியாது? வெறுத்துத் தள்ளவும் முடியாது; நித்ய சித்த மானது.

மெய்ப் பொருளானது வேற்றுமைகளற்றது.

> "நிர்க்குணோ நிஷ்கரியோ நித்யோ நிர் விகல்போ
> நிரஞ்ஜன:
> நிர் விகாரோ நிராகாரோ நித்யமுக்த அஸ்மி நிர்மல:"

என்று ஆத்மபோதமானது மெய்ப் பொருளைப் பற்றிக் கூறுகிறது.

அதாவது எது செயலற்று, குணங்களற்று, நித்திய மாய், வேற்றுமையற்று, மாசற்று, மாற்ற மற்று, வடிவ மற்று என்றும் சுயேச்சையாய் தூயவனாய் இருக்கிறதோ அதுவே நான் என்ற மெய்ப் பொருளாகும் என்பதாகும்.

ஆத்மா வேறு, பிரபஞ்சம் வேறு. பிரபஞ்சம் அழியும் பாங்குடையது. ஆத்மா அழியாதது. வீடும் வீட்டில் குடியிருக்கும் மனிதனும் வெவ்வேறானவர்கள். குடியிருக் கும் வீட்டையும் அறிய வருகிறான். அப்படி அறியும் பாங்குடையது ஆத்மா. அது அழியாப் பொருள். ஆத்மா ஆனந்த சொரூபம். நாம் ஆத்மா என்பதற்கு அத்தாட்சி நாமே. உடலோ ஜடப்பொருள். தூங்கும் பொழுது உடல் தன்னைத்தான் அறிந்து கொள்ளுதல் இல்லை. குடியிருப்பதற்குத் தகுதியற்ற உடலை ஜீவாத்மா புறக் கணிக்கிறது. அப்பொழுது அது வெறும் சடலம்.

ஆகவே ஆத்மாவின் வடிவம் சத்சித் ஆனந்தமாம். ஜடப் பொருள் சத் ஆகாது. ஆகையினால் அதனிடத்து அறிவோ ஆனந்தமோ இல்லை. நான் இருக்கிறேன் என்பதை எது அறிகிறதோ அது ஆத்மா. ஆத்மாவானது ஆணன்று, பெண்ணன்று, அலியன்று. இந்த வேறுபாடு களனைத்தும் உடலுக்குரியவைகள்.

உடலைத் தான் என்று கருதுவது அக்ஞானம். விசாரித்துப் பார்த்து ஆத்மா வேறு, பிரகிருதியின் கூறா

யிருக்கிற உடல் வேறு எனப் பாகுபடுத்துவது மெய் யறிவு. இந்த அறிவுக் கேற்ப வாழுவது ஆத்ம சாதன மாகிறது.

ஆத்ம நிலையை உணர்ந்த, மெய்யறிவை அறிந்த யோகிகளும் மகாத்மாக்களும் முனிவர்களும் மெய்ப் பொருளின் தன்மையை உணர்ந்தவர்களாவர். மெய்ப் பொருளான தத் என்ற பரம்பொருள் ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற சொரூப லக்ஷணங்களைக் கொண்டது. ஸத்யமே ஞானம்; ஞானமே அனந்தம்; அனந்தமே ஆனந்தமாகும்.

ஆகவே, உடலே நான் என்று வெகுகாலமாக ஊறிப் போன எண்ணத்தை, மெய்ப் பொருளே நான் என்ற இடையறாத நினைப்பினால் மாற்ற வேண்டும். மருந்து நோயை தீர்ப்பதுபோல், இந்த நினைவு அறியாமையின் விபரீதத் தோற்றங்களை மாய்த்து விடும்.

மெய்ப் பொருளின் நினைவு என்ற மருந்தினால் அறி யாமை என்ற நோயை நீக்கி விட்டால், உயிர் தன் சொந்த நிலையை அடைகின்றது. ஸத்-சித்-ஆனந்தமே மனிதனின் உண்மை சொரூபமாகும்.

மெய்ப்பொருளைத் தவிர மற்றவைகளை விலக்கி, பரம்பொருள் ஒன்றைப் பற்றிய நினைவை மனத்தில் நிரப்பிக் கொண்டிருக்கும் பொழுது, மனம் மெய்ப் பொருளின் வடிவமாக நிற்கிறது. அப்பொழுது ஜீவாத்மா வானது தத்-த்வம்-அஸி என்ற மஹா வாக்கியத்தை உணர்ந்து ஸத்-சித் ஆனந்தத்தை அடைகிறது

பரமாத்மா ஒன்று. அதன் தோற்றங்களாக வந்திருப் பவை ஜீவாத்மாக்கள். ஜீவாத்மாக்கள் எண்ணிக்கையில் அடங்கா. அவைகள் சூட்சுமமாயிருக்கும் மனதிலும், ஸ்தூலமாயிருக்கும் உடலிலும் கட்டுண்டு இருக்கின்றன.

அப்படிக் கட்டுண்டு இருக்கும் பரியந்தம் அவைகளுக்குப் பிறப்பும் இறப்பும் உண்டு. பல பிறவிகளுக்குப் பிறகு ஜீவாத்மன் ஒருவனுக்குப் பிரபஞ்ச வாழ்வில் சலிப்புத் தட்டுகிறது. அப்பொழுது அவன் உலகப் பற்றை நீக்கி விட்டுத் தன்னுடைய நிஜ சொரூபமாகிய ஆத்மாவை அடைய முயலுகிறான்.

மனதைத் தெளிவு படுத்துவது ஆத்ம சாதனம். மலினப் பட்டுள்ள மனதுக்கு எது உலகாகத் தென்படு கிறதோ அதே பொருள் சுத்த மனமுடையவனுக்குத் தெய்வமாகக் காட்சி கொடுக்கிறது. ஆக உலகம் வேறு கடவுள் வேறு அன்று. இந்த மனதை ஒதுக்கித் தள்ளு தலே துறவின் உட்பொருளாகிறது. மனதை ஒதுக்கித் தள்ளியவன் நிர்விகல்ப சமாதி அடைகிறான் அவனே பிறவிப் பெருங்கடலைத் தாண்டியவனாகிறான்.

# 16

உண்மையை விசாரித்தால் விஷயங்களில் சுகமே அடையப்படுவதில்லை. விரும்பிய பொருளை அனுபவிக் கும்போது ஆசை ஒன்றும் இல்லாமல் இருப்பதால் ஸ்வரூபத்தின் மறைப்பு நீங்கி ஸ்வரூபானந்தமே வெளிப் படுகிறது.

நாய் ஒன்று எலும்பைக் கடிக்கும்போது தன் வாயில் கசியும் ரத்தத்தையே எலும்பிலிருந்து வருவதாக எண்ணி மயங்குவதைப்போல, நாமும் விஷயங்களில் இன்பமில்லாவிடினும், ஆத்மானந்தத்தையே விஷய சுக மாக நினைத்து விஷயங்களைத் தேடி அலைந்து அல்ல லுறுகிறோம்.

பளபளக்கும் கிளிஞ்சலை வெள்ளியென மயங்கு கிறோம். இருளில் கயிற்றைப் பாம்பென நினைத்து

நடுங்குகிறோம். அருகிற் சென்று அது வெள்ளியல்ல, கிளிஞ்சல்தான்; பாம்பல்ல கயிறுதான்; என்று அறியு மட்டும் அத்தோற்றங்கள் உண்மைதானே! ஆனால் அந்தத் தோற்றம் இறுதி உண்மையல்ல.

அதுபோலவே தான் இந்த உலகமென்னும் தோற்ற மும். அகண்ட ஏக ரசமான சச்சிதானந்தம் என்னும் சமுத்திரத்தில் அலைகள் நீர்க்குமிழிகள் போன்று நாம ரூபங்கள் தோன்றி மறைகின்றன.

நாமரூபங்கள் மித்யாம்சம். அதாவது தோற்றம் மாத் திரம். சச்சிதானந்தமாகிய பரம்பொருளே முக்காலத் திலும் உள்ள உண்மை. அதுதான் நம் ஸ்வரூபம். பேரின்பமான அந்த ஸ்வரூபத்தை அனாதியான அவித்யையால், அக்ஞானத்தால் மறக்கிறோம். தேகம் மனது முதலியவை அனாத்ம வஸ்துக்கள். அவையே ஆத்மா என்ற தவறான நிச்சய புத்தி ஏற்படுகிறது. நாம ரூபங்களை உண்மையென மயங்கி வெளிப் பொருள் களில் விருப்பு வெறுப்பு கொண்டு, வேண்டுவதையடை வதற்கும் வேண்டாதவற்றைத் தவிர்ப்பதற்கும் கர்மங் கள் புரிந்து, புண்ணிய பாவங்கள் சம்பாதித்து பிறப் பிறப்பில் உழல்கிறோம்.

பரம்பொருள் ஒன்றுதான் முக்காலத்தும் அழியாது நிலைபெறும் ஸத்வஸ்து. அதுவே நான், அதைத் தவிர வேறொன்றுமில்லை என்று திட ஞானம் வந்தால்தான் நமக்கு ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.

'மற்றொன்று இருப்பது உண்மை' என்ற பிராந்தி அறவே நீங்கி, 'எல்லாமான பிரஹ்மமே நான்' என்று திட பிரக்ஞை ஏற்பட்ட பின் விருப்பு வெறுப்புக்கு இட மில்லை. கோபத்திற்கும், பயத்திற்கும் இடமில்லை. அப்போதுதான் நித்யானுபவரூபமாம் ஞானானந்தமாக நாம் இருப்பதை உணர முடியும்.

ஆகவே ஞானத்தினால்தானன்றோ 'கைவல்யம்' எனும் உபநிஷத் தாத்பர்யமும் கொண்டு மிளிர்கிறது, ஞானானந்தம் என்னும் தேனினும் இனிய சொல்.

ஜீவன் இந்த ஸ்வரூப ஞானத்தை எப்போது அடைவான் ?

ஈஸ்வரார்ப்பண புத்தியுடன் கர்மங்களைச் செய்து, சித்த சுத்தி பெற்று, நிலையிலாப் பொருள்களின் தீங்குகளையுணர்ந்து, இம்மை மறுமைகளின் போகங்களில் அவா அற்று, காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்னும் திரிபுடியின் உண்மையினை சங்கித்து தனது நிஜ ஸ்வரூபம் என்ன என்பதை ஆராயத் தொடங்குகிறான்.

அப்போது,

**''மேவரு ஞானானந்த வெள்ளமாய் விதித்தோன்ஆகி**
**மூவரும் ஆகிஅந்த மூவர்க்கும் முதல்வனாகி**
**யாவரும் யாவுமாகி இறைஞ்சுவார் இறைஞ்சப் பற்பல**
**தேவரும் ஆகிநின்ற செங்கண்மால் ! எங்கள்கோவே!'**
**(வில்லிபாரதம்)**

என்றெல்லாம் வெகு காலமாக உபாசிக்கப்பட்ட ஈஸ்வரனே ஒரு அருள் உருவம் தாங்கித் தேசிக வடிவில் வத்து மகா வாக்கியத்தின் உட்பொருளான ஞானானந்தமாகிய ஆத்ம தத்துவத்தை உபதேசிக்கிறான்.

எள்ளுக்குள் எண்ணெய் இருப்பது உண்மை. ஆனால் கண்ணுக்குப் புலனாவதில்லை. ஆனால், வித்து முழுவதும் எண்ணெய் பரவி நிற்கின்றது. எண்ணெய் இன்றேல் எள்ளினால் பயன் இல்லை. அது போன்று இறைவன் எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்துள்ளான்; நிறைந்து உயிர்களை இயக்குகிறான்.

எங்கணும் இடையறா நிற்பவன் இறைவன். அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் இறைவன்.

எல்லாப் பொருள்களையும் தோற்றுவிப்பவன் இறைவன். எனவே அப்பொருள்களின் ஊடாக உயிர்களில் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் திகழ்கின்றான்.

இறைவன் ஒருவனே இவ்வுலகின் ஜீவர்களாகக் காட்சியளிக்கின்றான்; பரம்பொருள் ஒன்றே பல பொருள்களாகக் காட்சிதருகிறது என்னும் கொள்கையும் உண்டு. "எப்பொருள் ஆகி எமக்கு அருள்புரியும் செய் பொருளாகிய சிவமே" என்கிறார் இராமலிங்க அடிகள்.

தன் பெற்றோரின் வீட்டை விட்டுப் பன்னிரண்டு வயதில் வெளியேறினான் சுவேதகேது. வேதங்களை முறையாகப் பயில்வதற்காகத்தான் இப்படிச் சென்றான். இருபத்து நான்காவது வயதில் வீடு திரும்பினான். 'வேதங்களைக் கசடறக் கற்றுவிட்டோம்' என்ற கர்வமும் அகந்தையும் அவனிடம் இருந்தன.

தகப்பனார் இதைக் கண்டார். "மகனே சுவேதகேது! நீ உன்னைப்பற்றி உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருப்பதாகத் தெரிகிறது; பெரிய கல்விமான் என்று பெருமை கொள்கிறாய். எந்த அறிவு பெற்றால் கேளாததை எல்லாம் கேட்க முடியுமோ, எண்ணாததை எல்லாம் எண்ண முடியுமோ, அறியாததையெல்லாம் அறிய முடியுமோ, அந்த அறிவை உனக்களிக்க உன் குருமார்களை நீ கேட்டதுண்டா?" என்று வினவினார்.

"அந்த அறிவு எது, அப்பா?" என்றான் சுவேதகேது.

"களிமண்ணை உனக்குத் தெரியுமானால், அது கொண்டு உருவான எல்லாப் பொருளையும் நீ கண்டு

கொள்வாய். வேற்றுமையெல்லாம் வெறும் சொல்லே, உள்ளது களிமண் ஒன்றே!''

''தங்கத்தை உனக்குத் தெரியுமானால், அது கொண்டு உருவான எல்லாப் பொருளையும் நீ கண்டு கொள்வாய். வேற்றுமையெல்லாம் வெறும் சொல்லே; உள்ளது தங்கம் ஒன்றே.

''இரும்புத்துண்டை உனக்குத் தெரியுமானால், இரும்பு கொண்டு உருவான எல்லாப் பொருள்களையும் நீ கண்டு கொள்வாய். வேற்றுமையெல்லாம் வெறும் சொல்லே. உள்ளது இரும்பு ஒன்றே'' என்றார் தகப்பனார்.

''பெரியோர்களான என் குருமார்களுக்கே இது தெரிந்திராது போலிருக்கிறது. தெரிந்திருந்தால் எனக்குச் சொல்லாதிருப்பார்களா? அந்த அறிவுபற்றி விரிவாகச் சொல்லுங்கள் அப்பா!''

''ஆகட்டும் மகனே! இதோ இந்த உப்பைத் தண்ணீரில் இடு. நாளைக் காலையில் வந்து பார்'' என்றார் தகப்பனார்.

அவரது ஆணைப்படி செய்தான் சுவேதகேது.

காலையில் அவனிடம், ''நேற்றிரவு நீரில் இட்ட உப்பைக் கொண்டுவா'' என்று சொன்னார் தகப்பனார்.

நீரைக் கூர்ந்து பார்த்தான் சுவேதகேது. உப்பைக் காணவில்லை. அதுதான் கரைந்து நீருடன் ஒன்றிவிட்டதே! 'காணவில்லையே உப்பை' என்றான் தந்தையிடம்.

''இந்த ஓரத்திலுள்ள நீரை ருசித்துப் பார்''.

''அது கரிக்கிறது அப்பா.''

“நடுவிலுள்ள நீரை ருசி பார்.”

“அதுவும் கரிக்கிறது ’.

“அந்த ஓரத்திலுள்ள நீரை ருசிபார்”

“அதுவும் கரிக்கிறது.”

“உப்பைத் தேடு மறுபடியும். பிறகு என்னை வந்து பார்.”

மகன் அப்படியே தேடினான். “உப்பைக் காண வில்லை. நீரே தெரிகிறது” என்றான்.

“மகனே! இதே மாதிரிதான் பரமாத்வை உன் ஊனக் கண்ணால் நீ காணமுடியாது. ஆனால் அவர் இங்கே இருக்கிறார். இது சத்தியம்” என்றார் தகப் பனார்.

சாந்தோக்ய உபநிஷத்தில் இந்நிகழ்ச்சி வருகிறது. பரமாத்மா இருக்கும் இடம் எத்துணை எளிதாக விளக் கப்பட்டுள்ளது!

ஈஸ்வரன், குரு, ஆத்மா இம்மூன்றும் ஒன்றே

“நிருபமம் அனாதிதத்வம் த்வம் அஹம் இதம் அத
இதி கல்பனா தூரம்|
நித்யானந்தை கரசம் ஸத்யம் பிரஹ்பாத் விதிய
மேவாஹேம்||
(விவேக சூடாமணி)

“ஒப்பற்றதும், அனாதியான தத்வமும் நீ, நான், அது, இது என்ற கற்பனைகளைக் கடந்ததும், என்றும் ஆனந்த ரஸ வடிவாகியதும், ஸத்யமுமாகிய அத்வீதீய பிரஹ்மமே நான்” என்றபடி அகந்தையின் மூலத்தை விசாரத்தால் நாடினால், அகந்தை யொழிந்து தானே யொளிரும் ஸ்வரூபம் மௌனமாக விளங்கும் என்பார்.

தன்னையழித்து எழுந்திடும் தன்மை யானந்தமே ஞானானந்தம்.

திருசிய விலயத்திற்கு உபாயமாம் ஆத்ம நிஷ்டையை போதிக்கிறார்.

"இந்திரசாலம் கனவு கானலின்நீர் எனஉலகம்
எமக்குத் தோன்றச்
சந்ததமும் சிற்பரத்தால் அழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்தி மகிழுற நாளும் தடைஅற ஆனந்தவெள்ளம்
பொலிக என்றே"

—தாயுமானவர்

ஸத்குரு சிஷ்யனைத் தன்னைப்போலவே ஞானானந்தத்தில் திளைக்குமாறு அனுக்ரஹித்து விட்டார்.

தள்ளுவதற்கும், கொள்ளுவதற்கும் ஒன்றுமில்லாமல் சும்மாயிருக்கும் பேரின்ப நிலையாகிய ஞானானந்தத்தை ரிபுகீதை அழகாகக் கூறுகிறது.

"இல்லையென வியம்பியிடும் பொருளுமின்றி
யிங்குளதென் றியம்பியிடும் பொருளுமின்றிச்
சொல்லியிடுஞ் சொற்பொருளோ ரணுவுமின்றிச்
சும்மாவே யிருந்து மகா மௌனி யாகி
யல்லிலா வகண்ட பரா நந்த மேவி
யநாதிபவ துக்கங்க ளனைத்துந் தீர்த்துக்
கல்லெனவே திடமான பரஞா னத்தாற்
கற்பனையோ ரணுவுமிலா முத்தி சார்வாய்"

(ரிபுகீதை)

அறிவுற்றதனைத்துக்கு மதீதமாகி, சின்மாத்திர வடிவாகி, செயலொன்றின்றி, கரையற்று, குணமற்று,

குற்றமற்று, காண்கின்ற கற்பனைகளனைத்து மற்று, நிறைவுற்று, நிர்ப்பயமாய், நிச்சலமாம் நிலை ஞானானந்தமாம்.

மலர், மலரின் நிறம், மலரின் மணம் இவையெல்லாம் பேதம் இல்லாமல் அபேதமாயிருப்பது போல, சத்து சித்து ஆனந்தம் இம்மூன்றையும் தமது திருமேனியாகக் கொண்டவன் இறைவன்.

"அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான், அரனாய் அழிப்பவனும் தானே" ஏகனே மும்மூர்த்தியாகத் திகழ்கிறான் என்பதை இவ்வாறு திருக்கைலாய ஞான உலா கூறுகிறது.

"முதல் இடை ஈறு இன்றி எஞ்ஞான்றும் ஈறு இலா மறைமுடி இருப்பான்"—தொடக்கமும், நடுவும் முடிவும் இல்லாமல் எப்பொழுதும் வேதங்களின் முடிபாகத் திகழ்பவன்.

"ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே" என்பது திருவாசகம்.

"ஈறு முதல் நடுவு ஒன்றும் இலாமையானும்" எனச் சிவப்பிரகாசம் இறைவன் முதலும் நடுவும் ஈறும் அற்றவன் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

அருவும் உருவும் அரு உருவும் ஆகிப்பரு வடிவம் பலவாய்க் குணம் குறி கடந்த ஜோதி இறைவன், உயிர்களுக்குரிய முக்குண இயல்பு அற்றவன். இறைவனைக் 'குணமிலி' என்கிறது திருவாசகம். ஆனால் குறைவு இல்லாத எட்டுக் குணங்களை உடையவன் அவன்.

திருவள்ளுவர் 'எண் குணத்தான்' என இறைவனைச் சுட்டிக் கூறுகிறார்.

முதல் நடு ஈறு எனச் சொல்லுவதற்கு அரிய கால எல்லை இல்லாத தன்மை உடையவன் இறைவன். மேம்பட்டு விளங்கும் ஞான வடிவினன். காலப் பழைமை கடந்தவன் இறைவன் ஆதலின் முதல் நடு இறுதி எனக் காலத்தோடு சேர்த்துக் கூறுதற்கு அரியவன் இறைவன்.

''ஆதியும் நடுவுடன் அந்தமுங் கடந்த ஜோதியாய்'' என இறைவனை அழைக்கிறார் திருவருட்பிரகாச வள்ளலார்

''ஈது இலா மறைமுடி இருப்பான்'' எல்லை இல்லாத வேதங்களின் முடிவாகத் திகழ்பவன் இறைவன்.

''தேற்றிய வேதத் திருவடி விளங்கிட ஏற்றிய ஞான வியலொளி விளக்கே'' என்பது திருவருட்பா.

''அளவறு கலைகட்கெல்லாம் உறைவிடமாகி வேத விளை பொருளாகி நின்ற வேதியே சரணம்''— அளவில்லாத நூல்களுக்கு எல்லாம் இருப்பிடமாகவும், வேதங்களில் உண்டாகின்ற பொருளாகியும் நின்ற குளிய வேதியர் பெருமானே சரணம் என்கிறார் பரஞ்சோதி முனிவர்.

வேதத்தின் முடிவே சிவலிங்கம். எங்கும் நிறைந்த பராபரம், பசுபாச ஞானங்களுக்கு மேற்பட்ட ஞான மாகிய விஞ்ஞானம், துன்பம் இல்லாமையாகிய நிராமயம், நூல்கள் போற்றுகின்ற பரப்பிரம்மம் ஆகிய அனைத்துமே வேதங்களின் வடிவாக உள்ள சிவலிங்க மூர்த்தியாகும்.

''ஞான நூல் இவன்றன் வடிவிலா வடிவினை உணர்த்தும்''—ஞான நூலாகிய வேதப் பிரிவு சிவ பெருமானுடைய நிர்மல சொரூபமாகிய சச்சிதானந்த சொரூபத்தை உணர்த்தும் என்பது ஆன்றோர்களின் கருத்து. வேதப் பொருளாகத் திகழ்பவன் இறைவன்.

வெயிலிலே துன்பப்படுகிற ஒருவன் நிழலைக் கண்டதும், 'அந்த நிழலைச் சென்று அடைக' என ஒருவரும் சொல்ல வேண்டியதில்லை. தானே சென்றடைவான். அது போன்று உலகியல் துன்பங்களிலே வருந்துகிற ஒருவன் திருவருளாகிய நிழலைக் கண்டதும், தானே அங்கு சென்றடைவான்.

இன்ப துன்பங்களில் ஏற்பட்ட வெறுப்பால் இவருக்குத் திருவருள் நாட்டம் உண்டாயிற்று. "திருவருளைச் சார்ந்தவர்களுக்கு அவர்களுடைய வினைகளையும், வினைப் பயன்களையும் சுமப்பவராகிய கடவுள் எளிதில் தோன்றுவார் என்று திருவருட் பயன் நூல் கூறுகிறது.

சித்த சுத்தி அல்லது அந்தக்கரண சுத்தி என்பது ஆத்ம சுத்தியாகும். யாருக்குத் தெளிவான மனம், அழுக்கு இல்லாத உள்ளம் இருக்கிறதோ, அவருக்கு, அவர் பார்க்கக் கூடிய, உணரக் கூடிய பொருள்கள் எல்லாம் உள்ளவாறு காட்சியளிக்கின்றன.

மனத்தில் அழுக்கு இருக்குமானால், பொருள்களை உள்ளவாறு உணரமுடியாது. தெளிவான உள்ளத்தில் விவேகம் உண்டாகிறது. அப்படி ஏற்பட்ட விவேகத்துடன் உலகியல் பொருள்களை நுகர்வது அனுபவ சுத்தி. பிறகு அந்த உலகியல் பொருள் யாவற்றையும் சிவனின் வடிவமாகவே உணர்வது அனுபோக சுத்தியாகும்.

விஞ்ஞானமும், ஆன்மீகமும் எதிரிடையானவை அல்ல. விஞ்ஞானம் வெளி உலகை ஆராய்கின்றது. எனவே அது உலகுடன் தொடர்பு உள்ளது. ஆனால் மனிதனின் அனைத்துப் பிரச்சினைகளையும் விஞ்ஞானம் தீர்க்க முடியாது.

மதம் மனிதனின் இதயத்தில் உறையும் தெய்வீகத்தைப் பற்றி உரைக்கின்றது. எனவே இதைப் புனித

மானது என்கின்றோம். உலக வாழ்வின் அனைத்துப் பிரச்சினைகளையும் மனிதன் ஆன்மீக ஞானத்தின் மூலம் எளிதில் தீர்க்கின்றான்.

மரணம் என்பது உடலுக்கு மட்டுமே நிகழ்வது. அது ஆத்மாவைத் தீண்டாது. மனிதன் சரீரம் அல்லன். மனித வாழ்வின் லட்சியம் உலகத்தில் தனது ஆசைகளைப் பூர்த்தி செய்து இருப்பது அன்று.

வாழ்வு, மரணம்; இன்பம் துன்பம்; வெற்றி தோல்வி என்று உள்ள இருமைகளை என்றும் தவிர்க்க இயலாது. உலகம் என்றாலே அது இருமைகளின் இருப்பிடமே!

எனவே உலகின் நடைமுறை இயல்பைப் பற்றிக் கவலைப்படாது, அதனைத் தனது பரிபாகத்திற்குப் பயன்படுத்த வேண்டும். நல்லொழுக்கம், ஆன்மீகம் இவற்றைப் பயில்விக்கும் பயிற்சிக்களமே இது.

இதை நன்கு பயன்படுத்தக் கற்றுக் கொண்டால், மனிதன் ஆன்மீக முன்னேற்றம் அடைவது திண்ணம்.

## 17

ஏறத்தாழ 31 ஆண்டுகளுக்கு முன்பு இமயத்தின் உச்சியான எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப் பிடித்த சர் (மலையேறிய பிறகு கிடைத்த பட்டம் இது) ஹில்லேரி அண்மையில் வாஷிங்டன் போஸ்ட் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா?

''அடிப்படையில் ஒரு மகா உயரமான மலை ஒரு மனிதனுக்கு விடும் சவால் இது. ஆனால் உண்மையில்

அது அவன் தனக்கே விடுத்துக் கொள்ளும் சவாலாகும். உச்சியான மலையில் ஏறும்போது எவ்வளவோ அபாயங்கள் உண்டு. அந்த அபாயங்களை எண்ணிப் பயந்து கொண்டிருந்தால் மலைமீது ஏறி உச்சியைப் பிடிக்க முடியாது.

''உண்மையில் அந்த அபாயங்களே நம்மை உசுப்பி விடும் செய்கைகளாகும். எத்தகைய ஆபத்துகளையும் தாண்டி அடைந்தே தீருவது என்ற மகா திடமான கொழுந்துவிட்டெரியும் ஆசை ஒருவருக்கு இல்லாவிட்டால் எவரெஸ்டை ஏறி அடைவது என்பதை நினைத்தே பார்க்க முடியாது. சாதாரணமானவர்களுக்கு உற்சாகம் அளிக்காத மகா துன்பகரமான கடுநடைப் பயணம் அது.

ஆனால் அதைப் பொருட்படுத்தாமல் முயன்று உச்சியை அடைந்து விட்டீர்கள் என்றால் ஆகா!...... எவ்வளவு பெரிய சாதனையைச் செய்து முடித்திருக்கிறோம் என்ற எண்ணம் ஏற்படுகிறதே...... அதற்கு உவமையே சொல்ல முடியாது.

என் வாழ்க்கையில் மட்டும் என்ன! ஒவ்வொருவரும் எவரெஸ்ட் மாதிரியான மலைபோன்ற பிரச்னைகளை வெல்வதற்காகப் போராடிக்கொண்டுதான் இருக்கிறார்கள். இதிலும் வெற்றிக்குத் திறவுகோல் என்பது மலையேறும்போது கடைப்பிடிக்க வேண்டிய பொறுமை, நிதானம், எத்தனை முறை சரிந்து விழுந்தாலும் துவளாமல் எழுந்து மீண்டும் பயணத்தைத் தொடரும் விடா முயற்சி, முயற்சியில் வெற்றி அடைந்தே தீருவது என்ற திட வைராக்கியம் ஆகியவைதான்.''

ஹில்லேரி கூறியுள்ளதில் எத்தனை பெரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன தெரியுமா, ''There is always room at the top'' என்று சொல்வார்கள். உச்சியில் எப்போதும்

காலியாகத்தான் இருக்கும். வாழ்க்கையில் எந்தத் துறை யாகட்டும், அதில் உண்மையான திறமை ஊக்கம் உள்ள வர்களுக்கு இடம் இருக்கத்தான் செய்கிறது.

ஆனால் உச்சியின் அழகை ரசித்தால் மட்டும் போதாது. சாதனை செய்யத் துடிப்பவன் உச்சியின் அழகைக் கண்டு உள்ளூறக் குமுற வேண்டும். அய்யே. உச்சியை அடைய முயற்சி செய்யாமல் இப்படி அடி வாரத்திலேயே நின்று புலம்பிக் கொண்டிருக்கிறோமே என்று வெட்கமும் வேதனையும் அடையவேண்டும். இந்த வெட்கமும் வேதனையும்தான் அவர்களை உச்சிக்கு அழைத்துச் செல்லும் படிகளாக எண்ண வேண்டும்.

ஹில்லேரியுடன் சென்ற டேன்சிங்கை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். அவன் மிகவும் பக்திமான். "ஆ! எவரெஸ்ட் சிகரமே! உன் தரிசனத்தை எனக்கு எப்பொழுது கொடுக்கப்போகிறாய்? நான் உன்னையே நினைத்து ஏங்குகிறேனே! உன்னிடம் வந்து சேர்வதற் கான மனத்திண்மையை எனக்குக் கொடு" என்று வேண்டிக் கொண்டிருந்தான். இறுதியில் அவ்வேண்டுத லுக்குப் பலன் கிடைத்தது.

ஆதி வேதங்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தான் பல்வேறு மொழிகளில், பல்வேறு நூல்கள் வழியாக எடுத்துக்கூறியிருக்கின்றனர். ஆழமான ஆன்மீகக் கல்வி அறிவைத் தருபவை எல்லாம் வேதங்களாகும். தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திவ்யப்ரபந்தம் இன்ன பலவும் வேதங்கள்தாம்.

அவரவர் தாய் மொழியின் மூலமாகவே அந்த மொழி யிலுள்ள வேத நூல்களின் மூலமாக ஆன்மீக அறிவைப் பெறலாம். நாள்தோறும் மனதை ஒருமுகப்படுத்தி—ஒரு குறிப்பிட்ட நேரத்தில்—அமைதியான சூழ்நிலையில்

பாராயணம் செய்து வந்தால் அளவற்ற நற்பலன்கள் அவசியம் ஏற்படும்.

இன்றைய உலக அவசர வாழ்க்கையில் இதற்கு நேரம் இல்லாதவர்கள், தக்க வேத வித்துக்களைக் கொண்டு தமக்குகந்த வேதத்தைப் பாராயணம் செய்யச் சொல்லிச் செவிமடுத்து, அவர்களுக்குத் தக்க மரியாதைகள்செய்து கௌரவித்தாலும் நற்பலன்கள் ஏற்படும்.

இவைகளை விட அளவில்லாத நற்பலன்களைக் கொடுப்பது எது? தேவாரப் பாட சாலைகள், வேதப் பாட சாலைகள் போன்றவற்றில் பயின்றுவரும் மாணவர்களுக்குத் தகுந்த வசதிகளைச் செய்து கொடுத்தலாகும்.

வேதங்களைக் கற்றால் வேதனைகள் தீரும். சோதனைகள் அணுகா. சாதனை புரிய வழிவகை செய்யும்.

சிறுவர்களுக்கு ஏற்ற முறையில் ஆன்மீக அறிவைப் புகட்ட வேண்டும். அவர்களை ஆன்மீக வழிகளில் ஈடுபடச் செய்ய வேண்டும். ஆன்மீகம் அறிவை வளர்க்கும்; அன்பை வளர்க்கும்; அமைதியைக் கொடுக்கும்; அறத்தைப் பேணச் செய்யும். வேதம் தழைத்தால் வீடும் நாடும் தழைக்கும். அதனால் வேதம் தழைக்க வழிவகைகள் செய்ய வேண்டும். வேதம் அன்னைக்குச் சமம். நடப்பவை நல்லவையாக இருக்க நாம் வேதத்தை நாட வேண்டும். ஒருவன் ஆனந்தமயமான நிலையை அடைய வேண்டுமானால், தன்னுடைய இந்திரியங்களை ஜெயித்து அடக்கி, குரோதத்தை விட்டு எப்பொழுதும் தியானத்திலும் பாராயணத்திலும் ஈடுபட வேண்டும்.

எந்தவொரு வடிவத்திற்கும் ஆரம்பம் இருக்கும். அந்தமும் இருக்கும். சதுரத்திற்கு உண்டு. முக்கோணத்திற்கு உண்டு. ஆனால் வட்ட வடிவத்திற்கு ஆதியு

மில்லை; அந்தமுமில்லை. முழுமையான வட்ட வடிவ மாக இல்லாமல் சிறிது நீள வட்டமாக காட்சி தரும் லிங்கத்திற்கு ஆரம்பம் இல்லை. முடிவுமில்லை. தியானம் செய்வதற்கு அரூபமானதை நினைப்பது எல்லோராலும் சாத்தியமில்லை. அதனால் அதற்கு ஒரு வடிவம் அமைத்துக் கொள்கிறோம். அதுதான் லிங்கோத்பவ மூர்த்தியாகும். லிங்கத்திற்குக் காட்சி தரும் லிங்கோத்ப வரின் தலைமுடி முடிவு பெறாமல் இறைவனுக்கு ஆதி யில்லை என்பதைக் குறிப்பிடுகின்றது. பாதங்களைக் காட்டாத மூர்த்தியின் வடிவம் இறைவனுக்கு அந்த மில்லை என்பதை விளக்குகின்றது.

ஸ்படிக லிங்கத்துக்கு ஒரு வர்ணமும் கிடையாது. எந்தப் பொருளை அதில் வைக்கிறோமோ அந்த நிறம் ஸ்படிக லிங்கத்தில் பரிமளிக்கும். சிவந்த புஷ்பங்களை வைத்தால் சிவந்த மேனியாகவும், வில்வ இலையால் அர்ச்சிக்கும் பொழுது பச்சை மாமேனியாகவும் நமக் கெல்லாம் காட்சியளிக்கும். சர்வேஸ்வரன் எமது மனோ பாவத்திற்கேற்ப வரமளிக்கும் தயாள குணம் கொண் டவர் என்பதற்கு இது சான்றாகும். பிரம சுத்தமான நிஷ்களங்கமான ஸ்படிகலிங்கம் நிர்குணமான பரமாத்மா வின் வடிவமாகும்.

உலகத்திலே வேறு எந்த மதத்திலும் வர்ணாசிரமம் என்ற நான்கு வகைப் பிரிவு இல்லையே! இது இந்த மதத்துக்குத் தேவைப்படுவானேன்? இச்சாதிப் பாகு பாடுகளினாலேயே நமது மதம் பலவீனம் அடைந்து விடவில்லையா; என்று சிலர்—ஏன்? பலர்—எண்ணலாம்.

''ஒரு சமுகம் நன்றாக அமைவதற்கு, அதன் முக்கியமான பொறுப்புக்களைக் குறிப்பிட்டவர்கள் ஏற்றுக் கவனிக்க வேண்டியிருக்கின்றது. இன்றும் நமது வாழ்க்கையில் குறிப்பிட்டவர்கள், குறிப்பிட்ட வேலை யையே ஏற்றுச் செய்வதை நாம் பார்க்கிறோம். இப்படிச்

செய்யும் தொழிலை அடிப்படையாக வைத்து, அன்று நமது மதம் சமூகத்தை நான்கு பிரிவாகப் பிரித்தது. சாதாரணத் தொழிலை அதிகமாகச் சிந்திக்காமல் செய்து முடிப்பது பெரும்பான்மையாளர்களின் முக்கியமான வேலை.

அதற்கு அவர்களுக்கும் சமூகத்துக்கும் வேண்டிய செல்வத்தையும் பொருட்களையும் சேகரித்துக் கொடுப்பது அதற்கு அடுத்தபடி முக்கியமான வேலை. இதைப் பெரும்பான்மையானவர்கள் செய்ய முடியாது. ஒரு பகுதியினர்தான் செய்ய முடியும். இப்படி வேலைகளையும், பொருள் .சேர்ப்பதையும் கவனிப்பவர்கள் நிம்மதியாகச் செயற்படுவதற்கு, பாதுகாப்பு தேவைப் படுகிறது.

அதை உடல் வலிமையையும் தனிப் பயிற்சியையும் பெற்ற சிலர் தாம் செய்ய முடியும். இதற்கு ஒரு பிரிவினர் பொறுப்பு அளிக்கப்பட்டனர். இவ்வாறு பலவகைப் பொறுப்புகளை ஏற்றிருக்கும் மூன்று பிரிவினருக்கும் ஆத்ம சிந்தனையில் ஈடுபட, நேரமோ, ஆழ்ந்து கவனம் செலுத்தும் பண்போ இருக்க முடியாது. இதற்கு அடுத்தாற்போல் தமது முழு நேரத்தையும் செலுத்தி ஈடுபடுவர்கள் மிகச் சிலரே இருக்க முடியும். இவர்கள் மிகச் சிறுபான்மையினரான ஒரு பிரிவாக வகுக்கப்பட்டார்கள்.

இப்படிச் சமூகத்தின் தேவைகளைக் கவனிக்க நான்கு வகைப் பிரிவினராக மக்கள் வகுக்கப்பட்டார்கள். இவர்கள் யாவரும் இறைவனின் படைப்புகளே. அவர்கள் இறைவனின் படைப்புகளான மககளுக்கு, தமக்கே உரியவிதத்தில் அறிவினாலும், தொழில் நுட்பத்தினாலும் உழைப்பினாலும் பணிபுரிகிறார்கள். நான்கு வகுப்பினரும் சமூகத்தின் பொதுநலத்தையே தமது சொந்த நன்மையைவிட அதிகமாக மதிக்க வேண்டும்

என்பதே நமது சாஸ்திரம் கூறும் தர்மம் ஆகும். இதில் உயர்வு தாழ்வுக்கு இடமில்லையே!'' என்கிறார் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்.

ஏகப்பட்ட சுள்ளிக்கட்டைகளைச் சேர்த்துப் பிடித்து ஒரு கட்டாகக் கட்டுவது என்றால் அது சிரம சாத்திய மான காரியம். அப்படியே சிரமப்பட்டுக் கட்டினாலும் கூட அது சுலபத்தில் நெகிழ்ந்து போய்விடும். அதி லிருந்து இரண்டு மூன்று சுள்ளிகளை உருவி எடுத்தால் போதும். அதன் பிறகு அந்தக் கட்டு முழுவதுமே உருக் குலைந்து விடும்.

இதற்கு மாறாக முதலிலேயே கைக்கு அடக்கமாகப் பத்துப் பதினைந்து சுள்ளிகளுக்கு ஒரு கட்டாக வைத் துக் கட்டிக் கொள்கிறார்கள். பிறகு அந்தக் கட்டுகளை எல்லாம் சேர்த்து ஒட்டு மொத்தமாக ஒரு கட்டாகக் கட்டி விடுகிறார்கள். இது இன்னும் விறைப்பாக உறுதி யாக இருக்கும். இந்தப் பெரிய கட்டு கொஞ்சம் தளர்ந்து கொடுத்தாலும்கூட ஒரு தனிச் சுள்ளி விழுகிற மாதிரி சின்னச் சுள்ளிக்கட்டு விழாது. அப்படியே இரண்டொரு சிறு கட்டுகள் போனாலும் பெரிய கட்டு பத்திரமாகவே இருக்கும். என்றைக்கும் அது கட்டுவிட்டுப் போகாது.

ஒரு பெரிய ஜன சமூகமும் அதைப் போன்றதுதான் அதை ஒரே அமைப்பில் போட்டுக் கட்டுவது என்பது நடக்காத காரியம். ஒரு பெரிய—மகாப் பெரிய—சமூ கத்தை யார் எப்படிக் கட்டுப்பாட்டில் வைத்து நிர்வகிப் பது? இதற்காகத்தான் அதைப் பரம்பரையாகப் பல ஜாதிகளாகப் பிரித்து, சிறு அமைப்புக்களாகச் சேர்த்து வைத்தார்கள். இதில் ஒரு கட்டுக்கோப்பு இருக்கும். அவரவர் தமக்குள்ள கட்டுக்கோப்பை ஒழுங்கு தவறா மல் பார்த்துக் கொள்ளுவார்கள். மொத்தத்தில் சமூகமும் உறுதியாக இருக்கும்.

ஜாதிகளுக்குள் ஜாதி நாட்டாண்மை என்று இருக்கும். அவர்கள் அவரவர்களுக்குரிய கட்டுக்கோப்பைப் பாதுகாத்துக் கொள்வார்கள். தவறு நடக்காமல் கவனித்துக் கொள்வார்கள். இதில் ஒரு பாந்தவ்யம், அபிமானம் எல்லாமே இருக்கும். இந்த முறையில் தண்டனை கிடைத்தாலும் அதில் கலகம் ஏற்படாது. ஆகையால் ஜாதிகள் இருப்பது சமூகத்தைப் பலப்படுத்துவதற்கே என்று உணருதல் நல்லது. இந்தக் கருத்தைக் காஞ்சிப் பெரியவர்களே சொல்லியிருக்கிறார்கள்.

நாற்காலிக்கு நாலு கால்களும் முக்கியமே! அதனால் ஜாதிகளில் உயர்வு தாழ்வு கூடாது. அதனால் சண்டைச் சச்சரவு ஏற்படுகிறது. இப்படி உயர்வு தாழ்வு பாராட்டுவதனாலேயே, சாதியே வேண்டாம் என்று சொல்லத் தோன்றுகிறது.

வேத காலத்தில் யக்ஞோப வீதம்—பூணூல்—யாவருக்குமே உண்டு என்றே தோன்றுகிறது. அவரவர்—அநேகர்—நியம நிஷ்டையுடன் இல்லாததால்—இருக்க முடியாததால்—பூணூல் அணிவது—கைவிடப்பட்டிருக்கும் போலும்!

பூணூலை மார்பிலும் முதுகிலும் வரும்படி இடமிருந்து வலமாக அணியும்போது, நமது உடலில் மேன்மையான காரியங்களைச் செய்யும் பகுதி, அந்தப் பிரிவுக்கு மேலே போய் விடுகிறது. நமது சிந்தனைக்கும் இயக்கத்துக்கும் முக்கியமாகப் பயன்படும் மூளையுள்ள தலைப்பகுதி, நம்மை ஒவ்வொரு கணமும் செயல்படுத்தும் நல்ல இரத்தத்தை அளிக்கும் இருதயம், சுவாசப்பை ஆகியவை உள்ள பகுதி, நாம் முக்கியமான காரியங்களைச் செய்ய உதவும் வலது தோள், கை ஆகிய மூன்றுமே இந்த மேற்பகுதியில் அமைந்துவிடுகின்றன. இந்தப் பிரிவுக்குக் கீழே உள்ள பகுதி, மிருகங்களுக்கும் மனிதனுக்கும்

பொதுவான கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டுபவை. பசியைக் காட்டி நம்மை வாட்டும் வயிறு, ஜீரண உறுப்புகள் ஆகியவை இங்கே கீழ்ப் பகுதியில் அமைந்து விடுகின்றன.

வயிற்றுப் பசிக்கும், காமத்துக்கும் இடம் கொடாமல் தனது சிந்தனையினால் உயர்வு பெறுபவனே மிருக உணர்ச்சிகளிலிருந்து விடுபட்டு மனிதப் பிறவியின் மேன்மையை அடைந்தவனாகிறான். அதனால்தான் நமது மதம், உயர்ந்த உள்ளம் கிடைக்கப் பட்டினியையும் காமத்திலிருந்து விடுதலை பெறுவதையும் முக்கியமாக உணர்த்துகிறது. இப்படிக் கீழிருந்து மேலே உயரும் நிலையையே நமது உடம்பின் கீழ்ப் பகுதியிலிருந்து மேலே உள்ள பகுதியைப் பிரிக்கும் பூணூல் எடுத்துக் காட்டுகிறது.

நாம் ஒவ்வொரு காரியத்தைச் செய்யத் தயங்கும் போதும் நம்முடைய மனத்தில் தூண்டும் குரலாக ஒன்றும், அதை மறுக்கும் குரலாக ஒன்றும் கேட்கிறது. சில சமயம் தவறான ஒன்றை நாம் செய்தாலும் அதற்குச் சமாதானமாகத் தூண்டும் நம்முடைய உண்மையான மனச்சாட்சி இந்த இரண்டில் எது என்ற சந்தேகம் அவரவருக்கும் உண்டாகலாம் அல்லவா! ஒவ்வொரு உடலிலும் ஜீவாத்மா குடிகொண்டிருக்கிறார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கட்டும்.

''நமது உடம்பில் இயங்கும் மனம் என்ற பகுதி பெரும்பாலும் நமக்குப் பிரியமான, எளிய ஆசைகளையே தீர்த்துக்கொள்ளும்படித் தூண்டுகிறது. இப்படித் தூண்டுவதே சாதாரண மனிதனின் மனம் பெரும்பாலும் செய்கின்ற காரியமாகும். அப்படிச் செய்யும் போது அது அதற்குச் சௌகரியயான ஒரு காரணத்தையும் சொல்லிச் சமாளித்துக்கொள்ள உதவுகிறது. உதாரணமாக நாம் செய்யக்கூடாத ஒன்றை நாம் செய்ய

வேண்டி இருக்கும்போது, 'இந்த ஒரு தடவை மட்டும் தானே?' என்றும், 'இதனால் யாரும் பாதிக்கப்பட வில்லை என்றால் அது தவறானது இல்லை' என்றும் வற்புறுத்தி அக்காரியத்தை நாம் செய்யுமாறு தூண்டு கிறது. இவ்வாறு வெளியில் உள்ள சந்தர்ப்பங்களை யும் சூழ்நிலையையும் வைத்து நம்மைப் பணிய வைப் பது நம்முடைய இந்திரிய ஆசைகளை ஒட்டிய மன மாகும். ஒருவன் தனது வாழ்க்கையில் மிகவும் கட்டுப் பாடான நியதிகளைக் கடைப்பிடிக்கவில்லையானால் அநேகமாக இந்த சமாதானத்தை ஏற்றுக்கொண்டு ஆசைகளை ஏற்றுப் பணிந்து போய் விடுகிறான்.

இந்தச் சமாதானம் சரியல்ல என்று நமக்கு நாமே விளக்கிக்கொண்டு எது உண்மையாகவே சரியானது என்று ஒரு கணம் ஆராயவேண்டும். ஆசைகளின் உட னடியான வேகத்துக்கு இடம் கொடாமல், விவேகத்தின் நிதானமான ஆராய்ச்சிக்கு இடம் தரவேண்டும். இப்படி நம்மை ஆராயத் தூண்டுவதுதான் அறிவு. அவ்வாறு அறிவு எடுத்துச் சொல்லும்போது அதை அடக்கி விடாமல் அதற்கு வாய்ப்புக் கொடுக்க நம் மனத்தைப் பழக்கப்படுத்த வேண்டும். தவறு செய்த பிறகும் இந்த மனப்போராட்டம் தொடருகிறது. 'அது தவறு அல்ல' என்பதற்கு ஆயிரம் மனத்தின் பெரும்பகுதி சொல்லு கிறது. 'அது தவறுதான் அதை உணர்ந்து கொள்; இனிமேல் செய்யாதே' என்று இடித்துக் கூறுகிறது ஒரு சிறு பகுதி.

அந்த நிலையிலாவது தான் செய்தது தவறு என் பதை உணர்ந்து, தொடர்ந்து அதைச் செய்யாமல் இருந்தோமேயானால் அந்தத் தவறும் நம்மைப் புனிதப் படுத்திக்கொள்ள உதவும். ஆனால் பெரும்பாலும் ஒரு சாதாரண மனிதன் இந்த இரண்டு நிலைகளிலும்

அறிவுக் குரல்களுக்கு இடம் கொடுப்பதே இல்லை: ஆசைகளிலேயே தன்னை இழந்து விடுகிறான்.

உண்மையான மனச்சாட்சியினால் பலம் இழந்து விடுகிறான். அவன் சாகும் வரையில் அவனுக்கு அறிவு பூர்வமான ஆலோசனையை எடுத்துச் சொல்லி, அவனைத் திருத்த முயன்று கொண்டே இருக்கிறது. அதனால் தான் வாழ்க்கையின் முற்பகுதியில் தவறு செய்தவர்கள், அதன் பிற்பகுதியிலாவது நன்மை செய்ய முற்படுகிறார்கள். இந்த மனப்பக்குவத்தை நாம் எவ்வளவு சீக்கிரம் அடைகிறோமோ அந்த அளவுக்கு நாம் விரைவில் உயர்ந்து விடுவோம்.'' என்றெல்லாம் விளக்குகிறார் அரவிந்தாசிரமத்து 'அன்னை.'

விஞ்ஞானத்திற்கும் மெய்ஞ்ஞானத்திற்கும் உள்ள தொடர்பைப் பற்றி அறிவோமா? விஞ்ஞானத்தின் மூலம் ஏற்கனவே இயற்கையில் இருப்பவைகளை ஆராய்ச்சியாளர்கள் கண்டறிகிறார்கள். ஆனால் அவற்றை விஞ்ஞானி கண்டு பிடிப்பதற்கு முன்பே அவை இருந்தன. அவற்றை மனிதன் புதிதாக அடையாளம் கண்டு கொண்டான். அதுவே விஞ்ஞானம்.

ஆனால் அவ்விதம் கருவிகளாலும் சோதனைகளாலும் கண்டுபிடிக்கக்கூடியவை மட்டுமே விஞ்ஞானத்தின் எல்லையாக இருக்கின்றன. அதைத் தாண்டி அவனால் செல்ல முடிவதில்லை. செல்ல முடியவில்லையே என்ற ஏக்கமும் அவனுக்கு ஏற்படுகிறது. நீ எதை உணருகிறாயோ, அதுவாக நீ ஆகிவிடுகிறாய் என்று உபநிடதங்கள் கூறுகின்றன. விஞ்ஞானியின் உணர்வுகள் அவனுடைய கண்டுபிடிப்புகளுடன் முடிவடைந்து விடுகின்றன.

மெய்ஞ்ஞானி இயற்கைக்கு ஆதாரமான சக்தியை ஆராய முற்படுகிறான். எங்கே விஞ்ஞானியின் ஆராய்ச்சி

முடிகிறதோ, அங்கே மெய்ஞ்ஞானியின் ஆராய்ச்சி தொடங்குகிறது. அது கருவிகளுக்கும் ஆராய்ச்சிகளுக்கும் அப்பாற்பட்டது.

சிந்தனையின் எல்லையில்லாத முயற்சியில் அவன் ஒருமித்து விடுகிறான். அந்த உணர்வில் அவனுக்கு எல்லையில்லாத ஆனந்தம் ஏற்படுகிறது. அவனுடைய விரிவடைந்த ஞானம் மக்களுக்கும் பயன்படுகிறது. அதற்கு ஒரு முடிவோ எல்லையோ, ஏமாற்றமோ இல்லை.

எல்லாப் பொருட்களையும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளில் மூலம் வகைப்படுத்த முடியாது. ஆனால் மெய்ஞ்ஞானம் எல்லா வகைப் பொருட்களையும் ஒரே வகையில் ஒரே உணர்வில் ஒன்று படுத்தி விடுகிறது. எல்லோரிடமும் அந்த ஒரே சக்தியின் பலனையும் எல்லோரும் அந்த ஒரே சக்தியின் மூலம் ஒன்று படுவததையும் உணருகிறோம். ஆகையால் மெய்ஞ்ஞானத்தின் மூலம் மனிதன் பெறும் உயர்வுக்கு மற்ற எந்த வகையான விஞ்ஞானக் கண்டு பிடிப்பு இணையாக முடியாது.

வேதங்களில் கூறப்பட்டுள்ள யக்ஞங்களில் மிகவும் எளியது அக்னி ஹோத்ரம்தான்.

'சூர்யாய ஸ்வாஹா
சூர்யாய இதம்தமஹ
பிரஜாபதேய ஸ்வாஹா
பிரஜாபதேய இதம் நமஹ'

இவை அக்னிஹோத்ர மந்த்ரத்தின் எளிய சொற்களாக விளங்குபவை.

அக்னிஹோத்ரம் வானிலையை மாற்றுகிறது. அதில் ஈடுபடுபவர்களின் மனத்தையும் பக்குவப்படுத்துகிறது.

அமெரிக்காவிலும் ஜெர்மனியிலும் இது பற்றி நடத்தப்பட்ட ஆராய்ச்சிகளிலிருந்து இந்தப் பயன்களை அடைய முடியும் என்பது விஞ்ஞானப் பூர்வமாகத் தெரிய வந்திருக்கிறது. இதை அங்கே 'ஹோமா தெரபி' என்றே குறிப்பிடுகிறார்கள்.

ஜெர்மனியின் புகழ் பெற்ற ஆராய்ச்சியாளர் ஃபிரெடரிக் மாக்ஸ் முல்லர் புதிதாகக் கண்டு பிடிக்கப் பட்ட 'போனாகிராப்' என்ற கருவியில் பதிவுசெய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்ட போது, அவர் குறிப்பிட்டார்.

"அக்னிம் இதே புரோஹிதம்-யக்ஞஸ்ய தேவம் ரிக் விஜம் ஹோதாரம் ரத்னதாதமம்."

உலகத்தின் பழம்பெரும் நூலான ரிக் வேதத்தில் வரும் முதல்வாசகம் இது, "அக்னியை நான் வணங்குகிறேன். யாகத்தின் முதல் தலைவனும், தெய்வீகம் நிறைந்த முதல்வனும், சக்தியைத் தூண்டுபவனும், எல்லாச் செல்வங்களையும் அருளுபவனும், ஆகிய அக்னியை நான் வணங்குகிறேன்" என்பது அதன் பொருள்.

ஹோமம் என்பது சாதாரண நெருப்பல்ல. இயற்கையில் உள்ள விஞ்ஞான வழி வேறுபாடுகளுக்கு ஏற்றவாறு அது உருவாக்கப்படுகிறது. விதிப்படி அதைத் தயார் செய்யக் குறிப்பிட்ட பொருட்களை உபயோகிக்க வேண்டும், பிறகு அதிலிருந்து சக்தியைப் பெற, குறிப்பிட்ட மந்திரங்களை உச்சரிக்க வேண்டும்.

ஹோமங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறியதும் எளியதுமான ஒன்று அக்னி ஹோத்ரம். இது இயற்கையின் விஞ்ஞான வழியில் மனிதனின் மனத்தைப் பண்படுத்துகிறது. இதனால் உடலுக்கும், சில அடிப்படையான பக்குவங்கள் கிடைக்கின்றன. இவை ஆயுர்வேத நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. அக்னி ஹோத்ரம் ஒரு

நாளைக்கு இரண்டு முறைகள் செய்யப்பட வேண்டும். கணக்காகச் சூரியன் உதயமாகும்போதும் சூரியன் மறையும் போதும் செய்யப்பட வேண்டும். இயற்கையின் சுழற்சியை ஒட்டி இது செய்யப்படுகிறது. ஆகையால் சூரியனின் தோற்றமும் மறைவும் இதற்கு உரிய கால அளவுகளாக இருக்கின்றன. சூரியோதயத்தின்போது சக்தி மிகுந்த மின்னணுக்கள், நெருப்பு மின்னல்கள், நேரடியாகப் பூமியை நோக்கி வருகின்றன. இந்த ஒளி வெள்ளத்தின் வலிமை அபாரமானது. தீய பொருட்கள் அந்த உதயத்தில் கருகி அழிந்து விடுகின்றன. உயிர் கொடுக்கும் சக்தி ஓங்குகிறது. அந்த வேளையில் அக்னி ஹோத்திர மந்த்ரங்களை இசையுடன் கூறுவது அந்தச் சக்தியைத் தூண்டுகிறது. மாலையில் சூரியன் மறையும் வேளையில் இந்தச் சக்தி மெல்ல மெல்லச் சுருங்கி அடங்குகிறது. அப்போதும் இந்த மந்த்ரம் அதன் இயக்கத்துக்கு ஏற்றபடி அமைகிறது.

அக்னி ஹோத்ரம் செய்யப்படும் போது இயற்கையும் மனித உள்ளமும் ஒரே அளவுத் துடிப்புடன் வயப்படுவதும், வசப்படுவதும் நிகழுகிறது.

அக்னி ஹோத்ரம் செய்யத் தேவைப்படுபவை, கூர் உருளையின் பகுதியைப் போன்ற வடிவம் கொண்ட செம்புப் பாத்திரம், காய்ந்த பசுஞ்சாண வறட்டிகள், சுத்தமான நெய், தானியங்கள் ஆகியவை.

இரசாயன முறைப்படி புரதச்சத்து மிகுந்த அரிசியே இதற்கு உகந்த தானியமாகிறது. கசப்பான பழம் பழுக்கக் கூடிய, முட்கள் நிறைந்த மரத்தின் சுள்ளிகளே யாகத்துக்கு உரிய சுள்ளிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. சூரியோதய காலத்திலும் சூரியாஸ்தமன காலத்திலும் அக்கினி மூட்டப்பட்டு ஹோமம் நிகழ்த்தப்படுகிறது. பசுஞ்சாண வறட்டித் துண்டுகளும், நெய்யும்,

அரிசியும் அக்னியில் சேர்க்கப்படுகின்றன. விரல் நுனியில் மட்டுமே எடுக்கக் கூடிய அரிசித் துணுக்கு களைச் சேர்த்து, 'சூர்யாய ஸ்வாஹா, சூர்யாய இதம் நமஹ' என்று முதல் மந்த்ரம் உச்சரிக்கப்படுகிறது. தொடர்ந்து. "பிரஜாபதேய ஸ்வாஹா, பிரஜாபதேய இதம் நமஹ" என்று இரண்டாவது மந்த்ரம் கூறப்படு கிறது. இது சூரியோதய காலத்தில் செய்யப்படும் தொடக்கம் ஆகும்.

இதே போல 'அக்னயே ஸ்வாஹா, அக்னயே இதம் நமஹ; பிரஜாபதேய ஸ்வாஹா, பிரஜாபதேய இதம் நமஹ' என்று சூரியாஸ்தமன சமயத்தில் உச்சரிக்கப் படுகிறது. அப்போது அக்னி ஹோத்ர பாத்திரத்தைச் சுற்றி அபரிமிதமான சக்தி அலைகள் உருவாகின்றன. காந்த சக்தி மிகுந்த மண்டலம் ஒன்று உருவாகி அழிவுச் சக்திகளைத் தடுத்து வளர்ச்சி சக்திகளை அமைக்க உதவி செய்கிறது.

இவ்வாறு அக்னி ஹோத்ரம் வளர்ச்சியையும், செழுமையையும் தூண்டுகிறது. இவை அக்னி ஹோத்ரம் செய்யப்படும் இடத்தில் விஞ்ஞான அடிப்படையில் எடுக்கப்பட்ட அளவுகளாகும். அக்னிஹோத்ரம் செய் வதற்கு முன்பும், பின்பும் வானிலையில் உள்ள பண்பு களை 'எலோப்டிக் சக்தி அளவுமானியின்' மூலம் பகுத்து அறிந்திருக்கிறார்கள். இந்தச் சக்தி அக்னிஹோத்ரம் செய்யப்பட்ட இடத்தில் கணிசமான அளவு உயர்ந்திருப் பதைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அக்னிஹோத்ரம் செய்யப்படும் சூழ்நிலையில் ஒரு சக்தி மண்டலம் உருவாகிறது. இந்த நிலையில் அங்கே வளரும் தாவர இனங்கள் செழுமையையும் சத்தையும் பெறுகின்றன. மகாராஷ்ட்ரத்தில் உள்ள திராட்சைப் பயிர்ப் பெருக்கத் துறை விஞ்ஞானிகள் இதை ஆராய்ச்சி மூலம் கண்டறிந்திருக்கிறார்கள்.

இது குறித்து ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் என்ன சொல்கிறார் என்று கேளுங்கள்.

''சமீப காலமாக நம் ஆசாரங்களைப்பற்றி இதற்கு முந்தைய தலைமுறைக்கு இருந்ததை விடக் கொஞ்சம் கௌரவ புத்தி உண்டாயிருப்பதைப் பார்க்கிறேன். முன்னே இங்கிலீஷ் படித்தவர்களென்றால் நம் ஆசாரம் அவ்வளவுமே பேத்தல் என்று நினைப்பவர்களாயிருந்தார்கள். ஆனால் நான் கொஞ்ச நாளாக ஒரு வேடிக்கை பார்க்கிறேன்—ஸயன்சும் ஆத்மீகமும் ஒன்றுக்கொன்று விநோதமானது போல் தோன்றினாலும் ஸயன்சு அபிவிருத்தியாகிக் கொண்டு வருவதாலேயே புதிது புதிதாக டிஸ்கவரி செய்யும்போது 'இதென்னடா ஆச்சரியமாயிருக்கிறது! நாம் ரொம்பவும் அறிவிலே பின்தள்ளி நின்றவர்கள் என்று நினைத்த ஆதிகால இந்தியர்கள் இந்த விஞ்ஞான உண்மைகளை நமக்கு இருக்கிற லாபரட்டரியும் இன்ஸ்ட்ருமென்ட்களும் இல்லாமலே எப்படியோ கண்டு பிடித்து அவர்களுடைய சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதாகத் தெரிகிறதே!' என்று அதிசயப்படுகிறார்கள்.

''கொஞ்ச நாள், முந்தி பத்திரிகைகளில் பார்த்திருப்பீர்கள். ரஷ்யாக்காரன்—கம்யூனிஸ்ட்—நிரீசுவரவாதி. ஆனால் இங்கே நாம் 'இதென்ன ஹோமம் வீட்டையெல்லாம் புகையாக்கிக் கொண்டு, கண்ணும் கரிக்கக் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது' என்றால் ரஷ்யா தேசத்து ஸயன்டிஸ்டுகள் வறட்டிப் புகையினால் அணுச் சிதைவில் கதிரியக்கம் உள்படப் பலவித லாஸ்யூஷன்களைப் போக்கிக் கொண்டு விடலாமென்று சொல்லி, நம்முடைய ஹோமத்தைப் புகழ்ந்திருக்கிறார்கள்.

இதேபோல ஹோமத்தில் போடப்படும் பலவிதமான ஸமித்துக்களின் புகை பரவுவதும் கிருமி நாசினியாக உதவுகிறது என்று முன்னே டாக்டர்கள் சொன்ன

துண்டு. தர்ப்பை, துளசி, வில்வம் என்றிப்படி நம் சாஸ்திர காரியம், பூஜை இவற்றில் பிரயோஜன மாகின்றவற்றுக்கெல்லாம் வைத்திய ரீதியிலே அழுத்த மான அடிப்படை இருக்கிறது என்கிறார்கள்'' என்று விளக்கியுள்ளார்கள்.

உலகமெங்கும், வானிலை, நீர், மண் ஆகியவற்றை வளப்படுத்தி, மனிதனின் மனத்தையும் பண்படுத்தி, உயிர்கள் வளர உதவி, தாவரங்களையும் செழுமைப் படுத்தும் அக்னி ஹோத்ரத்தை வாழ்வளிக்கும் மகா சக்தியாகக் கருதுவது மிகவும் பொருத்தம் அல்லவா!

குருவைத் தெய்வத்துக்கும் முன்னால் வைத்து மதிப்பது நம்முடைய மதம்—வேதம். நமக்கு உயிர் கொடுத்த பிரத்தியட்ச தெய்வங்களான அன்னைக்கும் தந்தைக்கும் பிறகு நம்முடைய அறிவுக் கண்ணைத் திறந்து வைப்பவர் குருநாதர். அது வரையில் உடல் அளவிலேயே வளர்ச்சி பெற்ற ஒருவன், குருநாதரை அடைந்த பிறகுதான் உள்ளத்தில் வளர்ச்சியைப் பெறு கிறான். இந்த வகையில் அவனுக்கு உள்ளத்தில் அறிவு விதையை ஊன்றி, முழுமையான இரண்டாவது பிறப்பை அளிக்கும் பிரம்மா குருநாதர்தான்.

விதையை ஊன்றிவிட்ட விவசாயி, அத்துடன் நின்று விடுவதில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அதன் வளர்ச்சி யைக் கவனித்துக் கொள்கிறான். காலத்தே நீர் பாய்ச்சி தேவையான உரம் போட்டு, பூச்சிகள் வராமல் மருந் திட்டுப் பாதுகாத்து அதை வளர்க்கிறான். இப்படிப் பாதுகாக்கும் தொழிலைக் கவனிக்கும் முறையில் குருநாதர் விஷ்ணுவின் காத்தல் தொழிலையும் செய் கிறார். பயிரின் வளர்ச்சிக்குக் குந்தகம் செய்யும் களை களைப் பிடுங்கி எறிகிறான் விவசாயி. பயிரின் ஒரு பகுதி நோய் வாய்ப்பட்டால் அதை வெட்டி நீக்கிவிடு

கிறான். தகுந்த வளர்ச்சியுள்ள மற்றப் பயிர்களுடன் சேர்த்து வைக்கிறான். அந்த அழிக்கும் தொழில் சிவனுக்கு உள்ளது.

அதேபோல மாணவனின் மனத்தில் அறிவை ஊன்றி ஞானத்தைப் படைத்து, அவனுடைய வளர்ச்சியை ஒவ்வொரு நிலையிலும் பாதுகாத்து, அவனுக்கு தீயசகவாசமும் கெட்ட பழக்கங்களும் ஏற்பட்டால் அதை அறவே நீக்கி அழித்து மூன்று தெய்வங்களின் தொழில்களையும் செய்பவராக விளங்குகிறார் குருநாதர்.

குருநாதர் மாணவரின் அறிவு விளக்கை ஏற்றி வைக்கும் ஞானதீபம். அதற்குப் பிறகு மாணவன் குருநாதரைக் காட்டிலும் அதிகமாகப் பிரகாசிக்கலாம். ஆனால் அதையும் மகிழ்ச்சியுடன் பார்த்துப் பெருமைப் படும் தெய்வம் குருநாதர். இத்தகைய மனப்பான்மை, தந்தை, தாய், குரு ஆகிய மூவருக்கு மட்டுமே உலகத்தில் உண்டு. அதனால்தான் அவர் பெற்றோருக்கு அடுத்தபடியாகப் பிரத்தியட்சத் தெய்வமாகக் கருதப்படுகிறார்.

இவ்வண்ணம் எதுவும் நம் வேதத்தில் ஓர் ஒழுங்கு முறையோடு அமைக்கப்பட்டுள்ளது. அநேகம் பேர் அதைச் சரியாகத் தெரிந்து கொள்வதில்லையே!

குருமார்களுக்குப் பாத பூஜை செய்வது நம் மதத்தினரின் பண்பாடு ஆகும். 'ஒரு மனிதரின் பாதங்களைக் கழுவி பூஜை செய்வதா? இது அடிமை மனப்பான்மை அல்லவா?' என்று படிப்பாளிகள் சிலர் கேட்கலாம். மேலான பரம்பொருளை நாம் அடைவதற்காக நமக்கு மார்க்கமாக இருந்து உதவுபவர்கள் தாம் குருமார்கள்.

அந்த மேலான பரம்பொருள் எதுவென்று நமக்குத் தெரியாது. ஆனால் அதனை நோக்கி நம்மை நிச்சயமாகக் குருநாதர் வழிநடத்திச் செல்வார் என்பது மட்டும் நமக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. மேலே உள்ள

பொருள் நமக்குத் தெரியாது. ஆனால் அந்த மேலான பொருளுக்கு நம்மை இட்டுச் செல்பவரின் பாதங்கள் நமக்குக் கண் கூடாகத் தெரிகின்றன.

மேலான பொருளை மனதால் தியானித்துக் கண் கூடாகத் தெரியும் குருநாதரின் பாதங்களை அந்த மேலான பொருளின் குறியீடாகக் கருதி அவற்றுக்குப் பூஜை செய்கிறோம்.

நாம் பாத பூஜை செய்யும் போது குருநாதரும் அந்த பூஜை தனது பாதங்களுக்குத்தான் செய்யப்படுகிறது என்று கருதுவதில்லை. தன் பாதங்களுக்குச் செய்யப் படும் பூஜையை எல்லாம் அவர் தான் உணர்ந்துள்ள மேலான பரம்பொருளுக்குச் சமர்ப்பணம் செய்து விடு கிறார். 'ஆணவம்' என்ற வேண்டாத குணத்திலிருந்து நம்மை விடுவிக்கும் ஓர் அற்புதமான நடைமுறைதான் அது.

## 18

நாதத்திற்கு இருப்பிடம் ஆகாயம். அண்டத்தில் இருப்பது தான் பிண்டத்திலும் இருக்கிறது என்பார்கள். அதன்படி இந்த நாதம் நமக்குள்ளும் இருக்கிறது. சகல ஜீவராசிகளுக்குள்ளும் குடி கொண்டு மின் சத்தியாக அனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கிறது இந்த நாதப் பொருள்.

யாகம் எனப்படும் கர்ம காரியங்களைச் செய்பவர் களுக்கும் யோகம் எனப்படும் தியான முறைகளில் ஈடு படும் யோகீஸ்வரர்களுக்கும், தியாகம் எனப்படும் அனைத்தையும் துறந்து விட்ட நிலையில் இருக்கும் சந்நியாசிகளுக்கும், போகம் எனப்படும் உலக இன்பங் களைத் துய்க்கும் சம்சாரிகளுக்கும் ஒருங்கே சுகம் அளிக்

கும் சக்தி வாய்ந்தது என்று ஒரு கீர்த்தனையில் நாதத்தின் மகிமை பற்றிக் குறிப்பிடுகிறார் தியாகப் பிரம்மம்

‘‘மந்த்ர சப்தங்களுக்கு எப்படிக் கண்டமாயிருந்து கொண்டே அகண்டத்தில் சேர்க்கிற சக்தியிருக்கிறதோ, அப்படியே சங்கீத சப்தங்களுக்கும்—சக்தி—இருக்கிறது. ஸ்வர ஸ்தானம் ஒன்றைத் தீர்க்கமாக—கார்வையாக—சுருதி சேர நீட்டியோ அல்லது கமகமாக நன்றாக இழைத்தோ மூர்ச்சனையின் உச்ச நிலையை ஸ்வச்சமாகத் தொட்டு விடுகிற போது கண்டமே அகண்டாநுவத்தில் சேர்ந்து விடுகிறது.

‘‘இந்த அகண்டாநுபவம் தான் அத்தனை வேத, வேதாந்த, யோக, மந்திர, தந்திர சாஸ்திரங்களுக்கும் லக்ஷ்யமாயிருப்பது. இதை ஸாதித்துத் தரும் ஸ்தானத்தில்தான் ஓசையை, ஒலியை நாதப் பிரும்மம் சப்த கும்பம், என்று ஸாக்ஷாத் பரமாத்வாகச் சொல்வது. அதை Goal-ஆக நினைத்து அதாவது காது என்ற இந்திரியத்தின்மூலம் மனஸின் இந்திரிய சுகத்துக்காக இன்றி ஆத்ம சௌக்கியத்தை Goal ஆகக் கருதி, சங்கீத அப்பியாசம் பண்ணும்போது அது ‘நாதோபாசனை’ ‘நாதயோகம்’ என்ற உகந்த பெயரைப் பெறுகிறது.

‘‘அர்த்தத்தோடு, அக்ஷரத்தோடு கலந்து மனமுருகிப் பாடும்போது பாடுகிறவருக்கும் கேட்கிற ஸதஸ் முழுவதற்கும் பரமாத்மாவிடம் தோய்ந்து நிற்கிற பெரிய தான இன்பம் கிட்டுகிறது’’ என்கிறார் காஞ்சிப் பெரியவர்கள்.

நம்முடைய பெரியவர்கள், ஸ்ருஷ்டி காலத்திலேயே வேதம் சப்த ரூபமாகத் தோன்றிற்று; பிரளய காலத்தில் இது மறையும். திரும்பவும் உலகம் தோன்றுகிறபோது இதுவும் தோன்றும்? என்று சொல்கிறார்கள். காவியத்திலும் சாஸ்திரங்களிலும்கூட வேதத்துக்குப் பாஷ்யமான

எழுந்துள்ள நூல்களிலுங்கூட இப்படியே கூறப்பட்டுள்ளது.

"வேத காலத்தை நிர்ணயிக்கிறவர்களில் சிலர் தம்முடைய கொள்கைக்கு ஒரு காரணம் சொல்கிறார்கள். உபநிஷத் என்று சில பாகங்கள் வேதத்தில் இருக்கின்றன. பாணினி சூத்திரம், பிரம்ம சூத்திரம், வியாகர்ண சூத்திரம் என்று சூத்திரங்களாக ஸம்ஸ்க்ருதத்தில் நூல்கள் இருக்கின்றன. அந்தச் சூத்திரங்களைத் தவிர ராமாயணம், பாரதம் என்று சுலோகங்களாகச் சில புத்தகங்கள் இருக்கின்றன. இப்படி இருக்கும் புஸ்தகங்களின் சுலோகங்களில் உள்ள பாஷை, சூத்திரங்களில் உள்ள பாஷை, உபநிஷத்தில் உள்ள பாஷை, வேதத்தில் உள்ள பாஷை இவற்றையெல்லாம் ஒப்பிட்டுப் பார்த்தால் அவற்றினுடைய சைலி எப்படி எப்படி மாறி வந்திருக்கிறது என்பதை நன்றாகப் பார்க்கலாம். சைலி என்பதை நடை என்று தமிழில் சொல்வார்கள்.

பழைய காலத்துக் கிணறுகளைப் பார்த்தால் அதிக உபயோகத்தினாலே எவ்வளவு தேய்ந்து போயிருக்கின்றன என்று தெரியும். அப்படியே தான் பாத்திரங்களும். ஆனால் வருஷத்துக்கு எப்போதோ ஒருமுறை உபயோகப்படுத்தி விட்டு அப்படியே அவ்வளவு சாமான்களையும் வீட்டுப் பரண்மேலே சில பேர் போட்டு வைப்பார்கள். இந்தப் பாத்திரங்கள் எல்லாம் நித்தியம் உபயோகப்படுத்துகிற பாத்திரங்களைப்போல் தேய்ந்து போவதில்லை. பல வருஷங்கள் அப்படியே இருக்கும்.

அந்த மாதிரி, நாம் வேதத்தை ரட்சித்துக் கொண்டிருக்கிறோம். சாதாரணமாகச் சகல மக்களும்—படித்தவர்கள் படிக்காதவர்கள் எல்லாரும் எப்படி வேண்டுமானாலும் உபயோகப்படுத்துகிற பாஷை தேய்கிற காலத்தை வைத்துக்கொண்டு வேதத்துக்கும் காலம்

நிர்ணயம் செய்யவருவது என்றால் அது அசட்டுத்தனம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

''காரணம் நாம் வேதத்தைக் கண்டபடி உபயோகப்படுத்தாமல் ரட்சித்துக் கொண்டிருக்கிறோம்.

ஸ்நானம் செய்த பிறகு, ஆசமனீயம் பண்ணிவிட்டு, கையில் தர்ப்பைப் பவித்ரம் போட்டுக் கொண்டுதான் சொல்லவேண்டும். இல்லாவிட்டால் பாவம் வரும். கொஞ்சம் எழுதந் தெரியாதவர்கள் ப்ராகிருதத்தில்தான் படிக்க வேண்டும். இப்படி எல்லாம் அநேக வரையறைகளை வைத்துக்கொண்டு மிகவும் பத்திரமாக ரட்சித்துக் கொண்டிருக்கிறபோது மற்ற பாஷைக்குத் தேய்வுக் கணக்குப் போடுகிற மாதிரியே, இதற்கும் நஷ்ட ஜாதகக் கணக்குப் போடுவது சரியில்லை என்று தோன்றுகிறது'' என்று விளக்குகிறார் ஸ்ரீ காஞ்சி ஆசாரிய சுவாமிகள்.

நாதத்தின் ஸ்வரமெல்லாம் ஈஸ்வர மயமானவை. இதனை உணர்ந்தவர்கள் ஜீவன் முக்தர்கள். நாதோபசானை செய்பவர்களுக்கு எல்லாத் தெய்வங்களும் பிரத்தியட்சமாவார்கள் என்று நாதோபாசனையின் பெருமையைப் போற்றுகிறார்கள்.

'ஆகாச சரீரம் பிரம்மா' என்பது உபநிடத வாக்கு. தெய்வமாகிய பிரம்மத்திற்கு ஆகாயம்தான் உடல் என்பது இதன் பொருள். பிரம்மத்தின் அசைவுதான் நாதம். அசையாதிருக்கும் பிரம்மத்தை அசைவிக்கும் அம்பிகை நாதத்தின் பிந்துஸ்தானமாக—ஆதார மையப் புள்ளியாக—விளங்குகிறாள். அம்பிகை தன் மாயையால் இதைச் செய்கிறாள். அந்த மாயையினால் பிரபஞ்சம் யாவும் தோன்றியது.

அந்தப் பிரபஞ்சத்தில் அம்பிகை தானும் பொருந்தியிருக்கிறாள் என்றாலும் அதற்குள் சம்பந்தமில்லாதவளாகத் தனித்தும் இருக்கிறாள்.

இதனால்தான் 'நாத பிந்து கலா அதித' என்று நாதத்தின் பிந்து ஸ்தானமாக இருந்தாலும் அதனின்று விலகியிருப்பவள் என்று அம்பிகையைப் போற்றுகிறோம். இது இறைவனுக்குரிய குணமாதலால் இறைவனைப் பல வடிவங்களில் பூஜிப்பவர்களும் இவ்வாறே தங்கள் இஷ்ட தெய்வங்களைப் போற்றுகிறார்கள்.

நமக்குள்ளேயே இருக்கும் தெய்வீகத் தன்மையை வெளிப்படுத்துவதுதான் நாதம். நமக்குள் ரீங்கரித்துக் கொண்டிருக்கும் நாதத்தை 'அனாகதம்' என்பார்கள். மனத்தை உள்முகமாகக் குவித்து அதைக் கேட்பது யோக முறைகளில் ஒன்று. அகதம் என்பது வெளியே கேட்கும் நாதம், அதை வெளிப்படுத்தி இறை உணர்வில் தோய்ந்து போவதுதான் நாதோபாசனை.

நாதம் என்பது வெறும் ஓசை மட்டுமல்ல. அது ஒரு மாபெரும் சக்தி. அந்த சக்திதான் அனைத்துக்கும் ஆதாரமாகவும் எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் சூத்திரக் கயிறாகவும் விளங்குகிறது. ஏகாக்கிர சித்தத்துடன் இறை உணர்வில் லயித்துப் போவதற்கு மிகச் சிறந்த சாதனமாக விளங்குவது அது. அதனால்தான் பெரியோர்கள் சங்கீதம், வேதபாராயணம், நாம ஸங்கீர்த்தனம் போன்ற நாதத்தை அடிப்படையாகக் கொண்ட முறைகளின் மூலம் தெய்வ பக்தியில் ஈடுபடும் வழியைக் கண்டறிந்திருக்கிறார்கள்.

ஆனந்த உணர்வு எனும் ஒன்று இல்லாவிட்டால் வாழ்வு நிறைந்த இவ்வுலகில் எவர்தாம் உயிர்த்திருந்து வாழ முடியும்? தத்துவார்த்தமாக விளங்கும் பேருண்மை என்பது பிரமம் என்பதன் உருவமே. அது தன்னைத் தானே எல்லாப் பொருள்களிலும் விளக்கமுறச் செய்கிறது. அதுவே உலக உற்பத்திகளுக்கும், உலக வாழ்விற்கும் பிறப்பு இறப்புகளுக்கும் நிலையான ஒரு சார்பிடமாக அமைந்து விடுகிறது.

அப்பேரான்மாவின் ஒப்பற்ற தனித்தன்மையே | இந்து சமயத்தினை ஆட்சி செய்யும் சீரிய இலட்சிய மாகும். ரிக்வேதம் உண்மைப்பரம் பொருள் தன்மையைப் பற்றிக் கூறுகிறது. அதுதான் ஏகம்சத்! இதைப்பற்றி அறிஞர்கள் பலவேறு வகைகளில் தத்தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். ஒரே பிரமம் பல்வேறு பெயர்களால் வழங்கப்படுகிறதென்றும் அது எந்தக் கட்டத்தில் எவ்வாறு செயலாற்றுகிறதோ, அதற்கேற்ற பெயர் அந்தப் பிரமத்துக்கு ஏற்படுகிறதென்றும் உபநிஷதங்கள் கூறுகின்றன.

மனிதன் உள்ளே ஒளிரும் எல்லையற்ற பரம்பொருளின் சுயரூபம், அழிந்து போகும் ஓர் எல்லைக்குட்பட்ட இந்த உலக நாகரிகத்தின் செயலைக் கண்டு மனநிறைவு கொள்ளவில்லை.

நம் உள்ளிருக்கும் தெய்வீகத் தன்மையை எவ்வளவுக்கெவ்வளவு கூடுதலான அளவில் நம் வாழ்க்கை வெளிக்கொணர்ந்து காட்டுகிறதோ, அதே அளவில் நாம் மற்ற பிராணிகளைவிட உயர்ந்தவர்களாக ஆகிறோம்.

கடவுள் எல்லாப் பொருள்களிலும் வாழ்ந்து இயங்கிக் கொண்டிருந்தாலும், மிகவும் மகத்தான பொருள்களில் மிகச் சிறந்த அளவில் தம்மை மெய்ப்பித்துக் கொண்டிருக்கிறார். ரிஷிகளும், புத்தர்களும், தீர்க்கதரிசிகளும், இரட்சிப்பவர்களுமாகிய இவர்கள் யாவரும் பிரபஞ்ச ஆன்மாவின் தீவிரமான சுய விளக்கமேயாவர். இவர்கள் எவ்வப்பொழுது இப்பிரபஞ்சத்துக்குத் தேவைப்படுகிறார்களோ, அவ்வப்பொழுது தோன்றுவார்கள் என்று கீதை உறுதியளிக்கிறது.

கடவுள் நம் உள்ளேயே வீற்றிருக்கின்றார். அதனால் கர்மாவின் நியதி என்பது மனிதனின் இயற்கை

நியதியை ஒட்டியே செல்கிறது. அதைச் சார்ந்தே நிற்கிறது. ஒவ்வொரு வினாடியும் மனிதன் சோதனையில் ஆழ்த்தப்படுகின்றான். அவனது ஒவ்வோர் உண்மையான முயற்சியும் இறுதிப் பரம்பொருளைத் தேடும் பணியில் அவனுக்கு நலம் பயக்கும்.

இன்று நாம் எந்தக் குணத்தைப் போற்றி, எதை ஏற்று நாம் வளர்க்கிறோமோ, அக்குணமே வருங் காலத்தில் தொடர்ந்து நின்று கடவுளிடம் ஒருமைப்பாடு அடையும் வரை உதவியளிக்கும். ஆயிரம் ஆண்டுகள் கொண்ட கால அளவு ஒரு நாளாக எவர்க்கு இருக்கிறதோ, கடவுளாகிய அத்தகையவருடைய குழந்தைகள், ஒரே பிறவியில் முழுமையாக பூரணத்துவம் அடைய முடியவில்லையே என்ற காரணத்துக்காக மனம் ஒடிந்து போக வேண்டாம். பிறப்பும் மறுபிறவியும் இந்துக்கள் யாவராலுமே ஒப்புக்கொள்ளப்பட்டனவே யாகும்.

நம் ஒவ்வொருவருடைய உள்ளுணர்வும் மூன்று குணங்களுள் பகுக்கப்பட்டிருக்கிறது. அவை ஞான மார்க்கம் அல்லது அறிவுப்பாதை; பக்தி மார்க்கம் அல்லது நம்பிக்கைப்பாதை; கர்ம மார்க்கம் அல்லது பணி செய்தலும், தொண்டாற்றலும் ஆகியவையே. எண்ணம், உணர்ச்சி, நினைவு அல்லது கருத்துடைய மனம் ஒன்றுக்கொன்று தொடர்பின்றித் தனித்தனியாகப் பிரிந்து நிற்கும் காரணக் கருவிகள் அல்ல. ஆனால் அவை யாவும் அனுபவத்தால் வேறு வேறாகப் பிரித்தறியக் கூடிய அமிசங்களே.

ஒவ்வொன்றும் அம்முழுப்பகுதிக்கும் தன் பங்கை அளிக்கிறது. மற்றவற்றால் ஊடுருவல் செய்யவும் படுகின்றன. நேர்மையான அறிவு, நேர்மையான அவா, நேர்மையான செயல் இம்மூன்றும் ஒரு தொடராகவே கருதப்பட்டு வருகின்றன. இவற்றுள் முதலாவது நமக்கு

உண்மையை வெளிப்படுத்துகிறது. இரண்டாவது, அதற்கான ஆசையை வற்புறுத்துகிறது. மூன்றாவது, வாழ்க்கையே உருவாக்குகிறது.

நாட்டில் நிலவி வந்த தெய்வ வழிபாடுகள் அனைத்தையும் ஒப்புக் கொண்டு, இந்து சமயச் சிந்தனையாளர்கள் அவற்றைத் தெய்வ வழிபாட்டுக்குரிய உயர்ந்த வழிகளாகப் படிப்படியாக, அமைத்துவிட்டனர்; படிகள் அமைந்த அவ்வுயர்ந்த வழியே, தெய்வ சந்நிதானத்தை அடைய முயலும் சிறந்த வழியாகும்.

சிவபுராணத்தில் ஒரு பாடல் கூறுகிறது, 'மிகவும் உயர்ந்த நிலை என்பது கடவுளின் சந்நிதானத்தை இயல்பாகவே தரிசனம் செய்தல் ஆகும். அதற்கடுத்ததான இரண்டாம் நிலை என்பது தியானம் செய்தலும், அவரைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்துத் தெளிதலும் ஆகும். மூன்றாம் நிலை என்பது அப்பரம்பொருளின் சின்னங்களாகக் கருதப்படும் பொருள்களை வழிபடுதலும், அவரை நினைவுபடுத்தக் கூடிய சின்னங்களைத் தொடுதலும் ஆகும். நான்காம் நிலை என்பது சடங்குகளைச் சரிவரப் புரிவது. அதாவது தினசரி கர்மாக்களைச் செய்வது, புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செய்வது முக்கியனவாம்.' இதையே பாகவத புராணம்—

**''சர்வஸ்தரது துர்காணி, சர்வோபத்ரனி பஸ்பது!**
**சர்வஸ்தத் புத்திமப்நோது சர்வஸ் சர்வத்ரநந்தது!!''**

என்று விளக்குகிறது.

ரிக்வேதத்தில் விக்கிரக ஆராதனை காணப்படவில்லை. அத்தகைய ஆராதனை பிற்காலத்தில் வழக்கத்தில் கொண்டு வரப்பட்டதாகவே கருதப்பட வேண்டும்.

ரிக்வேதம் உண்டாகிய அந்த ஆதிகாலத்திலேயே, சமுதாயம் என்பது நம் உடலை இயக்கும் உறுப்புக-

ளாகிய தலை, கை, உடம்பு, கால்கள் என்பவற்றைப் போல ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டு வாழ வேண்டும் என்று அதில் குறிப்பிட்டுள்ளது. இவை நான்கும், நான்கு சாதிப் பிரிவினைகளை நிகர்ப்பதாகும். அச்சமுதாய முழுவதிலும் ஒவ்வொரு பிரிவினருக்கும் தத்தமக்குரிய இடம், உரிமைகள், கடமைகள் ஆக யாவும் இருந்தன.

எந்தப் பணியும் மிகச் சிறந்த பணியாகக் கருதப் பட்டு வந்ததால், இனத்தால் ஆணவம் ஏற்படுதலும், தனியாகப் பிரிந்து வாழ்வதும் அனுமதிக்கப்படவில்லை. சாதி எனும் சொல் பொறுப்புகளைக் குறிப்பிடுகிறதே யன்றி, அது உரிமைகளைக் குறிப்பிடவில்லை.

'இந்து தர்மம் என்பதன் இலட்சிய நோக்கு, எல்லா மனிதர்களையும் செந்தண்மை பூண்டொழுகும் அந்த ணர்களாக ஆக்க வேண்டும் என்பதும், எல்லோரையும் தீர்க்கதரிசிகளாக ஆக்க வேண்டும் என்பதுமேயாம். அதனால் அத்தீர்க்கதரிசிகள் உள்ளுக்குள் சிந்தனை யைச் செலுத்தும் ஆற்றலில் சுதந்தரம் பெறுகின்றனர். ஆன்மிகத்தினால் கடவுளிடத்தில் தொடர்பு கொள்ளும் ஆனந்தத்தைப் பெறுகின்றனர்.

இந்து மக்கள் யாவரும் வேதங்களையே தங்கள் சிறந்த சமயக் கோட்பாடாக ஒப்புக்கொள்ளுமாறு எதிர் பார்க்கப்படுகின்றனர். அவ்வேதங்கள் வாழ்க்கையின் நியதிகளையும் பிரபஞ்ச தத்துவங்களையும் உட்கொண் டிருக்கின்றன. வேதங்களின் மிக முக்கியமான பகுதியே உபநிஷதங்கள் ஆகும். இவை வேதங்களிலுள்ள கரடு முரடான சிக்கல்களை நீக்கி, ஒன்றாகத் தோற்றமளிக் கும் சிறந்த ஆன்மிகத்தால்—ஆன்மிக இயக்கத்தால்— உருவாக்கப்பட்டன. இதுவே இந்து சமயத்தின் அடித் தளம் அல்லது அஸ்திவாரம் ஆகும்.

இதற்குப் பிறகு ஏற்பட்ட இந்து சமயத்தின் வரலாறும் வளர்ச்சியும், உபநிஷத்துகளில் கூறப்பட்ட கருத்தின் அடிப்படைமீது எழுப்பப்பட்ட கட்டடமாக விளங்குகின்றன. சமய சம்பந்தமான கருத்துகள், பல புரட்சிகளையும் மகத்தான வெற்றிகளையும் கண்டிருந்தாலும், அவற்றின் மையக் கருத்துகள் ஐம்பது நூற்றாண்டுகளாக எம்மாற்றமுமின்றி ஒரே நிலையில் இருந்து வந்தன; இருந்து வருகின்றன.

# 19

**வே**தத்தைக் கண்டறிந்த அல்லது இயற்றிய ஆதி கவிகளில் பெண்களும் தலைசிறந்து விளங்கியுள்ளார்கள் என்று முன்பே கூறியுள்ளேன்.

ரிக்வேதத்தில் ஐந்தாவது அஷ்டகத்தில் விச்வவாரா என்ற பெண்மணியின் கவிதையும், எட்டாவது மண்டலத்தில் அபாலா என்ற மாதரசியின் கவிதையும் மக்களின் மனத்துக்கு மிக்க மகிழ்ச்சியூட்டுகின்றன.

கக்ஷீவத் என்ற மண்டலத்தில் பெண் கவிகளின் வரிசையே இருக்கிறது. அவர்களுள் 'கோஷ' என்பவள் மிகச் சிறந்தவள். அவள் அரசகுமாரி. வெகுகாலம் அவள் திருமணம் செய்து கொள்ளாமலே இருந்து கவிதை புனைவதிலேயே காலங் கழித்தாள்.

பிறகு அந்த கக்ஷீவான் என்ற அரசனின் மகளுக்கு—கோஷாவுக்கு அசுவனி தேவர்கள் மனதிற்குகந்த மணாளனைக் கொடுத்து அருள் புரிந்தார்கள். அவள் 'ஜகதீ' என்ற சந்தஸில் பல ரிக்குகள் எழுதினாள். அவை அத்தனையும் எளிமையுடனும் சீரிய அமைப்புடனும் மனதைக் கொள்ளை கொண்டன.

இன்னும் அநேக பெண்களின் கவிதைகளையும் ரிக் வேதத்தில் காணலாம்.

ரிக்வேத அநுக்ரமணியில் லோபாமுத்திரை என்ற பெண் கவியைப் பற்றிய குறிப்பு இருக்கிறது. கார்கி, வாசக்நவி, பிராதி தேயி என்ற பெண் கவிகளை, ஆசீவலாயினர் ரிஷிகளுக்குச் சமமாக குறிப்பிடுகிறார்.

கி. பி. 14-ம் நூற்றாண்டில் வாழ்ந்த கங்காதேவி என்ற அரசி 'மதுரா விஜயம்' என்ற மகா காவியத்தை இயற்றியிருக்கிறாள்.

மதுரவாணி என்ற கவி அரசி 17-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தஞ்சையில் ரகுநாத நாயகரின் சபையில் இருந்தாள். 14 சர்க்கங்கள் கொண்ட காவியத்தில் இவள் தன் பெயருக்கு ஏற்ற முறையில் மதுரமாக ராமா யணத்தைச் சுருங்கக் கூறியிருக்கிறாள்.

திருமலாம்பா என்ற பெண் கவி விஜயநகரத்தில் அரசராக இருந்த கிருஷ்ணதேவராயர் சபையில் இருந் தார். வாதாம்பிகா பரிணயம் என்ற சிறந்த காவியத்தை இயற்றியிருக்கிறார்.

கி. பி. 17-ம் நூற்றாண்டின் நடுவில் வாழ்ந்த வைஜயந்தி என்பவள், முரீபட்டர் என்பவரின் மகள். பரித்பூர் மாவட்டத்தைச் சேர்ந்தவள். அவள் கிருஷ்ண நாதர் என்ற ஸம்ஸ்கிருத பண்டிதரை மணந்து, அம் மொழியை மேலும் பயின்றதுடன் மீமாம்ஸ சாஸ்திரத் தையும் நன்றாகக் கற்றார்.

லகினா டாகுராணி என்பவள் மிதிலையைச் சேர்ந்த புகழ் பெற்ற கவி. இவளுடைய சில சுலோகங்களை அடிக்கடி வித்வான்கள் குறிப்பிடுவதுண்டு.

திரிவேணி, லக்ஷ்மி, சுந்தரவல்லி இவர்கள் 19-ம் நூற்றாண்டில் தக்ஷிணபூமியில் தோன்றிய கவிகள். அநேக அழகான ஸ்லோகங்களை யாத்திருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் வேதத்தையும் ஸம்ஸ்கிருத மொழியையும் போஷித்து வந்துள்ளார்கள்.

அப்பொழுதெல்லாம் இந்து மதம் என்றே கிடையாது. இந்துக்கள் பேசும் வடநாட்டு மொழிகளிலோ, தென்னாட்டு மொழிகளிலோ, பரந்த சமய இலக்கியம் மிகுந்த ஸம்ஸ்கிருதத்திலோ காணும் சமய நூல்களிலோ 'இந்து' என்ற சொல்லே கிடையாது.

மேனாட்டினர்தான், இந்தியாவின் பல சமயங்களையும் தொகுத்துக் காட்டும் 'இந்து' என்ற சொல்லை முதன் முதல் வழங்கினார்கள்.

இந்து என்றால், சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம், காணபத்தியம், சௌரம் இவற்றுள் எந்த வழிபாட்டைக் கடைப்பிடிப்பவரையும் குறிக்கும்.

சரித்திரக் கண்கொண்டு இந்திய மதங்கள் அனைத்தையும் ஆராய்ந்தால், இந்த மதம் அமைந்திருக்கும் விதத்தைத் தெளிவாக உணரலாம்.

இலக்கியச் சான்றை ஆதாரமாகக் கொண்டு சரித்திரம் எழுதியவர்கள், ரிக்வேதம் பழைய நூல் என்று கூறுவார்கள். ரிக்வேதம் முதலான நான்கு வேதங்களும் கூறும் மதத்தை, வேதமதம்—பிராம்மண மதம் என்றே குறிக்கிறார்கள்.

அதையடுத்து எழுந்தவை ஆர்ஹதம் (ஜைனம்), பௌத்தம் ஆகியவையாகும். இந்த மதங்களின் கோட்பாடுகள் இந்து மதத்தை வளப்படுத்தின என்ற உண்மையை எவரும் மறுப்பதற்கில்லை.

இதிஹாசங்கள், புராணங்கள், மற்றும் சமய நூல்கள், அறுவகைத் தத்துவ நூல்கள் இவையனைத்தும் கூறும் உயரிய கருத்துக்களும் இந்துமதத்தை வெகுவாக வளப்படுத்தியுள்ளன.

இந்த மதத்தின் ஆறு பிரிவுகளையும் (சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம், காணபத்யம், சௌரம்) ஒன்று சேர்ப்பவை 'மறை' என்னும் வேத மாகும். தெய்வத்தை உயர்த்திக் காட்டும் நோக்கத் துடன் 'வேதத்திற்கும் எட்டாத இறைவன்' என்று கூறும் இடங்கள் சமய நூல்களில் காண்கின்றன. என்றா லும், வேதங்களையே அனைவரும் பெரிதும் போற்றி வந்திருக்கிறார்கள்.

வேதங்கள் எல்லா மதங்களுக்கும் எல்லாக் கொள்கை களுக்கும் உடன்பாடாக இருப்பவை. இவை மிகவும் உயரிய—மேலான—பிரமாணமாகவும் அமைந்துள்ளன. எனவே, இவற்றால் பிணைப்புண்டு இந்திய சமயங்கள் ஒன்றோடோன்று தொடர்பு பெறலாயின.

வேதங்கள் அவற்றுள்ளும் குறிப்பாக உபநிஷதங்கள் —சிறப்பித்துக்கூறும் பரம்பொருளான பிரம்மம், அவரவர் கடவுளையே குறிப்பதாக நேரிடையாகச் சுட்டியும், சுட்டாமல் சுட்டியும் காட்டுபவை அறுவகைச் சமயங் களாகும்.

உருவற்ற பரம்பொருளாக அவனை உய்த்துணர்ந்து உயர்நிலை எய்துபவரும் இந்துக்களே. மனித உறுப்புக் களுடன் தோற்றம் அளிக்கும் திருவுருவங்களில் இறைவ னைக் காண்பவரும் இந்துக்களே!

ஒவ்வொருவரும் அவரவருடைய தகுதிக் கேற்றபடி இறைவனை உணர்ந்து ஏத்தும் பேறு இந்துக்களுக்கு மட்டுமே உண்டு. தன்னையே இறைவனாகப் பாவிக் கும் 'ஸோகம் பாவனை' ஆகிய உயரிய சாதனையும்

இந்துக்களின் கடவுள் கொள்கைக்கு உள்ள இன்னொரு தனிப் பெரும் நிலையாகும்.

அறுவகையில் ஏதாவதொன்றைக் கடைப் பிடிக்கும் இந்துக்கள் அநுஷ்டிக்கும் சமயக்கிரியைகளில் பெரும்பாலானவை—வைதிக வேதங்களில் கண்ட கிரிகைகளையே அடிப்படையாகக் கொண்டு கிளைத்தெழுந்தவையாகும். இந்த மதங்கள் ஒன்று பட்டு ஒரு மதமாகத் தோன்றுன்றன.

இந்துக்கள் பல தெய்வங்களை வணங்கினாலும் வழிபடுவோரின் ஒவ்வொருவரும் தனிக் கடவுள் கொள்கையை கொண்டிருப்பர்.

சைவரின் முழுமுதற் கடவுள்—சிவன்; வைஷ்ணவரின் முழுமுதற் கடவுள்—விஷ்ணு. ஒரே நாட்டில், ஒரே இடத்தில்—பல தெய்வ வணக்க மதங்கள் இயங்குங் காரணத்தால் 'சமய வேற்றுமை கொண்டோர் ஒருவரை ஒருவர் சகித்துக் கொள்ளும் ஆற்றல்' என்று மேனாட்டினர் வியந்து கூறும் மனப்பான்மை தோன்றி, இந்து மதத்தின் உயிர்நாடியாக இன்றும் விளங்குகிறது.

இந்த 'சகிப்புத்தன்மை' மனப்பான்மை தோன்றிய விதம் பற்றிப் பல அறிஞர்கள் பலவிதமாகக் கூறினாலும் 'உண்மைப் பொருள் ஒன்றே!' எனும் ரிக்வேத வாக்கியத்தில் இதன் அடிப்படையைக் காணலாம்.

நன்றாக ஆழ்ந்து சிந்தியுங்கள். பல மதங்கள் ஒருமித்து இசைந்தும், பிற மதங்கள் புகட்டும் உயர் கருத்தை ஏற்றுத் தனதாக்கிக் கொண்டும் பரந்து விரிந்து இயங்குவது இந்து மதம்.

இது காட்டும் நெறி உலகின் ஏனைய மதங்கள் கூறும் நெறிகளிலெல்லாம் உள்ள சிறந்த அம்சங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு நிற்கிறது.

பலபட விரிந்து காணும் பல பொருள்களாயிருந்தாலும் அவற்றில் பன்மை காணாது ஒருமையே காண்பது நம் சிறந்த பண்பாடாகும்.

இதை விளக்குவதற்கெழுந்த இந்தியத் தத்துவ நூல்களெல்லாம் அடிப்படையாகக் கொண்டிருக்கும் கருத்தை மிகப் பழைய நூலான ரிக்வேதமே,

''ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி''

என்றும்,

''ஆநீத் அவாதம் ஸ்வதயா ததேகம்''

என்றும் கூறியுள்ளது.

இந்துக்களின் சகிப்புத்தன்மைக்கும், ஒருவனே தேவன் என்ற கொள்கைக்கும் எடுத்துக்காட்டாக இந்த உண்மை நிகழ்ச்சியைப் பாருங்கள்.

அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர் சிவபாலன். ஆனால் அவரை மரியாதையாக 'சிவபால் சார்' என்றே சொல்வார்கள். மிகவும் தெய்வபக்தியுள்ளவர்; நேர்மையானவர். அந்தப் பள்ளியில் புதிதாக ஒரு பெண்மணி 'டீச்சராக'ச் சேர்ந்தார்கள். ''அம்மா! உங்கள் பெயரைப் பார்த்தால் நீங்கள் கிறிஸ்தவர்களாய் இருக்க வேண்டுமே'' என்றார். ''ஆமாம் சார், நான் கிறிஸ்தவப் பெண்தான்'' என்றாள்.

''அப்படியானால் இன்று காலையில் ஜபம் செய்தீர்களா? உங்களுக்குக் கிடைத்த வேத வசனம் என்ன'' என்றார்.

அதற்கு அந்த அம்மாள் வெட்கத்துடன் ''சார்! ஜபம் செய்கிற வழக்கம் எனக்கு இல்லை. அந்த அநுபவத்தில் நான் பழகவில்லை'' என்றாள்.

“ஏன் அப்படி? நாளையிலிருந்து ஜபம் செய்யப் பழகுங்கள்” என்று கேட்டுக் கொண்டார்.

ஒரு வாரத்திற்குப் பிறகு மறுபடியும் அந்த டீச்சரைச் சந்தித்து, ஜபத்தில் பழகினீர்களா? வேதம் வாசித்து வருகிறீர்களா?” என்று கேட்டார் சிவபாலன்.

“என்னிடம் வேதப் புத்தகமும் இல்லை. அதைப் படிக்கிற பழக்கமும் இல்லை” என்று கைவிரித்தாள் அந்த அம்மணி.

அடுத்த நாள் சம்பள தினம். “அம்மா! உங்களுக்கென்று ஒரு தமிழ்ப் பைபிள் வாங்கியிருக்கிறேன். அந்த விலைக்கான தொகையைப் பிடித்துக்கொண்டு உங்கள் சம்பளத்தைத் தருகிறேன். இதோ அதற்கான விலைப் பட்டியல்” என்று கொடுத்தார்.

அந்த ‘டீச்சரும்’ முழுச் சம்பளத்துக்குக் கையெழுத்திட்டு அதை அன்புடன் வாங்கிக் கொண்டார்.

பைபிளை அந்த அம்மாளின் கையில் கொடுத்து, “நாள்தோறும் பைபிள் வாசிக்கத் தவறாதீர்தள்” என்று கட்டளையிட்டார்.

அந்த டீச்சரும் அன்றையிலிருந்து—அவருக்குப் பயந்து கொண்டே—நாள்தோறும் பைபிள் வாசிக்கத் தொடங்கினாள். அவள் உள்ளத்தில் தெய்வ அனல் வீசத் தொடங்கியது. சிவபாலன் அதைக் கேட்டு அக மகிழ்ந்தார். அந்தப் பள்ளியை விட்டு வந்த பின்னும் பைபிள் வாசிப்பதும், ஜபம் பண்ணுவதும் அந்த டீச்சரின் வாழ்க்கையில் தவிர்க்க முடியாத வழக்கமாகி விட்டன.

சிவபாலன், அனைத்து மதத்திலும் தன் கடவுளையே கண்டார். கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில்

என்ன சொன்னார்? ‘‘யாரை எந்த உருவத்தில் தொழு தாலும் அது என்னையே தொழுவதாகும்’’ என்று சொல்லவில்லையா? அதனால் யாராயிருந்தால் என்ன? எந்த மதத்தைச் சார்ந்தவராய் இருந்தால் என்ன, அவர் இறைபக்தி உள்ளவராய் இருந்தால் போதும்! என்பதே சிவபாலனின்—இந்துவின்—கொள்கையாயிற்று.

நமக்குக் கடவுளிடம் பக்தி இருக்கிறது என்பதனா லேயே ‘நாம் உண்மையான பக்தர்கள்’ என்று நினைத்துவிட முடியாது. அசைக்க முடியாத நம்பிக்கை இருக்க வேண்டும்.

நம்மைப்பற்றிய விஷயங்களை ‘அவனே’ கவனித் துக் கொள்வான் என்ற உறுதி நமக்கு இருக்கவேண்டும். அது இருந்தால் போதும். தக்க சமயத்தில் அவன் நமக்கு அவசியம் அருள் செய்வான். இதில் சந்தேகமே இல்லை.

சிறிது காலம் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு குழந்தைகளையும் இல்லற இன்பம் துய்த்தவர்தான் அந்த யோகீஸ்வரர். ஆனால் அவர் லௌகிக சுகங் களில் மூழ்கிவிடவில்லை. பற்றை நீக்கித் தவத்தின் மூலம் ஞானம் பெற்றுத் தாமும் கரையேறிப் பிறருக்கும் நல்லுபதேசம் செய்து வழிகாட்டி வாழ்ந்தார்.

ஒரு தடவை அவர் கங்கைக்கரையில் இருந்த பர்ண சாலை ஒன்றில் தங்கினார். வானப் பிரஸ்தாசிரமம் எப்படி இருக்கும் என்று பரீட்சிப்பதற்காகவே அவர் அங்கே தங்கினார். கையில் ஒரு காசுகூட வைத்துக் கொள்ளவில்லை. ஆனால் உடனிருந்த அவரது நண் பர்கள் சிறிது பணம் வைத்துக் கொண்டிருந்தனர்.

‘‘நண்பர்களே! நாம் வானப்பிரஸ்த வாழ்க்கை நடத்துவதற்காக இங்கே வந்துள்ளோம். அதனால் நாம் கையில் காசு பணம் வைத்திருத்தல் கூடாது. ஆண்ட

வன் நம்மைக் கவனித்துக்கொள்வான்'' என்றே இருக்க வேண்டும். நீங்கள் கையில் பணம் வைத்துக் கொண்டிருப்பதால், உங்கள் வசதிகளை நீங்களே பார்த்துக் கொள்வீர்கள் என்ற கருத்து புலனாகிறது. அதாவது நீங்கள் ஆண்டவனை அண்டியிருக்காது உங்கள் பொறுப்பிலேயே வாழ நினைத்திருப்பது தெரிகிறது. இதனால் உங்களுக்குப் பரமேசுவரனிடம் பரிபூரண நம்பிக்கை உண்டாகவில்லை என்றாகிறதல்லவா! அது உங்கள் பக்திக் குறைவைக் காட்டுகிறதே!

அதனால் உங்கள் கையிலுள்ள பணத்தை கங்கையில் எறிந்துவிட்டு, ''பரமேஸ்வரன்மீது பாரத்தைப் போட்டு, அவன் கவனித்துக் கொள்வான் என்று நம்பிக்கையோடிருங்கள்'' என்று கூறினார்.

உடனே அவர்கள், அவர் சொற்படி கையிலிருந்த பணத்தையெல்லாம் கங்கையில் எறிந்து விட்டார்கள். அப்பொழுது அந்த யோகீஸ்வரரின் முகம் அன்றலர்ந்த தாமரைபோல் மலர்ந்தது.

அனைவரின் மனமும் பரிசுத்தமாயிற்று. பகவத் தியானத்தில் ஆழ்ந்து விட்டார்கள். இருந்தாலும் 'பசி' யாரை விட்டது! நேரம் ஆக ஆக பசி 'பகபக'வென்று பிடுங்கித் தின்றது. யோகீஸ்வரரோ இன்னும் சமாதி நிலையில் இருந்தார். அவரை நெருங்கிச் சொல்ல யாருக்கும் துணிவில்லை.

அப்பொழுதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. யாத்திரிகர்களுடைய வசதிகளைப் பார்வையிடும் அதிகாரி அப்பொழுது அங்கே வந்தார். அந்த யோகீஸ்வரரைப்பற்றி அவர் கேள்விப்பட்டிருந்தாரே யொழிய, அன்றுதான் முதன் முதல் தரிசிக்கிறார் அவர். அவருடைய முகத்தில் வழிந்த தேஜசும், வடிவமும் அந்த அதிகாரியை மிகவும் கவர்ந்தது; அளவற்ற பக்தி பிறந்தது.

உடனே அவர் அங்கே தங்கியிருந்த எல்லோருக்கும் தேவையான உணவுக்கு ஏற்பாடு செய்தார். அத்துடன் அவர்கள் அங்கே எத்தனை நாட்கள் தங்கியிருந்தாலும் அதுவரைக்கும் அவர்களுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் கிடைக்கும்படி ஏற்பாடும் செய்துவிட்டார்.

கடவுளை உறுதியாக நம்பியவர்களுக்கு ஒரு நாளும் குறைவு உண்டாகாது.

## 20

சூரியனே உயிருக்கு ஆதாரம் என்பது நவீன விஞ்ஞானம். சாந்தோக்கிய உபநிஷத்தும் இப்படியே கூறுவதுடன் வேறு சில நுட்பங்களையும் சொல்கிறது.

"சூரியன் இல்லாமல் உலகமோ பயிர்களோ வாழ இயலாது. சூரியகிரணங்களால்தான் நாம் வாழ்கிறோம்" என்று ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் கூறுகிறார். இவர் சமீபத்தில் வாழ்ந்த பிரபல விஞ்ஞானி. சூரியனைப்பற்றிய ஆராய்ச்சிகள் பல செய்து ஓர் அருமையான நூலை வெளியிட்டிருக்கிறார்.

சூரியனுடைய ஒளியும் கிரணங்களும் எந்த வகையில், எவ்வளவு வேகத்துடன் பூமியை வந்தடைகின்றன. நாள் ஒன்றுக்கு சூரியன் எவ்வளவு சக்தியைப் பூமிக்கு விடுகிறான். இந்த விவரங்களையெல்லாம் அவர் கணக்கிட்டுத் தருகிறார்.

இதெல்லாம் சரி; சூரியனுக்கே ஒளி தரும் 'ஒளி' எது? அதை நாம் சிந்தித்துப் பார்ப்போம். நம் பகவத்பாதர் சங்கரரின் சௌரமும் வேதங்களும் இதற்கு விடை கூறுகின்றன.

இந்தியப் பண்பாட்டில் சூரிய நமஸ்காரத்துக்குத் தனி உயர்வு உண்டு. இந்திய மக்கள் சூரிய சந்திரனையும் இயற்கையையும் தேவரையும் உபாசிப்பார்கள். இன்னும் கிராமங்களில் குளக்கரைகளில் வர்ணாசிரம வேற்றுமையின்றிச் சூரியனை மக்கள் வணங்கியும் துதித்தும் பூஜித்தும் ஜபதபங்களுடன் அர்க்கியம் விட்டும் அவரவருக்கு ஏற்ற வகையில் வழிபடுவதை நாம் காண்கிறோம்.

சிலர் சூரிய தரிசனம் செய்யாமல் உணவு கொள்வதில்லை என்ற விரதத்தை மேற்கொள்வதும் உண்டு.

சாம வேதத்தைச் சார்ந்த சாந்தோக்கிய உபநிஷத் மூன்றாவது காண்டம், சூரியோபாசனைப் பற்றியும் அழகிய முறையில் விளக்கம் தருகிறது. நம் விஞ்ஞானி கூறுவதுபோல் 'சூரியனே உலகுக்கும் உயிர்களுக்கும் ஆதாரம்' என்று இந்த உபநிஷத் கூறுகிறது.

இதற்கு மேலும் ஒரு படி சென்று 'சூரியன் ஒரு நாளும் ஒளி மங்காமல் உயிர்களைக் காக்க வேண்டுமானால், அதற்கு வேண்டிய முயற்சிகளையும் உயிர்களே செய்யவேண்டும்' என்று திட்டமாகச் சட்டமிடுகிறது.

சூரியனைப் பிரம்மம் என்று கூறலாம். ஏனெனில், உலகத்திலுள்ள உயிர்களைப் பட்சபாதமில்லாமல் ஒரே நிலையில் அவன் காத்து வருகிறான். அவனுக்கு உதயமோ அஸ்தமனமோ இல்லை.

உலகத்தின் ஒவ்வொரு பாகமும் அவனுக்கு முன்பு தோன்றி மறைவதனால், சூரியன் உதித்து மறைவது போன்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது.

நான்கு வேதங்களும் ரிக்குக்களால் நிறைந்தவை. ரிக்குகள் மந்திரங்களாகும். அம்மந்திரங்கள் வேள்வி களில் ஒலிக்கின்றன.

சாம வேதத்தைப் பாடுகிறார்கள். முறைப்படி ஓதும் வேத மந்திர ஒலிகள் சூரியனை அவசியம் அடை கின்றன. நான்கு வேதங்களின் ஒலியும், இதிகாச புரா ணாதிகளின் ஒலியும் சூரியனின் நான்கு புறங்களையும் அடைந்து உயர்வு பெறுகின்றன.

ஹோமங்களின் வாயிலாக நாம் அளிக்கும் பால், தயிர், நெய் முதலான உணவுப் பொருள்கள்—சிலர் எண்ணுவதுபோல்—வீணாவதில்லை. இவையெல்லாம் தீயினால் பக்குவம் செய்யப்பெற்று அமுதங்களாகச் சூரியனை அடைகின்றன.

இவற்றைப் பெற்ற சூரியன், சம்சாரத்துக்குத் தேனடை போன்றவனாகத் திகழ்கிறான். ஆரா அமுத னாக வர்ஷிக்கிறான். வீரியம், வித்தை, பலம், மேதை ஆயுள், ஆரோக்கியம், ஐசுவரியம் ஆகிய அனைத்தை யும் அளிக்கவல்ல வள்ளலாக விளங்குகிறான். இவை மக்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்விக்கத் தனித் தனிக் கிரணங்களாக உருப் பெற்றுப் பூமியை வந்தடை கின்றன.

சூரியோதயத்துக்கு முந்திய நேரத்தில் கண்ணுக்குச் சூரியன் புலப்படாவிட்டாலும், நிறைந்த அவனுடைய புஷ்டியான கிரணங்கள் பூமிக்குப் பாய்ந்து வரத் தொடங்குகின்றன. இவை முக்கியமாகத் தீர்த்தங் களிலே பாய்ந்து பயனைத் தரக்கூடியவை.

மக்கள் அதனால்தான் அதிகாலையில் எழுந்து நீராடுகிறார்கள். இந்தக் கிரணம் தேகத்தை நோயின் றிக் காக்கக்கூடியது. சூரிய ஒளி தோன்றிப் பலபல

வென்று பொழுது புலரும் நேரத்தில், மக்களுக்கு வாக்கு வல்லமையையும், மேதையையும் அளிக்கவல்ல கிரணங்கள் வீசுகின்றன. வேதங்களும் கீதங்களும் அதனால் தான் இந்த நேரத்தில் ஒலிக்கின்றன. அவற்றை இந்த நேரத்தில் பயிலுவதனால் மிகுந்த பயனைப் பெறலாம்.

சூரியோதயத்துக்குப் பிறகு முற்பகலில் வீசும் கிரணங்கள், மிகுந்த வலிமையைப் பறவை இனங்களுக்கு அளிப்பவை. சுயேச்சையாக எதையும் செய்ய வலிமையை அளிக்கவல்ல நேரம் இது. பறவை இனங்கள் இதனால்தான் இந்த நேரத்தில் அதிகப் பிரயாசையின்றிப் பறந்து, தங்களுடைய செயல்களில் ஈடுபடுகின்றன.

உச்சிவேளையில் சூரியன் வீசும் கிரணங்கள், தேவர்கள் நல்ல பலனைச் சூரியனிடமிருந்து பெறச் செய்பவை. இந்த நேரத்தில் தேவதாராதனை செய்தால், நாம் நல்ல பயனைப் பெறுவோம். தேவர்கள் மகிழ்ச்சியுடன் நிறைந்திருக்கும் நேரம் இது. இப்பொழுது தான் அவர்களை உபாசிக்க வேண்டும்.

பிற்பகலில் வீசும் கிரணங்கள், தாயின் கர்ப்பத்தைப் போஷிப்பவை. கரு கீழே விழாமலும் சிதறாமலும் அதைத் தாங்கி இந்தக் கிரணங்கள் வளர்க்கின்றன.

மாலை நேரத்தில், சூரியன் தன் கிரணங்களை ஒடுக்கிக்கொண்டு வேறு பக்கம் திரும்புகிறான். இதுதான் காட்டு விலங்குகள் இரை எடுக்க வெளியில் வரும் நேரம். இப்பொழுது வீசும் கிரணங்கள் விலங்குகளுக்குத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளக்கூடிய புத்தியையும் தந்திரத்தையும் வளர்ப்பவை.

மலைவாயில் நெருப்பு உருண்டைபோல் கிரணங்களற்றுத் தோன்றும் சமயத்தில்தான் பித்ருக்களுக்கு வேண்டிய உதவியைச் செய்பவனாகச் சூரியன் திகழ்கிறான். சிராத்தம், தர்ப்பணம் முதலியவற்றில் அளித்த

பிண்ட உதகங்களைச் சேர்த்து, அவர்களுக்கு அளிக்கிறான்.

இந்த அரிய விஷயங்கள் அனைத்தும் அழகிய முறையில் சாந்தோக்கிய உபநிஷத்தில் காண்கின்றன. ஆகவே, மக்களும் உயிரினங்களும் உலகத்தில் மகிழ்ந்து சுகமாகவும் அமைதியாகவும் வாழ வேண்டுமானால், கண்கண்ட தெய்வமாகிய சூரியனை உபாசிப்பதே வழி என்றும் அனைவரும் அவனை உபாசித்தே ஆகவேண்டும் என்றும் அறிகிறோம்.

வாழ்வுக்குத் தேக பலம், மனோபலம், பித்ரு பலம், தேவ பலம், விதி பலம் எல்லாம் வேண்டும். உயிர்கள் சுகமாக வாழ்வது தான் உலகம் வாழ்வது என்பது "வேள்விகள் தோன்றியது மக்களுக்காக; மக்கள் தோன்றியது வேள்விகளுக்காக" என்கிறது தைத்திரீய உபநிஷத். நாம் வகையாக வாழ்ந்தால் சூரியன் வாழ்கிறான். சூரியன் வாழ்ந்தால் நாம் வாழ்கிறோம்.

நம் ஆசாரியர் லோக சங்கரர், 'உலகம் சூரியனை உபாசிக்க வேண்டும்' என்பதை உணர்த்தவே, அவர் தம் ஷண்மதங்களில் சௌரத்தையும் முக்கியமாக நிறுவியுள்ளார் என்பதை அனைவரும் உணர வேண்டும்.

சூரியனே பிரம்மமாகிற பொழுது, அப்பிரம்மமே காய்த்ரி மந்த்ரத்தின் நடுநாயகமாக விளங்குகின்றது.

பாரத நாட்டின் பழம் பெரும் மந்த்ரம் எவ்வளவு பரந்த கோட்பாடு. இது சிறந்த பயனையும் விளைவிப்பது என்பது குருதேவர் ரவீந்திரர் விளக்கும் முறையே அருமையானது.

தம் சாந்திநிகேதன் ஆசிரமத்து மாணவர்கள் இதை மறவாமல் தியானித்து வரவேண்டும் என்று அக்கறையுடன் கவனித்து வந்தார் அவர்.

ஒரு சமயம் தம்மைத் தேள் கொட்ட, வலியின் வேதனையால் தாம் துடிக்கும்பொழுது காயத்திரி மந்த்ரத்தை 108 தரம் மனதிற்குள் ஸ்மரித்ததாகவும், முடிப்பதற்குள் வலி நீங்கி விட்டதாகவும் தம் கட்டுரை யொன்றில் குறிப்பிடுகிறார்.

பாரத நாட்டிலே ஆத்மிக விழிப்புக்கென்று ஏற்பட்ட மந்திரம், மிகமிக எளிதானது. அதை ஒரே மூச்சில் உச்சரித்து விடலாம். அதுவே காயத்ரி மந்த்ரம்.

ஓம் பூர் : புவ : ஸ்ஸுவ
ஓம் தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி ।
தியோ யோநம : ப்ரகோத யாத் ॥

'ஓம் பூர் : புவ : ஸ்ஸுவ' காயத்ரி மந்த்ரத்தில் இந்தப் பகுதியை 'வ்யாஹ்ருதி' என்பர். இச்சமஸ்கிருதச் சொல்லுக்கு 'நாலு திசைகளிலிருந்தும் ஒன்று சேர்த்துக் கொண்டு வருதல்' என்று பொருள்.

முதலில் பூலோகம், புவர்லோகம், ஸ்வர்லோகம் என்று கூறப்படும் மூன்று உலகங்களையும், அதாவது உலகம் அனைத்தையும் ஒன்று சேர்த்து, உள்ளத் திரையில் கொண்டு வரவேண்டும். ''நான் குறித்த ஒரு நாட்டை மட்டும் சேர்ந்தவன் அல்ல. உலகு முழுவதற்குமே சொந்தமானவன். உலகம் முழுமையுமே என் வாசஸ்தலம்' என்ற உணர்வு கொள்ளவேண்டும்.

அதோடு 'எனக்குக் கிட்டியிருக்கும் இந்த அரண்மனை வாழ்வுக்குக் குறுக்குச் சுவாகளாக மட்டுமே மற்ற உலகங்கள் திகழ்கின்றன' என்ற எண்ணத்தையும் நெஞ்சிலே நிறுத்திக் கொள்ளவேண்டும்.

இப்படி உண்மையான இந்திய மக்கள், நாள் தோறும் ஒரு தடவையாவது தங்களைச் சூரியன், சந்திரன், பிற கோள்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றினிடையே நிறுத்திப் பார்ப்பார்கள்.

இந்தப் புவியின் எல்லைக்குள் அடங்கிக் கிடக்காமல் வெளியே வந்து உலகம் அனைத்துடனும் தங்கள் தொடர்பை நிலைநாட்டிக் கொள்வார்கள்; கொள்வதாகக் கருதுவார்கள்.

தேக ஆரோக்கியத்தை நாடும் மனிதன், தான் அடைந்து கிடக்கும் குறுகிய அறையிலிருந்து வெளியே வந்து, தினமும் காலை மாலை நேரங்களில் விஸ்தாரமான திறந்த வெளியிலே நல்ல காற்றைச் சுவாசிக்க விரும்புகிறான் அல்லவா! அதே போலத்தான், சம்பூர்ண உலகத்தில் நின்று உள்ளத்து உணர்வையும் அறிவையும் தூண்டி விட்டுக் கொள்கிறார்கள் உண்மையான பாரத வாசிகள்.

எண்ணற்ற தாரகைகள் இமைத்திருக்கும் இந்த உலகில் நின்று கொண்டு அவர்கள் என்ன மந்த்ரத்தை உச்சரிக்கிறார்கள்?

**''தத் ஸவிது; வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி''**

''பரந்து கிடக்கும் ஆழிசூழ் உலகைப் படைத்த பரம்பொருளின் அரும்பெருஞ் சக்தியைப் போற்றுவோம், புவி அனைத்தும் கண்கூடாகத் தோன்றும் சர்வலோகேசுவரனான பகவானின் சக்தியை நாம் வாழ்த்தி வணங்குவோம்' ஏனெனில் உலகம் முழுவதும் இந்தக் கணமும், ஏன் எந்தக் கணமும் அவனது சக்தியினால்தான் இடையறாமல் இயங்கி வருகிறது.

பார்வையைக் கொண்டோ பகுத்தறிவைக் கொண்டோ, எந்த உலகின் முடிவை அறுதியிட்டு

நம்மால் காணமுடியவில்லையோ, அது அவனது சக்தியினால்தான் உந்தித் தள்ளப்பட்டு நடந்து வருகிறது. அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற பழம் பெருங் கொள்கையை நிரூபித்தும் வருகிறது.

'தியோ யோ ந:'

எந்த இறைவன் அருள் கூர்ந்து நமக்கு அறிவை வழங்கி, அதைத் தூண்டி விட்டு நடத்துகிறானோ, அவனை, அவன் கொடுத்த அந்தப் புத்தியின் உதவியைக்கொண்டே ஆய்ந்து அறிந்து நாம் வணங்க வேண்டும்.

நாம் கதிரவனின் ஒளியை நேரில் எப்படிப் பார்க்கிறோம்? கதிரவன் எந்தக் கிரணங்களை நம்மிடையே அனுப்புகிறானோ, அதே கதிர்களின் ஒளி கொண்டு தானே நாம் அவனைக் காண்கிறோம்?

உலகம் அனைத்தையும் உண்டாக்கிய முதலோன் நம்முள்ளே இரவு பகல் எந்நேரமும், அறிவின் ஆற்றலைத் தூண்டி விட்டுக் கொண்டிருக்கிறான். அவனெதிரில் அவனது ஆட்சிக்குள் அடங்கிய இந்தப் புவியில் நம்மை நாமே தெரிந்து கொள்கிறோம். நம்மைத் தாங்கி நிற்கும் இந்த உலகத்தில் ஏனைய செயல்களையும் புரிந்து கொள்கிறோம். நமக்குக் கிட்டியிருக்கும் அந்தப் புத்தி சக்தி அவன் அளித்தது. அதன் மூலமாகவே, நாம் அவனுடைய திவ்ய சக்தியைப் பிரத்தியட்சமாக நம்முன்னே, உள்ளத்துறையும் பெருமானாகக் காண முடியும்.

வெளியுலகம், நம்முள்ளே ஒளி வீசும் அறிவு இரண்டும் ஒரே சக்தியினால் உண்டாக்கப்பட்டு வளர்ச்சி பெற்றவை. இந்த உண்மையை நாம் தெள்ளத் தெளியத் தெரிந்து கொண்டு, உலகத்தோடு சச்சிதானந்த

சொருபமான இறைவன் கொண்டுள்ள இடையறாத நெருங்கிய தொடர்பை உணர்ந்தறிகிறோம். குறுகிய நோக்கம், தன்னலம், அச்சம், துக்கம் ஆகிய உபாதைகளினின்று விடுதலை பெறுகிறோம்.

இப்படி நாம் காயத்ரி மந்திரத்தின்மூலம், வெளியோடு உள், உள்ளோடு உள்ளத்துள் உறையும் பெருமானின் தொடர்பு ஆகியவற்றைப் பெறுகிறோம்.

பழம் பெரும் பொருளான பரப்பிரம்மத்தைத் தியானிப்பதற்குப் பழைய காலத்து இந்த வைதிக முறை எப்படி மகத்தானதாகவும் உதார நோக்கம் படைத்ததாகவும் இருக்கிறதோ, அப்படியே நடைமுறைக்கு ஏற்றதாகவும் இருக்கிறது.

இதில் எவ்விதமான அநாவசியப் பகுதியும் இடம் பெறவில்லை. செயற்கை முறையும் புகவில்லை. வெளியுலகம், உள்ளறிவு இந்த இரண்டையும் தேடிக் கொண்டு நாம் எங்கும் வெளியே போகத் தேவையில்லை. இந்த இரண்டையும் விட்டால் நம்மிடம் வேறு என்ன இருக்கிறது!

இந்த உலகத்தையும் அறிவையும் ஆண்டவன் தனது இடையறாத, அலுப்புச் சலிப்பில்லாத சக்தியின் மூலம் நாள்தோறும் தூண்டி விட்டுக்கொண்டே இருக்கிறான். அந்த உண்மையை உணர்ந்து அதற்கேற்ப ஒழுகுவதனால், இறைவனின் ஒருமையோடு நிரந்தரமான நற்பெரும் உறவு கொள்ளமுடியும் என்பது திண்ணம்.

பாரதத்தின் ஆத்மிக விழிப்புக்கென்றே ஏற்பட்டுள்ள இந்த அரும் பெரும் மந்திரத்தால், எந்தவிதமான அகட விகட சாமர்த்தியங்களுக்கோ, தர்க்கவாதங்களுக்கோ, தார்மிகமான அபிப்பிராய பேதங்களுக்கோ,

அல்லது வேறு விதமான சண்டை சச்சரவுகளுக்கோ சிறிதும் இடம் இல்லை.

இதில் தனிப்பட்ட எண்ண வரம்புகளும் குறுகிய நோக்கங்களுங்கூட இடம் காணமுடியாது. ''பரந்த நோக்கங்கொண்ட காயத்ரி மந்த்ரம் ஒன்றே பாரதத்தின்பெருமையை உணர்த்தப் போதுமானது'' என்று வெகு அழகாக விவரித்துள்ளார் மகாகவி ரவீந்தரர்.

| | | |
|---|---|---|
| ய : | — | யார் |
| ந : | — | நம்முடைய |
| திய : | — | அறிவை |
| ப்ரசோதயாத் | — | தூண்டுகிறாரோ |
| தத் | — | அந்த |
| தேவஸ்ய | — | சுடருடைய |
| ஸவிது | — | கடவுளின் |
| வரேண்யம் | — | மேலான |
| பர்க : | — | ஒளியை |
| தீமஹி | — | தியானிப்போமாக! |

'யார் நம்முடைய அறிவைத் தூண்டுகிறாரோ அந்த சுடருடைய கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.'

பொதுவாக கூறப்படும் அர்த்தம் இது. காயத்ரியில் மூன்று பாதங்களிலுமுள்ள பத்து பதங்களில் தேவஸ்ய, ஸவிது, பர்க்க என்ற மூன்று பதங்களுக்குத்தான் வெவ்வேறு பொருள் கூறப்படுகின்றன.

ய.: = எவர், ந : = நம்முடைய, திய : = புத்தியை ப்ரசோதயாத் = தூண்டுகிறாரோ—இது வரை விவாதமில்லை.

தத் = அப்படிப்பட்ட, தேவஸ்ய = சுடருடைய ஸவிது = உலகை உண்டுபண்ணுபவருடைய (சூரியனுடைய, வரேண்யம் = மேலான, பர்க = ஒளியை, தீமஹி = தியானிப்போமாக.

உலகை உண்டுபண்ணுகிறவர், புத்தியைத் தூண்டுகிறவர் யாரோ அவரே காயத்ரியின் அர்த்தம். அவரது உடலோ, ஒளியோ நமக்குத் தியானம் செய்யத்தக்கதாகும்.

பரமாத்மா என்பதற்கு பிரமாணம் தேடவேண்டாம். அவரே சிருஷ்டிகர்த்தா என வேதம், உபநிஷதம், பிரும்ம சூத்திரம் முதலியவை அறுதியிட்டுச் சொல்கின்றன. ஆதித்யனையும் படைத்து ஆதித்தியனுக்குள்ளும் இருக்கிறார் என்ற உபநிஷத்தின்படி பரமாத்மா காயத்ரியின் அர்த்தம். அவரே நமது புத்தியைத் தூண்டுகிறவர் எனப்படுகிறது.

ஆதித்யன் என்பவரே நம் கண்ணுக்குப் புலப்படும் பிரத்யட்ச தெய்வம். அவரே உதயமாகும் போது அனைவரது பிராணனையும் கொண்டுவருகிறார். அத்தமிக்கும் போது கொண்டுபோகிறார். அவர் கிரணத்தின் வழியாக எல்லோருக்கும் ஜீவிக்கும் சக்தி உண்டாகின்றது. புத்தியைத் தூண்டி அவரவர் வேலையைச் செய்யும்படி, காலையில் உதயமாகின்றவர் சூரியன். ஆதலால் அவரே காயத்ரியின் பொருள் என்று கூறினும் தவறில்லை. ஆனால் இவரையும் பகைத்தவர் பரமாத்மாவல்லவா? ஆதலால் நேராக பரமாத்வே காயத்ரியின் பொருள் என்பர்.

தேவர்களைவிட மூன்று தேவிகளே கருணையுள்ள மூர்த்திகள். ஆதலால் தேவதை என்று பெண் வடிவமாக சகல தேவர்களும் கூறப்படுகிறார்கள். ஆதலின் காயத்ரி என்பவளை மும்மூர்த்தி சுவரூபிணியாகக்கூறி

"முக்தாவித்ரும" என்ற தியான சுலோகத்தால் காயத்ரியைப் பெண் வடிவமான தேவியாகக் கூறுகிறோம்.

சாவித்ரி, காயத்ரீ, சரஸ்வதி, சந்த்யை என்பவள் அவரே. காலையில் சிறியவளாகவும், பகலில் யுவதியாகவும், மாலையில் விருத்தையாகவும் நினைக்கவேண்டும் என்று கூறப்படுவதாலும் அவளுக்கே உலகைப் படைக்கும் சக்தி இருப்பதாலும் அவளே காயத்ரியின் அர்த்தம் என்பர்.

முத்து, பவழம், சுவர்ணம் கறுப்பு வெளுப்பு ஆகிய வர்ணங்களுள்ள ஐந்து முகமுள்ளவளும்—ஒவ்வொரு முகத்திலும்—மூன்று கண்களுள்ளவளும் சந்திர கலையைத் தலைமீதணிந்தவளும், தத்துவார்த்தமுள்ள தான எழுத்து உருவானவளும், வரதம், அபயம், அங்குசம், பாசம் வெளுப்பான கபாலம், கதை, சங்கம், சக்கிரம், தாமரை இவைகளை கரத்தில் ஏந்தியவளே காயத்ரியாவாள்.

இது மேலான மந்த்ரமாகும். இதை வாய்விட்டோ, உதட்டின் அசைவிலோ உச்சரிப்பதைவிட மனத்தளவில் ஸ்மரிப்பதே மேலானதாகும்.

காயத்ரீ என்ற சந்தஸ் வடிவமாக அமைந்த ஓர் அரிய மந்த்ரத்திற்கு ஒலி வடிவம், அக்ஷரவடிவம், அதனால் கூறப்படும் தேவதா வடிவம் என்று மூன்று வடிவம் உண்டு.

செவியால் கேட்கத்தக்க ஒலியைக் கண்ணால்காண அக்ஷரம் அமைத்திருப்பதுபோல் மந்த்ரத்தை உச்சரித்ததுடன், அந்த மந்த்ரத்தினால் கூறப்படும் தெய்வத்தின் உருவம் தோன்றுகிறது. இது நமது மீமாம்ஸா சாஸ்த்ரம் கூறுகிறது.

“தத், ஸ, வி, து, வ, ரே, ண்ய, ம், ப, ர்க, தே, வ, ஸ்ய, தீ, ம, ஹி, தி, ய:, ய:, ந, ப்ர, சோ, த, யாத்.” என 24 அக்ஷரங்களைக் கொண்டது காயத்ரி மந்த்ரம்.

24 என்ற காயத்ரி அக்ஷரத்தின் எண்ணிக்கைக்கே தனித்ததொரு மஹிமையுண்டு. இதைக் கொண்டே வால்மீகி ஸ்ரீராமாயணத்தை 24 ஆயிரம் ஸ்லோகமாக அமைத்தார்.

ஸத்குரு தியாகப்ரும்மம் இரண்டாயிரத்து நானூறு கீர்த்தனைகளை இயற்றினார்.

ஜயதேவர் 24 அஷ்டபதி அமைத்தார்.

ஒவ்வொரு அக்ஷரமும் மிக அற்புதமான சக்தி வாய்ந்தது. இவ்வக்ஷரங்களின் அரிய சேர்க்கையால் ஒப்புயர்வற்றது காயத்திரீ.

எந்த மந்த்ரத்தை ஜபித்தாலும் முதலில் காயத்திரீ ஜபம் செய்து மற்றதை இந்தக் காயத்ரீ ஜப கணக்கிற்கு மேல் போகாமல் ஜபிக்கவேண்டும்.

ஆதித்யன் என்பவரே நம் கண்ணுக்குப் புலப்படும் பிரத்தியட்ச தெய்வம். அவரே உதயமாகும்போது எல்லோர் பிராணனையும் கொண்டு வருகிறார். அஸ்தமிக்கும்போது கொண்டுபோகிறார். அவர், கிரணத்தின் வழியாக எல்லோருக்கும் ஜீவிக்கும் சக்தி உண்டாகிறது. புத்தியைத் தூண்டி அவரவர் வேலையைச் செய்யும்படி காலையில் உதயமாகின்றவர் சூரியன். ஆதலால் அவரே காயத்ரியின் பொருள் என்பர்.

ஆனால் இவரையும் படைத்தவர் பரமாத்மா. இவர் ஒரு ஜீவாத்மாதானே? ஆதலால் நேராக பரமாத்மாவே காயத்ரீயின் பொருள் என்பர் சிலர்.

தேவர்களைவிட மூன்று தேவிகளே கருணையுள்ள மூர்த்திகள். ஆதலால் தேவதை என்று பெண்வடிவமாகச் சகல தேவர்களும் கூறப்படுகிறார்கள். ஆதலின் காயத்ரீ என்பவளை மும்மூர்த்தி ஸ்வரூபிணியாகக் கூறுவதும் உண்டு.

இவ்வண்ணமே மும்மூர்த்திகளையும் பராசக்தியையும் தம்தம் இஷ்டதேவதைகளையும் காயத்ரீயின் அர்த்தமென்பர் பலர்.

எந்த மூர்த்தியை உபாசித்தாலும் அவரவர்க்கும் அதே சிரத்தையே அளித்து அந்த உபாசனையை நானே ஏற்கிறேன் என்கிறார் கீதாசாரியன். அதனால் அவரவர் எண்ணவதுபடி தியானித்துக் கொள்ளலாம்.

'பூ: புவ: ஸுவ: மூன்று பாதமுள்ள காயத்ரீ இவைகளை ரிக், யஜுஸ், ஸாம என்ற மூன்று வேதங்களிலிருந்து பொறுக்கி, காயத்ரீயாக அமைத்தார் பகவான். அதை ஜபித்தால் மூன்று வேத அத்யயனம் செய்த பலனைப் பெறலாம்' என்கிறார் மநு.

வேதத்தினுடைய சாரம் காயத்ரீயில் அடங்கியிருப்பதால், அது மானுட வாழ்க்கையின் லட்சியத்தை விளக்குகிறது.

பூ: புவ: ஸுவ ஆகிய மூன்று சொற்கள் பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கம் எனப் பொருள்படுகின்றன. இம்மூவுலகம் அகத்திலும் இருக்கின்றன; புறத்திலும் இருக்கின்றன.

நனவு அல்லது விழித்திருந்து புறவுலகோடு இணக்கம் வைப்பது ஜாக்ரவஸ்தை. கனவு என்பது சொப்பனாவஸ்தை. கனவற்ற உறக்கம் சுஷுப்தி அவஸ்தை. நாள்தோறும் இந்த மூன்று அவஸ்தைகளிலும் நாம்

மாறி மாறி இருக்கின்றோம். இந்த மூன்று அவஸ்தைகளே பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கலோகம் என்று இயம்பப் பெறுகின்றன.

நாம் எந்த அவஸ்தையில் இருந்தாலும் சரி, அதாவது எந்த லோகத்தில் இருந்தாலும் சரி, இந்த காயத்ரி மந்த்ரத்தினுடைய கருத்தையுணர்ந்து அதைப் பயன்படுத்திக் கொண்டு வருகிற அளவு ஆத்மீகத்துறையில் முன்னேற்ற மடைகின்றோம்.

மூன்று அவஸ்தைகளிலும் நிறுத்தாது நாம் சுவாசித்து வருவது போன்று, மூன்று அவஸ்தைகளிலும் காயத்ரீயில் அடங்கியிருக்கிற ருத்துக்கேற்ப நம்முடைய மனதைப் பெரிய நிலையில் வைப்போமானால் அதற்கேற்றவாறு ஆத்ம பரிபாகம் நமக்கு வாய்க்கிறது.

புறத்தில், அதாவது ஜாக்கிரதாவஸ்தையிலேயே பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கலோகம் ஆகிய மூன்று உலகங்களையும் நமக்கு நாம் வைத்துக்கொள்ள முடியும்.

ஒழுங்காக—உடல்—வாழ்க்கை நடத்துவது பூலோக வாழ்க்கையாகிறது.

உள்ளத்தை மேலான எண்ணங்களில் செலுத்துவது புவர்லோகமாகிறது.

எண்ணத்தைக் கடவுள்பால் செலுத்துவது ஸ்வர்க்கலோகமாகிறது.

இவ்வாறு ஒவ்வொரு நாளும் வாழ்வாங்கு வாழ்கிற மனிதன் மூவுலகிலும் முறையாக வாழ்ந்தவன் ஆகிறான். இம்மூன்று அவஸ்தைகளிலும் பாரமார்த்திகப் பெருநிலையிலேயே இருந்து பழகுபவன் இரண்டாவது பிறப்பெடுத்தவன்—துவிஜன்—ஆகின்றான்.

ஆக, ஒரு மனிதன் துவிஜன் ஆவதும் அல்லது ஒரே உடல் பிறவி எடுத்து அதில் கீழ்மையில் உழல்வதும் அந்தந்த ஜீவனுடைய மனப் பரிபாகத்தை ஒட்டியதாகும்.

''பெண்கள் காயத்ரி மந்திரத்தைச் சொல்லக் கூடாது; வேதம் கற்கக்கூடாது'' என்பது பெண்பாலரைப்பற்றி இடைக்காலத்தில் வந்துள்ள கொள்கையாகும். இது பொருளற்ற கொள்கையாகும்.

சமுதாயம் சீர்கேடு அடைந்துவர ஆரம்பித்த பொழுது இக்கொள்கை உருவெடுத்தது. இப்பொழுது சமுதாயம் புதிய வலிவு பெற்று வருகிறது. இக்காலத்தில் அவதரித்துள்ள ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் சூத்திரர், பெண்பாலர் ஆகிய இரு கூட்டத்தாரைப் பற்றிய கொள்கைகளை மாற்றியமைத்திருக்கிறார். வேதம் கற்பதற்குப் பெண்பாலர் தகுதியற்றவர் என்பதை மாற்றி அமைத்துள்ளார்.

பெரிய பெரிய துறவியர்களுக்கே, ஞானகுரு ஸ்தானம் வகிக்கின்ற பெரிய நிலையில் ஸ்ரீசாரதாதேவியை அவர் அமைத்து வைத்தார். அதன் மூலமாகப் பெண்பாலருடைய பாங்கைப் பழைய பெருநிலைக்குக் கொண்டு வருவதற்கு அவர் துவக்கம் செய்து வைத்தார்.

இடைக் காலத்தில் வந்துள்ள மற்றொரு ஐதிகம் சூத்திரர்கள் சந்நியாசத்திற்குத் தகுதியற்றவர்கள் என்பதாம். அவர்கள் காயத்ரி மந்திரத்தைச் சொல்லக் கூடாது என்பதாம். சந்நியாசத்திற்குத் தகுதி வாய்ந்தவர்கள் யார் என்பது கேள்வி. பரமஹம்சர் இக்கேள்விக்கும் விடை கொடுத்திருக்கிறார். அவருக்கு வாய்த்த சிஷ்ய கூட்டத்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

அவருடைய சிஷ்யர்கள் அனைவரும் தலைத்தரமான சந்நியாசிகள் என்பது வெளிப்படை. துறவறத்-

தின் உச்சநிலையை அவர்கள் எட்டியுள்ளவர்களாவர் பிறப்பையோ குலம் கோத்திரத்தையோ பரமஹம்சர் கருத்தில் வாங்கிக் கொள்ளவில்லை. பண்பாடு ஒன்றையேஅவர் முன்னணியில் வைத்தார்.

கல்வியில்லாத ஒரு வேலைக்காரனாக 'லாட்டு' என்று அழைக்கப்பெற்ற இளைஞன் இருந்தான். குலத்தில் அவன் உயர்ந்தவன் அல்லன். எனினும் அவனிடத்து நல்ல சம்ஸ்காரங்கள் அமைந்திருந்ததைப் பரமஹம்சர் கவனித்தார். அவனுக்கு நல்ல பயிற்சியையும் அவர் கொடுத்தார். பிறகு தமது துறவியர் கூட்டத்தில் 'லாட்டு' என்பார் எடுத்துக் கொள்ளப்பட்டார். அற்புதானந்த சுவாமி என்ற பெயர் அவருக்கு வருவதாயிற்று. அவர் வாழ்ந்த பெருவாழ்வு ராமகிருஷ்ணருடைய அற்புதங்களுள் ஒன்றாகும்,

''எக்குடியில் பிறந்தவன் என்பதை முன்னிட்டு இடைக்காலத்தில் வந்தவர்கள் வருணத்தை நிர்ணயித்தார்கள். எத்தகைய பாங்கு படைத்தவன் என்பதை முன்னிட்டுப் பரமஹம்சர் வருணத்தைப் பாகுபடுத்தினார். அவர் வகுத்து வைத்துள்ள முறை உலகம் முழுதுக்கும் பொருள் தரக்கூடியதாக இருக்கிறது'' என்று விளக்குகிறார் சுவாமி சித்பவாநந்தர். சான்றோர்கள் இதைக் கவனிக்கவும்.

இன்றும் இந்தோனேஷிய வானொலி நிலையம் அதிகாலையில் இந்தக் காயத்ரீ மந்திரத்தை ஓதிக் கொண்டேதான் தொடங்குகிறது.

அதனால் காயத்ரீ மந்த்ரத்தை அகில உலக மகா மந்திரமாகவே ஏற்றுக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. 'சவிது' என்னும் பதத்திற்கு அவரவர் மதத்தின் கடவுளையே பொருளாகக் கொள்ளலாமல்லவா !

# 21

அனைத்து உயிர்களுக்கும் சக்திகளுக்கும் சூரியனே ஆதாரம் என்று நம் வேத காலத்தினர் நம்பியதை நவீன விஞ்ஞானம் உறுதி செய்கிறது.

மக்கள் சூரிய நமஸ்காரம் செய்து வருவது தொன்று தொட்டு நடந்து வருகிறது. ஆண்—பெண் இருபால ருக்கும் சூரிய நமஸ்காரம் உண்டு.

பெண் மக்கள் இதைச் செய்யாவிட்டால் வைதிக வேள்விகளில் கலக்க அவர்களுக்கு ஆசாரம் போதாது என்ற அபிப்பிராயமும் உண்டு. மேல்நாட்டு நாகரிகம் நம்மைக் கவர்ந்துள்ள இந்தக் காலத்தில், இவை எல் லாம் குறைந்து கொண்டே வருகின்றன.

இந்தியாவில் சூரிய வழிபாடு இன்று நேற்று ஏற்பட்ட தல்ல. ரிக்வேத காலத்துக்கும் முற்பட்டு இந்த வழிபாடு இருந்து வருகிறது. அசையும் பொருள்கள் எல்லாவற் றுக்குமே சூரியன் உயிர் என்று வேதங்கள் கூறுகின்றன. நம்நாடு சூரிய ஒளி மிகுந்த நாடு. ஆகையால் அவன் அருளைப் பெற மக்கள் அவனை வழிபட முற்பட்டதில் வியப்பில்லை.

பல நோய்களைச் சூரிய கிரணங்கள் குணப்படுத்து வதாக அதர்வ வேதம் குறிப்பிடுகிறது. உபநிஷத்துக் களும் புராண இதிகாசங்களும் சூரியனின் புகழைப் பேசு கின்றன.

கோளமாக விளங்கும் சூரியனைக் கடவுளாக வழி படலாமா என்ற சந்தேகம் தோன்றுகிறதா? வேதமே சூரியன் கோளமயமானதுதான் என்கிறது. ஜகத்துக்கெல் லாம் ஆத்மா என்று சூரியனைக் குறிப்பிடுகிறார்கள்

வேத காலத்து முனிவர்கள். சூரியனால் உலகத்துக்கு ஏற்படும் நன்மைகளையும் வரிசைப்படுத்திக் கூறுகிறது வேதம்.

வேதத்தில் காணும் உண்மைகள் நவீன விஞ்ஞான உண்மைகளுக்கு முரணாக இல்லை. சூரிய ஒளியில் ஏழு வர்ணங்கள் சேர்ந்துள்ளன என்று விஞ்ஞானம் கூறுகிறது. இதைத்தான் ஏழு குதிரைகள் என்று வேதம் வர்ணிக்கிறது. அசுவம் என்ற சப்தத்துக்கு வர்ணம் என்று பொருள் கூறலாம்.

பாரசீகத்தில் தங்கிவிட்ட ஆரியர்கள் சூரியனை வழிபட்டார்கள் என்றாலும், அக்கினிக்குத்தான் அவர்கள் முக்கியத்துவம் கொடுத்தார்கள். இந்தியாவுக்கு வந்த ஆரியர்கள், திராவிடர்களுடன் கலந்து விக்கிரக ஆராதனையை மேற்கொண்டார்கள். சூரியனை விஷ்ணுவின் அவதாரமாகவே இவர்கள் கையாண்டார்கள்.

சூரிய வழிபாட்டினால் தோல் சம்பந்தமும் கண் சம்பந்தமுமான வியாதிகள் குணமாகிவிடும் என்று பாரசீகர்களும் நம்பினார்கள். பாரசீக மத குருக்களான 'மாகாஸ்கள்' சூரிய வழிபாட்டின் மூலம் சிகிச்சை செய்யும் மருத்துவர்களாக விளங்கியுள்ளார்கள்.

பாஞ்சாலத்தை ஆண்டு வந்த ஆரிய மன்னன் ஒருவனுக்குத் தோல் சம்பந்தமான வியாதி ஏற்பட்டது. அவன் மாகாஸ்களையே வரவழைத்தான். நோய் குணமாகவே, இப்போது பாகிஸ்தானிலுள்ள மூல்தானில் அவன் சூரியனுக்காகவே ஒரு கோயில் கட்டுவித்தான். 2000 ஆண்டுகளுக்குமுன் கட்டிய இந்த ஆலயந்தான் சூரியனுக்காக ஏற்பட்ட முதல் கோயிலாகும். அதன் பிறகு இந்த ஆலயம் மொகாலாயர் காலத்தில் அழிவுற்றதாகத் தெரிகிறது.

முஸ்லீம்களும் சூரிய வழிபாட்டில் கவனம் செலுத்தி வந்தார்கள் என்பதை 'ஆல்பரூனி' என்ற அரபு சரித்திராசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

மூல்டானிலிருந்து சூரிய வழிபாடு காஷ்மீருக்கும் பரவியது. பிரபல மன்னனான லலிதாதித்திய முக்தா பீடன் என்பவன் இங்கே சூரியனுக்கு ஒரு கோயில் கட்டினான். இந்தக் கோயில் கிரேக்க ஆலய மாதிரியில் கட்டியது. அதன் பிறகு இதுவும் அழிந்து போயிற்று.

சூரியனுக்காகக் கட்டிய புராதனக் கோயிலில் ஒன்று ஒரிஸ்ஸாவிலுள்ள கோனார்க்கோயிலாகும். கலிங்கத்தை ஆண்ட நரசிங்கதேவன் இதைக் கட்டினான். இப்பொழுது இக்கோயிலின் ஒரு பகுதி மட்டுமே எஞ்சியிருக்கிறது.

தமிழ் நாட்டில் கும்பகோணம் வேப்பத்தூர்ப் பாதையில் சூரியனார் கோயில் என்ற ஊரில் சூரியனுக்குத் தனி ஆலயமே இருக்கிறது.

சூரியனைப் பரம்பொருளாக 'ஆதித்ய ஹ்ருதயம்' கூறுகிறது. மார்க்கண்டேய புராணம், பவிஷ்ய புராணம் முதலியவை சூரிய வழிபாட்டைப்பற்றிக் கூறுகின்றன. மந்த்ரங்களில் மிகச் சக்திவாய்ந்ததாகக் கருதும் காயத்ரீ சூரியனுக்கு உகந்த மந்த்ரம். இன்னும் பயபக்தியடன் சூரிய நமஸ்காரம் செய்கிறார்கள். உடல் பயிற்சியின் ஓர் அம்சமான இது இப்போது மேனாட்டாரின் கவனத்தையும் கவர்ந்திருக்கிறது.

சூரிய கிரணங்கள் ஐந்து வகைகளில் தனித்தனிக் குணங்களைக் கொண்டவையாக இருக்கின்றன. சூரியோதயம் முதல் சூரியன் மறையும் வரையிலுள்ள நேரத்தை ஐந்து பாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். ஒவ்வொரு பிரிவும் மும்மூன்று முகூர்த்த காலங்களை

கொண்டது. ஒரு முகூர்த்தம் என்பது $2^{2}/_{5}$ மணி நேர மாகும்.

சூரியோதயம், முற்பகல், உச்சிவேளை, பிற்பகல் மாலை என்று ஐந்து பிரிவுகள் சூரியன் உதயமாவதற்கு முன்பு தொடங்கிச் சூரியன் மறையும் நேரம் முடிய ஏழு காலங்கள் ஆகின்றன. சூரிய கிரணங்கள் இந்தக் காலங்களில் வெவ்வேறு குணங்களுடன் பாய்ந்து வரு கின்றன.

சூரிய ஒளி தோன்றிப் பலபலவென்று பொழுது புல ரும் நேரத்தில் மக்களுக்கு வாக் புஷ்டியையும் மேதை யையும் அளிக்கவல்ல கிரணங்கள் வீசுகின்றன. வேதங் களும் கீதங்களும் அதனால்தான் இந்த நேரத்தில் ஒலிக் கின்றன. அவற்றை இந்த நேரத்தில் பயலுவதனால் மிகுந்த பயனைப் பெறலாம்.

கணிதம், வானநூல், ஜோதிஷம் முதலிய சாஸ்திரங் களிலும் பஞ்சாங்கங்களைக் கணிப்பதிலும் நம்முன் னோர் எவ்வளவு உயர்நிலையை அடைந்திருந்தார்கள் என்பதையும் நாம் இங்கே நினைவுகூரவேண்டும்.

'ஷம்மாஸின்' என்ற பிரிவினர் சூரிய வழிபாட்டை மிகத் தீவிரமாக மேற்கொண்டவர்கள். காஷ்மீர் சரித் திராசிரியரான 'மிர்ஸா ஹைதர் டோக்லாட்' என்பவர் —'கிதாயி—கி—ரஷாதி' என்ற நூலில் எழுதியிருப்பது இது.

'இந்த ஷம்மாஸின்கள்' தங்கள் பக்தி, வழிபாடு இவை காரணமாகத்தான் சூரியனே நிலைத்திருப்பதாக நம்பினார்கள். சூரியன் தங்கள் காரியங்களை எல்லாம் கண்காணிப்பதாகவும் இவர்கள் நம்பினார்கள். ஆகவே பகல் நேரங்களில் இவர்கள் பொய் பேசவோ திருடவோ மாட்டார்கள். இரவில்தான் சூரியன் இலலையே! எதை வேண்டுமானாலும் செய்வார்கள்.

மொகலாய சக்கரவர்த்திகளுள் ஒருவரான அக்பர், சூரிய தினத்தைக் கொண்டாடி வந்ததாகப் போர்த்து கீசியப் பிரயாணி ஒருவர் தம் குறிப்பில் எழுதி வைத்திருந் கிறார். இதைச் சரித்திராசிரியரான படயூனி தம் புத்த கத்தில் உறுதி செய்திருக்கிறார். சூரிய வழிபாடு 'சௌரமதம்' என்ற பெயரில் ஷண்மதங்களில் ஒன்றாக இருந்து வந்திருக்கிறது.

இச் சௌரமதம் சர்வதேச சம்மதமாகவே இருந்து வந்திருக்கிறது. ரோமில் கி. பி. மூன்றாம் நூற்றாண் டில் கிறிஸ்து மதத்தையே சௌரம் எதிர்த்து நின்றதாகத் தெரிகிறது. கி. மு. 1400-ம் ஆண்டு முதலே மத்தியக் கிழக்கு நாடுகளிலும் மேலை நாடுகளிலும் அது பரவி யிருந்தது; எகிப்தில் சூரியனை 'ரே' அல்லது 'ரா—அதுன்' என்று குறிப்பிட்டார்கள். எகிப்திய அரசர்கள் தங்கள் பெயரோடு 'ரே' என்றபெயரையும் சேர்த்துக் கொண்டார்கள்.

ஜப்பானியர் தங்கள் மன்னன் சூரிய வம்சத்தைச் சேர்ந்தவன் என்று நம்புகிறார்கள். ஆதியில் சௌர மதத்தினர் சூரியனுக்கு ரத்த அர்க்கியம் கொடுத்து வழி பட்டு வந்தார்கள். ஆதிசங்கரர்தான் இதை மாற்றினார்.

தை மாதம் வரும் பொங்கல் திருநாள் அன்று தமிழர் கள் சூரியனை வழிபடுகிறார்கள். கீதையில் கண்ண பிரான் 'ஜோதிஷம் ரவிரம் சுமாள்' என்று ஜோதிகளில் தான் சூரியனாக இருப்பதாகக் கூறியுள்ளார்.

அந்தக் காலத்தில் ரிஷிகள் சூரியனின் கனிந்த ஒளி யிலே நாள் தவறாமல் மூழ்கி வந்தார்கள்; சூரிய கிரணங் களை 'ஜீவத்திறல்' என்றும், 'ஆயுள் வளர்க்கும் அன் னம்' என்றும் போற்றினார்கள்.

நடுப்பகலிலும் சூரிய ஒளியைக் கண்டார்கள். உயிரிலும் உள்ளத்திலும் தேவ சக்தியும் தெய்விக ஒளியும் உள்ளன. அவர்களின் சந்ததியில் வந்த நாம் இன்று இந்தப் பெருமைகளையெல்லாம் மறந்து விட்டோமே!

வீடு கட்டும்போது சாரம் கட்டி அதன்மேல் நின்று வேலைக்காரர்கள் கட்டிட வேலை செய்வார்கள். வீடு கட்டி முடிந்ததும் சாரத்துக்கு வேலை இல்லை. நல்ல ஞானம் அடைந்தவர்களுக்குக் கோயிலும் குளமும் வேண்டியதில்லை. தியானத்தில் மனத்தை அலையாமல் நிறுத்தப் பயிலாதவர்களுக்குப் பூஜையும் ஸ்நானமும் அவசியமாகும்.

மனிதனாய்ப் பிறப்பது அரிது. இந்த உலகில் வாழ்வதும் அரிது. நல்லறத்தைக் காது கொடுத்துக் கேட்பது அரிது. மேல்நிலை அடைவது எல்லாவற்றிலும் அரிது.

அவலட்சணத்தின்மீது சிந்தனை செலுத்தினால் காமம் மடிந்து போகும். எவன் குற்றமற்ற மேதையோ அவனே உண்மையான அழகுள்ளவன். அறநெறிப் போதனைகளைக் கேட்டறிந்த அறிவாளிகள் ஆழமாகவும் தெளிவாகவும் அமைதியாகவும் உள்ள குளத்தைப் போல சாந்தி நிலை பெறுகிறார்கள். அறவழியில் நடப்பவர்களுக்கு எந்த உலகிலும் ஆனந்தம் உண்டு.

ஆனந்தம் என்பது மாற்றங்களுக்கு ஒற்றுமையும், முக்கியத்துவமும் அளிக்கக்கூடிய ஓர் ஆன்மிக சக்தியாகும். நல்லதே வெற்றி பெறும் என்பதில் நம்பிக்கை கொள்வது ஓர் இனத்துக்குப் புத்துயிர் அளிக்கும். விவேகம் உள்ள உத்தம நோக்கு ஒரு மனிதனுக்கு நல்லதொரு குறிக்கோளைத் தரும்.

# 22

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் காயத்ரீ மந்த்ரத்தின் மேன்மையைப்பற்றி இவ்வாறு அருள்வாக்கு அளித்துள்ளார்கள்.

"காயத்ரீ" என்னும் வார்த்தைக்கு "தன்னை எவர் கானம் பண்ணுகிறார்களோ அவர்களை ரக்ஷிப்பது" என்று அர்த்தம்.

கானம் பண்ணுவதென்பது பிரேமையுடனும் பக்தியுடனும் உச்சரிப்பதாகும். யார் தன்னைப் பயபக்தியுடனும் பிரேமையுடனும் உச்சரிக்கிறார்களோ அவர்களை, காயத்ரி மந்த்ரம் ரக்ஷிக்கும். வேத மந்த்ரங்களுக்கெல்லாம் தாய் காயத்ரீ என்று வேதம் சொல்லுகிறது. சாஸ்திரப் பிரகாரம் செய்யவேண்டிய காரியங்களுக்கும் முக்கியமான காரியம் இது என்று சொல்லும்போது வேதம் 'மந்திர சக்தி குறையாமல் தேகத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்' என்று சொல்லுகிறது.

தேகம் ஒரு தேவாலயம். கோயிலில் மகாலிங்கம் இருப்பதுபோல் தேகத்தில் ஜீன் இருக்கிறது. ஆகவே அதில் அசுத்த பதார்த்தங்களைச் சேர்க்கக்கூடாது. ஆனால் இப்போது அசுத்த பதார்த்தங்கள் சேர்க்க பட்டு, தேகம் விகாரமாகி விட்டது. மந்திர சக்தியாகிய அக்கினி இப்போது அணைந்திருக்கிறது. ஆனால் ஒரு பொறி மட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி செய்யவேண்டும். அந்தப் பொறிதான் காயத்ரீ.

காயத்ரி பரம்பரையாக வந்திருக்கிறது. மூன்று தலைமுறையாக அது விட்டுப் போனால் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன் பிராம்மணனாக மாட்டான். ஆனால் இன்னும் மூன்று தலைமுறை ஆகவில்லை.

ஆகவே காயத்ரீயை விட்டுவிடலாகாது. ஞாயிற்றுக் கிழமையாவது 1000 காயத்ரீ பண்ணவேண்டும். ஒவ்வொரு காலத்திலும் குறைந்தது பத்து காயத்ரீயாவது பண்ணவேண்டும்.

காயத்ரீயில் ஸகலவித மந்த்ர சக்தியும் அடங்கியிருக்கிறது. எல்லா மந்திரங்களுக்கும் சக்தியைக் கொடுப்பது அதுதான். அதை ஜயிக்காவிட்டால் வேறு மந்த்ர ஜபத்துக்குச் சக்தி இல்லை.

ஹிப்நாடிஸம் என்பதனால் பல காரியங்களைச் சாதிக்கிறார்கள். மோக்ஷத்திற்குப் போக உதவும் ஹிப்நாடிஸம் காயத்ரீ மந்த்ரம். ஆசையை அடக்கி ஜன்மம் எடுத்ததன் பலனை அடையச் செய்கிற ஹிப்நாடிஸம் காயத்ரீ.

ஸந்தியாவந்தனத்தில் அர்க்கியமும் காயத்ரியும் முக்கியமானவை. அசக்தர்களாக இருப்பவர்கள்கூட அர்க்கியத்தைக் கொடுத்துவிட்டுப் பத்து காயத்ரீயையாவது செய்யவேண்டும்.

தநுர்வேதத்தில் அஸ்திரம் சஸ்திரம் என்ற இரண்டு வகை ஆயுதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. நாம் பிரதி தினமும் செய்யவேண்டிய அஸ்திரப் பிரயோகம் ஒன்று உண்டு. நம்முடைய புத்தியை ஆசிரயித்திருக்கிற அசுரர்கள் தொலைய வேண்டும்; ஞான சூரியன் பிரகாசிக்க வேண்டும் என்று அன்று அஸ்திரப் பிரயோகம் செய்யவேண்டும். இது தான் ஸந்தியாவந்தனத்தில் அர்க்கியம் கொடுப்பது.

அஸ்தமன காலத்திலும் உதய காலத்துக்கு முன்பும் உச்சிக் காலத்திலும் அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆடு மேய்த்தார். அவர் 'காணாமற் கோணாமற்

கண்டு கொடு, ஆடு காண்போகுது பார் போகுது பார்'' என்று சொல்லியிருக்கிறார் காணாமல் என்றால் 'சூரியனைக் காண்பதற்குமுன்! என்று அர்த்தம். அதாவது சூரியோதயத்திற்கு முன் காலை அர்க்கியத்தைக் கொடுக்க வேண்டும். கோணாமல் என்பதற்கு, 'தலைக்கு நேரே இருக்கும்போது' என்று அர்த்தம். அதாவது சூரியன் உச்சியில் இருக்கும்போது மாத்யான்னிக அர்க்கியம் கொடுக்க வேண்டும். கண்டு என்பதற்கு சூரியன் இருக்கும்பொழுது என்று அர்த்தம். சூரியன் அஸ்தமிக்கும்போது சாயங்கால அர்க்கியம் கொடுக்க வேண்டும். ஆடு என்றால் நீராடு. கங்கையில் ஸ்நானம் பண்ணு என்று அர்த்தம். காண் என்றால் சேது தரிசனம் செய் என்று அர்த்தம். போகுது என்றால், கங்கா ஸ்நானத்தினாலும் சேது தர்சனத்தினாலும் நம் பாவம் தொலைகிறது. இதைத்தான் இடைக்காட்டுச் சித்தர் சொல்லியிருக்கிறார்.

ஜன்மத்தில் ஒரு தரமாவது கங்காஸ்நானம் சேது தரிசனமும் செய்யவேண்டும். காயத்ரி ஜபம் செய்வது எல்லோராலும் ஆகிற காரியந்தான். ஆயுள் இருக்கிற வரையில் சந்தியா வந்தனத்திற்கு லோபம் வராமல் காத்து வரவேண்டும் காயத்ரீயை மாதா என்று வேதம் சொல்லுகிறது. காயத்ரி மந்த்ரத்தின் பலன் சித்த சுத்தி தான்.

காயத்ரி மூன்று வேதத்திலிருந்து எடுத்தது. அதனால் மூன்று வேதங்களைச் சேர்ந்தவர்களுக்கும் காயத்ரி பொதுவானது. அதர்வ வேதத்திற்கு மட்டும் வேறு காயத்ரி. ஆபிஸ் செல்வதனால் நேரமில்லாதவர்கள் மாத்யான்னிக அர்க்கியத்தை ஸாயங்காலத்திலாவது கொடுக்க வேண்டும். ஜ்வரம் வந்தால் மற்றவர்களிடம் கஞ்சி கொடு, தீர்த்தம் கொடுஎன்று கேட்பதைப் போல, 'எனக்காக ஸந்தியா வந்தனம் பண்ணு' என்று சொல்ல வேண்டும்.

அபிவாதனத்தில் எந்த மகரிஷியினுடைய சந்ததியில் பிறந்திருக்கிறோமோ அந்த மகரிஷி கோத்திரத்தைச் சொல்லி அன்று முதல் காயத்ரி ஜபிக்கப்பட்டு வருகிறது. அந்தக் கோத்திரத்தில் பிறந்ததற்காகவாவது கர்மானுஷ்டானங்களைச் செய்யவேண்டியது கடமையாகும். தொடர்ச்சியாக வந்த தாயையை அறுத்து விடக் கூடாது''

காயத்ரீ மந்த்ரத்தின் மேன்மையை எத்துணைத் தெளிவாக விளக்கியுள்ளார் பார்த்தீர்களா?

பாய்ந்தோடுவது தண்ணீர்; துள்ளிச்செல்வது மனம். இரண்டையும் அடக்குந்தோறும், அவை சக்தியில் பெருகும். உதாரணமாக—தண்ணீரின் வேகத்தைத் தடுத்து நிறுத்தி மீண்டும் திறந்து விட்டால் அதன் வேகம்—அதனின்று உண்டாகும்—மின்சாரசக்தி ஒப்பற்ற நன்மை தரும் அல்லவா? மனத்தின் வேகத்தை அளந்தறிய இந்த உதாரணம் போதும்.

இதுபோல் சிறு பருவத்தில் தொடங்கி, சிறந்த அக்கரையோடும் அன்போடும் செய்து வருகின்ற காயத்ரி ஜபம், மானசீக சக்தி—வளர்ச்சி—சிறுவர்களுக்குத் தாய்ப்பால் போல் மேன்மேலும் சிறந்த—ஒப்பற்ற—சக்தியளிக்கும். இதன் பெருமையைப் பல உதாரணங்களோடு மேலே காணலாம்.

ஆதியில் நான்கு வேதங்களுக்கும் அரிய பெரிய பாஷ்யம் செய்தருளிய ஸ்ரீ வித்யாரண்ய பெருமானது காயத்ரி பாஷ்யத்தில் என்ன கூறியிருக்கிறார் என்று பார்ப்போமா?

காயத்ரீயின் சிறப்பு—மகாமந்த்ரமாகிய காயத்ரியையும், நான்கு வேதங்களையும் தராசில் வைத்து நிறுத்திப் பார்ப்பதானால் நான்கு வேதங்களும் அமைந்த ஒரு

தட்டுக்கு நிகராகவே மற்றொரு தட்டில் அமைந்த காயத்ரீயும் சம எடையில் துலங்கும்!

வேதங்களின் சாரமானவை எவை? உபநிஷத்துக்கள். அவை ரகசியமானவை. ஆனால் அவற்றின் சாரம் காயத்ரியும் மூன்று வியாஹ்ருதிகளும் ஆகும்.

பூ : புவ : ஸுவ : என்பவைதாம் வியாஹ்ருதிகள் அவை (1) பூலோகம் (2) பூமியை தொடர்ந்துள்ள மேல்—இடையில் அமைந்த—லோகம். அப்பால் (3) சுவர்க்க லோகம் என்பவற்றைக் குறிப்பிடுவதுடன் அவை பரமாத்மாவின் சொருபம் என்ற அறிவையும் நமக்கு உணர்த்துகின்றன. காயத்ரி தேவியினது பெருமையை இவ்வாறு தெரிந்து கொள்பவனே சிறந்த பிராம்மணனாவான்.

வேத மாதாவை—வேதத்தின் தாயை—காயத்ரி என்று அழைப்பதேன்? அன்போடு கானம் செய்பவரை—ஜபம் செய்கின்றவரை—விடாது பாதுகாப்பது எதுவோ அதனைத்தான் காயத்ரீ என்று அழைத்தனர் அறிவு, ஆற்றல், அனுபவம் மிகுந்த பெரியோர்.

அது மாத்திரமா? காயத்ரீதான், வேதத்தின் தாய். காயத்ரீதான் பாவத்தையெல்லாம் போக்கும் அன்னை! காயத்ரீயினும் சிறந்தது—இவ்வுலகிலும் இல்லை. மேலுகிலும் இல்லை. ஆகவே காயத்ரீதான், மிகமிகப் பரிசுத்தமான மந்திரம் எனவும் அப்பெரியார் முரசறைகின்றார்.

ஒருவன் வேத வேதாங்களையெல்லாம் படித்த வித்வானாக இருக்கலாம். யஜ்ஞம், தானம் பல செய்பவராக இருக்கலாம். ஆனால் அவர் காயத்ரி தியானத்தைச் செய்யாவிடில் எந்தப் பெருமையையும் பெறுவதற்குரியவரல்லர்.

எது ஜபம் செய்வதற்குரிய லட்சணம்? எல்லாம் வல்ல ஈசன்—பரமேசன்—எங்கும் வியாபித்து—இரண்டறக் கலந்து விளங்குகின்றானாயினும் அவன் காயத்ரீ தேவியை உபாசனம் புரியும் பக்தர்க்கு விசேஷ நன்மைகளை அளிக்கின்றான் என்பதைக் கவனிக்க வேண்டும். இங்கு யாக்ஞவல்கிய முனிவர் பெருமான் தெரிவிக்கின்ற ஓர் உதாரணம் மிக அழகாக விளங்குகின்றது.

பசுவின் பாலை நிறைய உட்கொண்டால், அது உடம்பிற்கு நல்ல வளர்ச்சியளிக்கும் என்று பலர் கூறுகின்றனரல்லவா! அது அவ்வளவு சரியன்று! ஏன் தெரியுமா? காயத்ரீ ஜபத்தில் தினந்தோறும் மனத்தைச் செலுத்தும் அன்பனுக்கு எப்பொழுதுமே நன்மை செய்யும் சுபாவம் கொண்ட சதாசிவன், அந்தப் பசுவின் பாலிலுள்ள சத்தைப் பார்க்கிலும் அதிகமான சத்தை அளித்துப் போஷித்து வருகிறான்.

அந்தத் தியானத்தில் நிலைத்தவனை சிவன் காயத்ரீ ஜபம் செய்யாதவரிடமும் உள்ளீடாகி விளங்குவது உண்மைதானாயினும், காயத்ரீ உபாசனையின் மூலமாக வேண்டிக் கொள்ளாதவருக்கு அவ்வாறு உதவி செய்ய இயலாதாம். தட்டாதவனுக்கு யார் கதவைத் திறப்பார்? கேளாதவனுக்கு எவர் கொடுப்பார்?

வீட்டில் சுத்தமான இடத்தில் அமர்ந்து காயத்ரீ ஜபம் செய்யலாம். ஓடுகின்ற நீரோடைப்பக்கம் அல்லது நதிக்கரையில் அமர்ந்து ஜபம் செய்தால் 1-க்கு 2பங்குபலன். பசு போஷிக்கப் பெற்று விளங்கும் காலையில் ஜபம் செய்தால் 1-க்கு 10 பங்கு பலன். மகான் சித்தி பெற்ற ஸ்தலங்கள், ஸ்தலபுராணம்—பாடல்—பெற்ற க்ஷேத்திரங்கள் என்பனவற்றிலும், தெய்வீகமான ஆலய—சந்நிதிகளிலும் செய்யும் ஜபம், ஆயிரம்—லட்சம்—கோடிப் பங்கு

பலன்தரும். ஆனால் பெருமாள் சந்நிதியில் செய்யும் காயத்ரீ ஜபத்தின் பலனுக்கு எல்லை கூற இயலாது? அது அநந்தமான பலன் தருவதாகும். அது அன்பின் அளவைப் பொருத்தது போலும்!

காயத்ரீ மந்த்ரம் சொல்லும்போது (1) தர்ப்பாசனம். (2) கம்பளம் (3) மான் தோல் (4) பட்டு (5) மரவுரி (6) பலபுத்திரம் என்பவகைகளில் ஒன்றை ஆசனமாகக் கொள்வது நல்லது.

தர்ப்பாஸனத்தில் உட்கார்ந்து ஜபம் செய்தால் பாவங்கள் போகும். பரிசுத்தம் உடலுக்கும் மனதிற்கும் உடன் தோன்றும்.

கம்பளியில்—இரத்தின கம்பளத்தில்—அமர்ந்து செய்தால் துக்கம்—துன்பம்—நீங்கும்.

மான் தோலில் அமர்ந்து ஜபம் செய்தால் ஞானம் வளரும், சாந்தம் பெருகும். மன அமைதியே ஒரு ஆனந்தமல்லவா !

பட்டு ஆசனத்தில் உட்கார்ந்து ஜபம் செய்தால் பாக்கியம் விருத்தியாகும்.

மரவுரி பலத்தை வளர்க்கும். அனுபவத்தில் பார்க்கலாம். ஸ்ரீராமபிரான் உபயோகித்த பரிசுத்தமான மரவுரியினம், மலையாள தேசத்தில் கிடைக்கும்.

பலபத்திரம் உடம்பைச் சுத்தி செய்வதாம்.

இனி, வேறு இரண்டு ஆசனங்களுக்கும் தனித்தனி பலன் கூறப்படுகின்றது.

கிருஷ்ணாஜினம்—மான் தோலை உபயோகிப்பது போல் பெண் யானைத் தோலையும் உபயோகிப்பது

உண்டு. அது பலவகை வியாதிகளையும் போக்கும். அக்காரணத்தை உணர்த்தவே போலும் சிவபெருமான் ஆனை தாண்டவபுரத்தில் அற்புத நடனம் புரிகிறார்! பிறவிப் பிணிக்கு மருந்தளிக்கும் பெருமானே ஆனைத் தோலையணிந்தது, அதன் பெருமையை அனைவருக்கும் விளக்கத்தான் போலும்!

புலித்தோலிலும் அமர்ந்து ஜபம் செய்யலாம். அது மோட்சத்தை அளிக்கும் சக்தி வாய்ந்தது.

ஜபம் செய்யும் பொழுது எதனைக் கொண்டு எவ்வாறு எண்ணுவது? சுண்டு விரலின் அடுத்த விரலுக்கு அநாமிகை என்று பெயர். அதன் இரண்டாவது கணு—பருவம்—தொடங்கி, சுண்டு விரலின் முதல் வரை வழியாக மேலே வந்து ஆள்காட்டு விரலின் அடிக் கணு வரை எண்ணி வந்தால், தொகையும் பத்து கிடைக்கும். நீண்டு நிற்கும் அடிக் கணுக்களாகிய இரண்டையும் ஒரு முறை வலம் வந்தது போலாயிற்று! இவ்வாறு செய்தலே 'ஒரு மாபெரும் பிரதட்சிணம்' என்றும் கூறப்படுகிறது. இந்த மேருவைத் திடீரென்று தாண்டக் கூடாதாம்.

இந்தக் கணுக்களின் வழியாகவே காயத்ரியை எண்ணி—தியானித்துக் கொண்டு—பன்முறை—எண்ணிக் கொண்டு ஜபம் செய்ய வேண்டும்.

மாலைகளை உபயோகித்தல் அவசியமா?—காமியமான கோரிக்கைகளை உலகின் தாயான காயத்ரீ தேவியிடமிருந்து பெற விரும்புவோர், பலவித மாலைகளைக் கைக் கொண்டு ஜபம் புரியலாம். அதன் பலனும் பன்மடங்கு அதிகமாகும்.

உதாரணமாக—முன்தெரிவித்த அங்குல எண்ணிக்கையின் வழி அறியாது விரல் விட்டு எண்ணி ஜபம் செய்

பவர்க்கு ஒரு பங்குதான் பலன். அங்குல முறை அறிந்து, மேருவைக் கடவாது ஜபம் செய்யின், 10 கணக்காகும்.

'புத்ரஜீவ' என்னும் மரத்தின் கனிகொண்டு—மணி கொண்டு—ஜபம் செய்தால் 1-க்கு 100 பங்கு பலன்.

பவழத்தால் மாலை கட்டி அதன் வழியாக ஜபம் செய்தால் லட்சம் பங்கு பலன் தரும்.

தர்ப்ப முடியினால் எண்ணிக்கை செய்து ஜபம் இயற்றல் கோடிப்பங்கு பலன்.

துளசி மணி கொண்டு எண்ணி ஜபம் புரிதல் அநந்த மான பலன் தரும்.

ருத்திராக்ஷ மணிகொண்டு ஜபம் புரியின் அதன் பயன் தன்னாலும் கூற இயலாது என்று பார்வதியை நோக்கி பரமசிவன் கூறியிருப்பதாகப் புராணம் பேசு கின்றது. பிரம்ம சாரி, கிரகஸ்தர் இருவரும் 108 வீதம் காயத்ரீ ஜபம் செய்யவேண்டும்.

காயத்ரீ ஜபத்தைக் குறித்து இல்லறத்தார்க்கு—இல் லறத்தானாகிய கிரகஸ்தனுக்கு வேலை பல இருக்கு மாதலால், அதற்கேற்ப சிறிது அநுகூலமுறை விளக்கப் படுகின்றது. அதாவது, இல்லறத்தான் 108 முறை ஜபம் செய்யவேண்டியதுதான். ஆனால் வேறு வேலை இருப் பின் என் செய்வது? அதில் பாதியாகிய 54 முறையே னும் செய்தல் நலம். அல்லது 27 செய்தல் மூன்றாந்தர மாகும். அதனின்றும் குறைவாகச் செய்யும் முறை கூறப் படவில்லை.

காயத்ரீயை அதிகமாக ஜபம் செய்யத் தகாத காலங்கள்— சிரார்த்தம், பிரதோஷ வேளை, அமா வாசை ஆகிய நாட்களில் 10 முறை செய்தல்ம் தகு

வேதங்கள் கற்கக்கூடாத—அநத்தியயன—நாட்களில் 28 முறை ஜபம் செய்தாலே போதுமானது.

இவையல்லாத பிற காலங்களில் வழக்கம்போல் குறித்த முறை அளவு ஜபம் செய்யத்தான் வேண்டும்.

ஜபத்தை எவ்விதம் செய்யவேண்டும்?—காலையில் கைகளைத் தூக்கி மலர்த்திக் கொண்டு ஜபம் செய்ய வேண்டும்.

நடுப்பகலில் கைகளைக் கீழ் அமர்ந்தபடி குறுக்காக வைத்துக்கொண்டு செய்யவேண்டும். கைகளை ஆடையினால் மூடிக்கொண்டு—வலக்கையைப் போர்த்திக் கொண்டுதான்—ஜபம் செய்தல் சிறப்பு என்று காயத்ரீ அனுஷ்டான தத்வ பிரகாசிகை—என்ற நூலில் விளக்கப் படுகின்றது.

சாதாரணமாக வாயினால் உச்சரித்து காயத்ரீ செய்வதற்கு பலன் ஒரு பங்குதான். ஜபமுறையாகச் செய்தால் 10 பங்கு பலன். உகட்டசைந்த அளவில் செய்தால் 100 பங்கு பலன். மனத்தினாலேயே செய்யின் ஆயிரம் பங்கு பலன் அளிக்கும்.

உதடு அசையும்படி செய்தால் உபாம்சு ஜபம் என்று கூறப்படும். பற்களை மூடிக்கொண்டு நாவை மட்டும் அசைத்து சத்தம் வெளியே வராதவாறு ஜபம் செய்தலே உபாம்சுவாம்.

மனதினால் மட்டும் செய்தல்தான் மானசீக ஜபமாகும். காலையில் சந்த்யாவந்தனம் செய்யும் பொழுது, நின்று கொண்டு காயத்ரியை ஜபம் செய்யவேண்டும். சூரிய பகவான் உதயமாகி அவரது தரிசனம் கிடைக்கும் வரை ஜபம் செய்து முடித்தலே உத்தமம்.

நடுப்பகல் சந்த்யாவந்தனம் உட்கார்ந்தவாறு செய்யவேண்டும். சூரியனைப் பார்த்துக்கொண்டே செய்தலும் ஒரு பொது முறைதான். கண்ணில் சிற்றொளி பாய்தலே போதும்!

விரல் விட்டு எண்ணிக்கொண்டு ஜபம் செய்தல், நடுவிரலின் அடி நடு வரைகளாக—இரு வரையாக அமைந்த—மேருவைத் தாண்டி, எண்ணிக்கையிட்டு ஜபித்தல், எண்ணிக்கையில்லாது மீண்டும் மீண்டும் ஜபம் செய்து வருதல், அவசர அவசரமாக ஜபித்துக் கொள்ளுதல் ஆகிய நான்கு முறைகளும் பயனற்றவை!

காயத்ரீ மந்த்ரத்தில் 24 அட்சரங்கள் அடங்கியுள்ளனவல்லவா? அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு தேவதை கூறப்படுகின்றது. ஜபம் செய்யுங்காலை, அந்தந்த அட்சரங்களின் அபிமானிகளான தேவதைகளின் நினைவும் இருத்தல் அவர்களின் அருளையும் பெறுதற்குரிய எளிய வழியாம்.

சுமார் முப்பது பாஷ்யகாரர் வரை இந்த காயத்ரீ மகா மந்த்ரத்தின் கருத்துரை எழுதுவதில் ஈடுபட்டு ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றனர்.

இதற்குப் பல மகான்கள்—மதாசாரியர்கள்—தெரிவித்திருக்கின்ற சூக்ஷ்ம பொருள்களை அந்தந்தப் பெரியோர் பரம்பரை வழி அறிந்து கொள்ளுதலே சிறந்த முறை.

இங்கு அனைவர்க்கும் விளங்கத்தக்க பொதுப் பொருள் கூறப்படுகிறது. இதில் எது சராசர வடிவமாய் நின்ற—அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய—உயிர்களுக்கெல்லாம் மூலகாரண வஸ்துவாகி அந்தரத்தில் அநுதினமும் உதயமுமாகி, அவற்றையெல்லாம் பற்பல தொழில்களில்—செயல்களில்—ஈடுபட்டுச் செயல்புரியு

மாறு ஏவுகின்ற ஜோதி வடிவாய் விளங்குகின்றதோ, எது உயிர்களின் மனத்தில் உள்ளீடாக்கி ஒளிர்கின்றதோ அத்தகைய உள்ளும் புறமும் பரவி நிறைந்து இயங்கும் எல்லாம்வல்ல—மன வாக்கினிற்கு எட்டாத—சக்தியை, நாம் மன மொழி மெய்களால் போற்றுகின்றோம்—ஹிருதயத்தில் தியானம் செய்கிறோம்—என்ற பொதுக் கருத்து ஒளிர்கின்றது.

காயத்ரீ ஜபமும் பிரம்மதேஜஸின் வளர்ச்சியும்—இவ்விதம் ஒப்பற்ற—ஞானக் கருத்தமைந்த—காயத்ரீ மந்த்ரக் கருத்தை மனதில் பதித்து ஜபம் செய்பவரின் முகத்தில் ஒரு மஹத்தான சாந்த ஒளி வீசிக் கொண்டிருக்கும். இவ்வித தேஜஸ் உண்டாவதன் காரணம் என்ன ?

"யத்பாவம் தத்பவதி"—"எதை நினைக்கிறானோ அதாகின்றான் மனிதன்" என்பது உண்மைப் பழமொழி. இங்கு காயத்ரீ ஜபம் செய்வோர் மனத்தில், 'எதனை, எவ்வாறு' நினைக்கின்றனர்? முதலில் 'ஓம் பூ: ஸுவ' என்ற வியாஹ்ருதிகளை உச்சரிக்கும் பொழுதே, அவர்களின் இருதயம்—சங்கல்ப சக்தி—பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம் என்ற மூன்றையும் பற்றிச் சென்று, அப்பால் ஆகாயத்தினிடையில் விளங்கும் சூரிய பகவானை வணங்கி அங்கிருந்தபடி தனது இருதயத்தில் உள்ளீடாய் விளங்குகின்ற ஜீவாத்ம, பரமாத்மாவோடு கலந்து முகத்தின் வழியே மலருகின்றது; கண்ணொளி வழி பிரகாசிக்கின்றது.

இதனையே பிரம்மதேஜஸ் என்பர் பெரியோர். இந்த பிரம்மதேஜஸ் அழிவுற்ற சக்தியையும், அழகையும் ஆனந்த வாழ்வையும் அவரவர் விரும்பும் எல்லாவற்றையும் அளிப்பதாகும் !

காயத்ரீ மந்த்ரத்தைத் தாயின் வடிவமாக அமைத்த தேன்? காயத்ரீ ஜபம் செய்வோரது முகத்தில் ஒளிரும் காந்த சக்தி—தாய்ப் பாலைப் பருகி வளரும் குழந்தையின் முகத்தையே நிகர்த்து விளங்குவதால், காயத்ரீ மந்திரத்தை தேவியின் திருமேனியாக அன்னையின் வடிவமாக அனுபவத்தில் கண்டு கூறினர் பெரியோர்.

அந்த அருளன்னை வாழ்க !

# 23

உலகம் யாவையும் தோன்றி, நிலை நின்று, செயலாற்றி வளம் பெற வாழ்ந்து இன்பமுற, இறைவன் பல உருவங்கள் கொண்டு, அல்லும் பகலும் பலவகைத் தொழில்களில் ஈடுபடுகிறான். அவனது இந்த வடிவங்களே வெவ்வேறு தேவர்கள் ஆவார்கள்.

அநாதி காலத்திலிருந்து ஒழுங்கு நிலை பிறழாமல் இவர் தம் கடமைகளைச் செய்து மாந்தருக்கு வழிகாட்டுகிறார்கள். 'நமது உடலிலுள்ள வெவ்வேறு உறுப்புக்களையே உருவகமாக்கி, வேதங்கள் இந்தத் தேவர்களின் சொரூபத்தை விவரித்துள்ளன' என்கிறார்கள் ஆன்றோர்கள். இவ்வண்ணம் வேத இலக்கியம் ஒவ்வொரு தேவனையும் நமக்கு அறிமுகமாக்குகிறது.

ஸவிதாவும் சூரியனும் ஒரே தெய்வமாகத் தோன்றினாலும், இருவரிடையே மாறுபாடு உண்டு. "ஸவித சூரியன் கதிர்களைப் பரப்பி உலகுக்கு வெப்பம் கொடுக்கிறான்" என்கிறது வேதம்.

வைகறைக்குப் பின்பும் சூரியன் உதிப்பதற்கு முன்பும் தோன்றுகிறான் ஸவிதா. பொற்கதிர் என்னும் கரங்களை நெடுந் தொலைவில் பரப்பி இவன் உலகுக்கு உயி

ரூட்டுகிறான். நீரைத் தூயதாக்கிப் பெருக்குகிறான். மக்களை தொழிலில் முனைய வைத்து, இரவில் அமைதியைத் தருகிறான். இவன் தெய்வம்.

இரவில் கெட்ட கனவுகள் வராமல் தடுக்கிறான். உதித்து மறையும் சூரியனுக்கு அந்திவேளை புகழ்க் கொடி காட்டும்; அவ்வாறே சூரியனைத் தூண்டும் சக்தியாக இருப்பவன் ஸவிதா. உலகிலுள்ள உண்மைக் காட்சிகள் அனைத்தையும் உள்ளபடி காண்பிக்கும் தேவன் இவன்.

பகவான் சூரியன் உலகங்களனைத்துக்கும் உயிரூட்டுகிறான். உலகத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் ஊக்கத்தையும் ஆற்றலையும் அளிக்கிறான். அவனது நோக்கு படாவிட்டால் அனைத்துலகமும் இருண்டு விடும்; செயலற்றுப் போகும்.

எனவே அவனை 'மித்ரன்', 'ஆத்மகாரகன்' 'ரக்ஷகன்' என்றெல்லாம் வருணித்திருக்கிறார்கள். சகல லோக பாக்கியங்களையும் அதிருஷ்டத்தையும் அள்ளிக் கொடுப்பவன். ஆகையால், சூரியமேட்டிலுள்ள ரேகையைச் 'சூரிய ரேகை' எனவும், 'அதிருஷ்ட ரேகை' எனவும் ரேகை சாஸ்திரத்தில் போற்றுகிறார்கள்.

இத்தகைய ரக்ஷகனுக்கு நாம் நன்றி செலுத்தி அவனைத் தியானித்து, தெய்வத்தன்மை அடைய வெற்றியின் சின்னமாகக் கருதும் 10 என்ற எண்ணின்—மகர ராசி 10-ம் வீடு, தை மாதம்—சுக்லபக்ஷ ஸப்தமி—7—அன்று பகவான் சூரியநாராயணனை வழிபடுகிறோம்.

ஆம். அன்றுதான் ரதசப்தமி. அவனது தேர் வடக்கு திக்கு நோக்கித் திரும்பும் நன்னாள். உத்தராயணம் ஆரம்பம் எனக் குதூகலத்துடன் போற்றிப் புகழப்படும் நன்னாள். ஏழு நிறங்களையும் அடக்கிக்

கொண்டு ஏழு விதமான சக்திகளையும் இயக்கங்களையும் புரிகிறான்.

உலகனைத்தையும் உய்விக்க வெப்பத்தையும் இதமான சக்திகளையும் அளிக்கிறான். வேண்டாத பொருள்கள் யாவற்றையும் அப்புறப்படுத்த அதற்கான சாதனங்களையெல்லாம் தன் பொன்னான ஏழு சக்திகள் அடங்கப்பெற்ற ஒளிக் கதிர்கள் மூலமாக உலகுக்கு அளிக்கிறான்.

ஸவிதாவைப்பற்றி "பொற் குதிரைகள் பூட்டி பொற் கம்பங்கள் நாட்டிய தங்கத் தேரில் இவன் வான வீதியில் பவனி வருகிறான். இவனுடைய பொருள்கள் யாவுமே பொன்மயமானவை. விண்ணுக்கும் மண்ணுக்குமிடையே இவன் செல்லும்போது நோய்கள் பறக்கின்றன. இருள் விலகுகிறது. பாவம் தொலைகிறது. இவன் இவ்வுலகில் மக்களைக் காத்து, வழி தவறியவர்களுக்கு வழி காட்டி, 'மித்திரன்' ஆகி மறு உலகிலும் இன்பமான இடத்தில் கொண்டு சேர்க்கிறான். சூரியனுக்கும் வழிகாட்டும் வல்லமை வாய்ந்தவன் ஸவிதா" என்று விவரிக்கப்பட்டுள்ளது.

சூரியனது 'இன்ஃப்ராரெட்' ஒளிக் கதிர்கள் சிவப்புக் கீழ்க் கதிர்கள்—வெப்பத்தை அளிக்கின்றன. 'அல்ட்ரா வயலட்'—புற ஊதா—ஒளிக் கதிர்கள் மனித குலத்துக்கு ஏற்படும் பற்பல நோய்களை நீக்கவும், வேண்டாத பொருள்களை அப்புறப்படுத்தவும் உதவுகின்றன. 'மேஷ ராசிதானே சூரியனின் உச்ச வீடு!' மேஷத்துக்கு அதிபதி அங்காரகன். அங்காரகனைத் தானே மின்சாரக் கிரகம் எனவும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீநாராயணனை 'மேக சியாமளன்' என்று தானே கூறியிருக்கிறார்கள் ஞானிகள்! மின் ஒளியிலே ஏற்படு

கிற புற ஊதா ஒளிக் கதிர்களுக்கு வேண்டாத பொருள் களை நீக்கச் சக்தி உள்ளபோது, 'மேக சியாமளனான்' நாராயணனின் தரிசனம் கிட்டும்போது, மாயையினால் ஏற்படும் விபரிதங்களைப் போக்கி, ஆத்மஞானம் ஏற்பட ஏன் இயலாது?

ஸவிதாவைப்பற்றி 'உலகமெங்கிலும் வாழும் மக்க ளின் உடலிலும் உள்ளத்திலும் ஊக்கத்தையும் ஆற்றலை யும் விளைவிப்பவன் இவனே! வேத மாதாவான காயத்ரி மந்த்ரத்துக்கு உரியவன் இவன். 'ஸவிதா என் னும் தேவனுடைய அந்த மகத்தான பேரொளியை நான் உண்ணுகிறேன்; அவன் நெறியில் செல்லும் நல் லறிவை என்னுள் இயக்கவேண்டும்' என்ற பிரார்த் தனை, குமரி முனையிலிருந்து பனிமலையின் உச்சி வரையில் காலையும் மாலையும் ஒரே குரலில் நாடெங் கும் ஒலிக்கிறது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக, இந்த மந்திரத்தினால் பேராற்றல் பெற்ற தவப்புதல்வர் பலரை இங்கே ஸவிதா படைத்திருக்கிறான்" என்று விவரிக்கப்பட்டுள்ளது.

அர்க்க பத்ரம்—எருக்க இலை—பகவான் சூரிய நாராயணனுக்கு உகந்த பொருள். இந்த அர்க்க பத் ரத்தை ஏழு எருக்க இலைகளைச் சிரஸில் வைத்துக் கொண்டு, அதலோடு எள்ளும் அக்ஷதையும் சேர்த்து ரதசப்தமி அன்று காலை ஸ்நானம் செய்வது வழககத் தில் உள்ளது.

அர்க்க பத்ரம் வாதத்துக்கு உகந்த மேலான மூலிகையாகும். தென்புலத்தாரான பித்ரு தேவதை களைத் திருப்தி செய்யச் சரியான காலத்தைச் சூரியன் காட்டுவதால், என்னையும் மங்களம் உண்டாக அக்ஷதை யையும் அர்க்க பத்ரங்களுடன் சேர்த்துக் கொள்ளச் சொல்லி இருக்கிறார்கள். பித்ரு தேவதைகளைத் திருப்தி

செய்ய, அன்று தர்ப்பணம் முதலியன செய்யச் சொல்லி யிருக்கிறார்கள். சூரியன் ஆத்மகாரகன் அல்லவா!

"காற்றும் மின்னலும் நீரும் கொண்ட இடைவெளி யிலும், மண் விண்ணுமான உலகங்களிலும், தீயும் காற் றும் கதிரவனும் உறையும் இடங்களிலும், மலையும் காடும் வயலுமான பூமிப் பரப்பிலும் இவன் வியாபித்து, எங்கும் உயிர்ச் சக்தியை ஊக்குகிறான். இவன் பூமிக்கு உறுதியை அளிக்கிறான். ஆதாரமற்ற வானத்திலே துடிப்பான குதிரைகளைப் போல இங்குமங்கும் கலைந்து பாயும் முகில்களை ஒருமுகப்படுத்தி நீர் பொழியச் செய் வதும் ஸவிதுவே" என்று விளக்கப்பட்டுள்ளது.

இந்தோ—ஐரோப்பிய இலக்கியத்தில் ஸவிதாவுக்கு இணையான தேவன் எவனும் இல்லை. ரோமானியரின் 'ஸானஸ்' என்ற தேவனை வேண்டுமானால் இவனுக் குச் சமமாகச் சொல்லிக் கொள்ளலாம். மொத்தத்தில், உலகுக்கு நல்லறிவைத் தந்து, செயலுக்குத் தூண்டும் தெய்வம் ஸவிதா.

பொங்கல் திருவிழாவன்று உத்தராயணம் தொடங்கு கிறது என்றாலும் தை மாதம் வளர்பிறை ஏழாம் நாளில் தான் கதிரவனின் ஏழு குதிரைகள் பூட்டிய தேர் வடக்கு நோக்கித் திரும்புவதாகப் பெரியார்கள் கூறுகிறார்கள். இந்த நாள் நம் வாழ்க்கையில் எத்துணை முக்கியமாக உள்ளது!

சங்கராந்தியன்று, ஒரே சக்கரத்தோடு, ஏழு குதிரை கள் பூட்டிய ரதத்தில் சூரிய சந்திரர் வீற்றிருக்கும்படி யான கோலமிட்டு மகிழ்வர் பெண்டிர். பகவான் சூரிய நாராயணனின் ரதத்துக்கு ஒரே சக்கரந்தான். ஆகாயப் பாதை கோள வடிவந்தானே! மாயையினால் அல்லற் படும் உலக மாந்தர் அனைவரும் அவனது பேரருள் பெற்று, நன்மை அனைத்தும் அடைந்து, எப்பொழுதும்

மனநிறைவு பெற்று, அவனது திருவடியை என்றென்றும் தியானிக்க அவனது பேரருளை இறைஞ்சுவோமாக!

"ஒரு வீட்டில் பல அறைகள் இருக்கும். ஒன்று பூஜை அறை; மற்றொன்று சமையல் அறை; இன்னொன்று நாலு பேர் உட்கார்ந் பேசும் அறை—இப்படிப் பல அறைகள். இவற்றில் மிகப் புனிதமாகக் கருதப்படுவது பூஜை அறைதான். அந்த அறையே உலகத்தின் கண் அமைந்த 'இந்தியா என்ற அறை' என்றார் ஒரு மஹான் நம் பாரத தேசத்தின் சிறப்பைப்பற்றி.

எனவே, நம் முன்னோர், சமூகம் சீர்பட வேண்டி, மனிதன் ஆராய்ச்சியில் புகுந்து தன் குறுகிய வாழ்நாளை விணாக்காதபடி இருக்க ஒவ்வொரு விஷயத்தையும்—இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று நிர்ணயித்து வழி வகுத்தார்கள்.

அண்ட சராசரங்களுக்கு அதிபதியான ஸ்ரீராமன் ஒரே அம்பிலேயே ராவணனை வீழ்த்தியிருக்கலாமே! இப்பெரும்படை எதற்கு? சமர் எதற்கு? என்று சிலர் எண்ணலாம்.

அனைத்துப் பூதங்களின் தோற்றமான புருஷோத்தமன், இந்த ஆத்ம விபூதியில் சேதனனாக அவதரிக்கும் போது இயற்கையின் நியதியைத் தானே சுவீகரித்து, அதன் வழி நடந்து காட்டி, இன்ப துன்பங்களை அனுபவித்து அது யாவருக்கும் பொதுவான நியதி என்பதனை நிரூபிக்கின்றான்.

இதுவே அவனது லீலா வினோதம்!

இராம—இராவண யுத்தத்தின் பொழுது அகத்திய ரிஷி யுத்த பூமியை நோக்கி வந்தார். போரில் எளிதில் வெற்றி பெறும் வழியை அவர் ஸ்ரீராமனுக்கு அருளிய

சுலோகங்களே ஆதித்ய ஹிருதயமாகும். மிகவும் புண் ணியம் வாய்ந்ததும் பகைவர்களை அழித்து வெற்றியை அளிக்கக்கூடியதும், அழிவில்லாததும், சகல மங்களங் களையும் தரவல்லதுமானது ஆதித்ய ஹ்ருதயம்.

பொன்னொளி புரிபவரும் ஆயிரங் கிரணங்களைக் கொண்டவருமான பகலுக்கு,அதிபதியான கதிரவனைத் துதிக்கும் தாரக மந்திரமாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஆதித்ய ஹ்ருதயத்தை அகத்திய ரிஷி அருளிச் செய்தபடி ஸ்ரீராகவன் மும்முறை ஜபித்து இலங்கை வேந்தன் இராவணனை வென்று ஜானகி தேவியுடன் அயோத்தி சென்று பட்டாபிஷேகம் செய்து கொள்கிறார்.

சூரிய பகவானின் மேலான அனுக்ரகத்தின் காரண மாகவே இராவண வதம் நடந்தேறயுள்ளது என்றாகிற தல்லவா!

சர்வ மங்கல மாங்கல்யத்தையும், சகல பாவங்களை போக்க வல்லதும் துன்பங்களைக் களைந்து ஆயுள் விருத்தியை அளிக்கக்கூடியதுமான ஆதித்ய ஹ்ருத யத்தை நாள்தோறும் ஜபித்து நன்கு பயனடையலாம்.

தேஜோ மயமானவரும், தேவர்கள், அசுரர்கள் ஆகியோரால் வணங்கப் பெறுபவரும் கிரணங்களைப் பொழிந்து பகலுக்கு அதிபதியானவர் சூரிய பகவான். மும்மூர்த்திகளாயும் யமன், சோமன், வருணன், பிரஜாபதி என விளங்குபவரும் இவரே.

ஒளியைத் தரும் இவர் ருதுக்களைப் படைத்தும், ஜீவனின் உயிராகவும், பித்ரு தேவதை, விசுக்கள், ஸாத்தியர், அசுவனி தேவர்கள்,மது, வாயு, அக்னி, ஆகியோர்களாகவும் விளங்குகின்றார்.

ஆகாய மார்க்கத்தில் சஞ்சரிக்கும் சூரிய பகவான், ருக், யஜுஸ், ஸாம வேதங்களைக் கரை கண்டவரும், வெயிலெனக் காய்ந்து அனைவருக்கும் உஷ்ணத்தை அளித்தும், தாராகணங்களுக்கு அதிபதியாகவும் விளங்கு பவருக்கு நமஸ்காரம்.

வேதங்களாகவும், யாகங்களாகவும் அதன் பயன்க ளாகவும், உலகின் அனைத்துச் செயல்களாகவும் விளங்கி வருபவர் ஒளிக் கடவுளான சூரிய பகவான்.

எவனொருவன் ஆபத்தான காலங்களிலும், கஷ்ட சமயங்களிலும், பயமேற்பட்ட நேரங்களிலும் ஆதித்ய ஹ்ருதயத்தை ஓதுவானோ அவன் அத்துன்பங்களி லிருந்து வெற்றி பெறுவான். நாள்தோறும் இதை மும் முறை ஜபம் செய்ய, எத்தகைய பகைவனையும் வெற்றி கொள்ளும் திறன் அவனருளாலே கிட்டும் என்பது அகத்திய முனிவரின் அருள்வாக்காகும்.

சூரியன் ஸ்வயம் ஜோதி. இது அனாதி முதல் ஆதி யின் அருளால் அணையாது பிரகாசிக்கிறது.

காயத்ரி மகா மந்த்ரத்தில் வரும் 'பர்கோ தேவஸ்ய' என்ற பதம் சூரியனைக் குறிக்கிறது. அதனால் காயத்ரி உபாசனையினால் சுயம் பிரகாசி ஆகலாம் என்பது தெளிவு.

அருள் ஜோதியை வள்ளலார் இராமலிங்க சுவாமி அவர்களும் அறிந்து அவரும் அதுவாகவே ஆகியுள்ளார் என்பது அவரது தாரக மந்த்ரமான

''அருட் பெருஞ் ஜோதி
அருட் பெருஞ் ஜோதி

தனிப் பெருங் கருணை
அருட் பெருஞ் ஜோதி''

நமக்கு விளக்கம் தருகிறது.

மேலும் 'பர்கோ தேவஸ்ய' என்ற மந்த்ரம், மாலும் பிரம்மனும் அளவிட அடிமுடியை அறியா சுயம் அருள் ஜோதி லிங்கோத்பவர் ஆவர்.

வேதம் இவரை,

''நமஸ்தே அஸ்து பகவான் விஸ்வேஸ்வராய
மஹாதேவாய தர்யம் பகாய
காலாக்னி ருத்ராய நீலகண்டாய
ம்ருத்யும் ஜயாய ஸர்வேஸ்வரயே
ஸதாசிவாய ஸ்ரீமன் மஹா தேவாய நம''

என்று வணக்கம் செலுத்துகிறது.

''திரி காக்னி காலாய''—திரி—கால—அக்னி
''ப்ராத—மத்யான்னிக—ஸாயம்

என்ற மூன்று காலத்தில் அருள் சுரக்க பிரகாசிக்கும் அக்னி எனவும்,

'காலாக்னி ருத்ராய'

ருத்ரர் ரூபம் கொண்டு கால—கால—அக்னி காலாக்னி எல்லா காலத்திலும அருள் குன்றாது விளங்கும் எக்காலத்தில் எங்கும் உள்ள அக்கினியாய் ருத்ரராக உள்ளார்.

இரவு இல்லாதவர், இருள் அற்றவர்—ரிக் வேதமும் ஜோதியைக் குறிப்பிடுகிறது.

''ஓம் அக்னி மீளே புரோஹிதம்
யக் ஞஸ்ய தேவம் ருத் விஜம்
ஹோதாரம் ரத்ன தாதமம்''

இவ்வாறுள்ள ஜோதிதான் காயத்ரி மந்த்ரத்தில் 'பர்கா'வாக உபதேசிக்கப்படுகிறது.

இந்த ஜோதியையே வள்ளலாரும் சிவ உபாசனைகள் மூலம் உணர்ந்து கொண்டபின் மீண்டும் வேத வைதீக கர்ம சடங்குகள் பற்றாதிருக்கவும், ஜாதி மதங்களின் குணங்கள் பற்றிடா வண்ணமும் வேண்டியுள்ளார்.

சத்குரு கிருபையாலும், சத்சங்கத்தாலும், வேத அத்யயனம் மற்றும் காயத்ரீ ஜபத்தாலும் முக்குணங்கள் நம்மைப் பற்றாது காத்துக் கொள்வோம்.

சாத்வீகம்—ரஜோ—தமோ என்பது முக்குணங்களாகும்.

இது நமக்கு ஒரு கணம் கூடவிட்டு வைக்காமல் கூடவே இருக்கிறது. இது நம்மை விட்டு, நாம் நிர்குணர்களாகி விட்டால் பரமஹம் ஸத்துவம்தானாகவே வந்துவிடும்.

குணம் புத்தியுடன் செயல்படுவது நமது புத்தி தூய்மையாகிவிட்டால் ஒருவாறு குணங்களை வெல்லலாம்.

புத்தி தூய்மை பெற ஜபம், தபம், பகவத் த்யானம், யோகங்கள் இவை நல்ல சாதனமாகும்.

''நித்யானந்தம் பரம சுதம் கேவலம் ஞானமூர்த்திம்
த்வங்வாதீதம் ககண சத்ருசம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமல மசலம் சர்வதீ சாட்க்ஷி பூதம்
—பாவாதீதம்
திரிகுண ரஹிரம் சத்குருந்தன் நமாமி.''

இந்த குருவணக்கத்தில் குணரஹிதரான குருநிலை விளக்கப்பட்டுள்ளது. குணரஹிதர்களாக இருப்பதால் பாபம் பற்றாது. மாய்கையும் மறையும்

இந்த சாதனங்கக்கும் மூலமும் கிரந்ததுமானது காயத்ரீ ஜபமாகும். மேன்மேலும் இம்மகா மந்த்ரத்தை உபாசித்து சித்தமாக்கிக் கொள்வோமேயானால் ஞான ப்ரகாசம் ஏற்படும்.

காயத்ரி என்றால் எவர் தன்னை கானம் பண்ணு கிறார்களோ அவர்களை ரக்ஷிப்பது என்று அர்த்தம். 'காயந்தம் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ த்யபிதீயதே!' 'கானம்' என்றால் இங்கு எவர் பக்தி சிரத்தையுடன் ஜபிக்கிறார்களோ அவர்களை இக்காயத்ரி ரக்ஷிக்கும் என்று பொருளாகும்.

காயத்ரி என்பது ஒரு சந்தஸ். சந்தஸ் என்பது வேதம். 'காயத்ரீம் சந்த ஸாம் மாதா! வேத மந்த்ரங் களுக்கெல்லாம் தாயார் ஸ்தானத்தில் இருப்பது காயத்ரி. இக்காயத்ரீ 24 அக்ஷரங்களால் ஆனது என்பதை முன்பே கூறியுள்ளோம். ஒவ்வொன்று எட்டு எழுத்துகள் கொண்ட மூன்று பாதங்களும் மூன்று வேதங்களின் (ரிக், யஜுர், ஸாமம்) சாரமாகும் 'த்ரிப்ய எவது வேதேப்ய: பாதம் பாதமதூ துஹம்' என்று துவே கூறு கிறார்.

அதர்வண வேதத்துக்குத் தனி காயத்ரி இருக்கிறது. இரண்டாவது உபநயனம் செய்துகொண்டே அதை உபதேசம் பெற வேண்டும்.

இந்த 24 எழுத்துக்கள் : ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ப்ராணங்கள், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நான்கு, ஆகாசம், காற்று, அக்னி, நீர், நிலம் ஐம்பூதங்கள் ஆகியவைகளாகும். அதாவது இப்பிரபஞ்சம் முழுவதும் காயத்ரீயில் அடக்கம்.

ஸ்ரீகிருஷ்ண பகவானே பகவத் கீதையில் 'சந்த ஸாமஹம் காயத்ரி' என்று குறிப்பிடுகிறார்.

''வேதமாதா—காயத்ரீ (வேதத்தின் தாய் காயத்ரீ) 'ந காயத்ரீயா: புரோமந்த்ர: (காயத்ரீயைக் காட்டிலும் சிறந்த மந்த்ரமில்லை)'' 'மோக்ஷப்ரதம், முமூக்ஷணாம்' (முமூக்ஷுக்ககளுக்கு மோக்ஷத்தை அளிக்கவல்லது.) ''ஸர்வவேத புராணேஷு ஸாங்கோபாங்கேஷு யத் பலம் ஸக்கு தஸ்ய ஜபாதேவ தத் பலம் ப்ராப்னுயாத் நர:'' (வேதப் புராணங்களிலும், அதன் அங்கங்களிலும் கூறப்பட்டிருக்கிற அனைத்துப் பலன்களும், இந்தக் காயத்ரீயை ஜபிப்பதினாலேயே மனிதன் அடைய முடியும்) இப்படியெல்லாம் காயத்ரியின் பெருமை பேசப்படுகிறது.

இந்தக் காயத்ரி மந்த்ரமே மஹாவாக்யமாக அமைகிறது. இது மஹாமந்த்ரம் என்றும் அழைக்கப்படுகிறது.

''யோ தேவ: ஸவிதாபி ஸ்மாகம் தியோ தர்மாதி
கோசரா |:
ப்ரேயேத் தஸ்ய யத்பர்கஸ் தத் வரேண்ய முபா
ஸ்மஹே||''

எங்களின் அந்தக்கரண தர்மங்களுக்கு சாக்ஷியாய் உள்ள ஸவிதா எனப்படும் தேவதை எதுவோ, அப்படிப்பட்ட அந்தத் தேவதையின் மிகவும் மேலான தேஜஸ்ஸை, ஒளியைத் தியானிக்கிறேன்.

எந்த பிரம்மமானது ஜீவாத்மாக அனுப்பிரவேசித்து வாஸநா பலத்தாலே திருடமாக பேத புத்தியைக் கொண்ட நம்முடைய அந்த: கரண விருத்திகளை பிரேரணம் செய்யுமோ, வாக்கு மனஸ்ஸுக்களுக்கு விஷயமல்லாத ஸுர்ய மண்டலமத்தியத்தில் த்யானிக்கத் தக்க, ஸகலஜகதுத் பத்திஸ்திதிலயஹேது பூதனான ஸ்வயம் ப்ரகாசமான பரப்ரஹ்மத்னுடைய, எல்லோராலும் ஆச்ரமிக்கத்தக்க ஸ்வஸாக்ஷாத்காரத்தாலே அவித்யைப் போக்குவதான ஸ்வரூபத்தை 'ஸோ ஹேம்' என்று அபேதாத்யவ ஸாயம் செய்து தியானிக்கக் கடவோம்.

இக்காயத்ரியை ஜபம் செய்யும் பொழுது கைகளி னாலேயே எண்ணிக்கை செய்து கொள்ளுதல் நலம் என்பதை முன்பே கூறியுள்ளோம்.

தலை சிறிது குனிந்து கைகளை மார்பு வரையில் உயர்த்தி இரண்டு கைளையும் பாம்பு படமெடுப்பது போல் மடித்து, மோதிர விரலின் நடுக் கோட்டிலிருந்து கீழ்நோக்கிச் சென்று பிறகு சுண்டு விரலில் மேல் சென்று மோதிர விரல், நடுவிரல், ஆள்காட்டி விரலின் மேல் மூன்று கோடுகளையும் எண்ணிய பிறகு ஆள்காட்டி விரலில் கீழ்க் கோட்டில் முடிந்தால் பத்து எண்ணிக்கை யாகும்.

இப்படி தினந்தோறும் மூன்று வேளைகளிலும் காலை, மதியம், மாலை இஜ் ஜபத்தைச் செய்பவன் எவனும் மோக்ஷத்தை அடைவான் என்பது வேதங்களின் கூற்று.

இக்காயத்ரியை உபதேசம் பெற்ற பிறகுதான் மற்ற வேதங்களைக் கற்க ஒருவன் அருகதை உடையவனா கிறான். அதைத்தான் உபநயனம் என்று கூறுகிறோம். இப்படி உபநயனம் பெற்ற ஒவ்வொருவரும் ஒவ்வோர்

ஆண்டும் அந்தந்த வேதத்தின் ஆசார்யார்களையும் பித்ருக்களையும் நினைவு கூர்ந்து அவர்களின் அருளால் மேன்மேலும் இக்காயத்ரியை சிறப்புடன் செய்யவேண்டிச் செய்யப்படுவதுதான் 'உபாகர்மம்'. மேலும் வேதாரம்பம் செய்யவேண்டிச் செய்யப்படுகிற செயலே 'உபாகர்மம்' என்றழைக்கப்படுகிறது.

இந்த 28 அட்சர மகா மந்த்ரத்தை பிரும்மோபதேசம் பெற்றவர்தான் சொல்லவேண்டும் என்ற வேத காலத்து நியதி, இந்தக் கலிகாலத்துக்குப் பொருந்தாது. பெண்களும் குழந்தைகளும் எல்லாச் சாதியினரும் சொல்லலாம் என்கிறார் காயத்ரி சுவாமிகள். இதை ஓர் அட்டையில் எழுதி வைத்திருக்கிறார்.

காயத்ரி மந்த்ரத்தை உரக்கச் சொல்லி பின்னோடு எல்லோரையும் சொல்லச் சொல்கிறார். எந்த வேலையில் ஈடுபட்டிருந்தாலும் காயத்ரி மந்த்ரத்தை 11 முறை உச்சரியுங்கள். இடர் நீங்கி நலம் சேரும் என்று உத்திரவாதம் தருகிறார்.

இதை ஜபித்தால் எண்ணம் ஒருமைப்பட்டு நற்குணங்கள் சேர்ந்து மகிழ்ச்சி கிட்டும். காயத்ரி மந்த்ரம் ஜபத்தினால் தெய்வீக உணர்வுகள் ஓங்கும்.

மனித குலம் உஜ்ஜீவத்திற்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?

ஞாயிறு உலகத்தின் உயிர். அநேக லட்சக்கணக்கான மைல்களுக்கப்பால் சுடர் விடும் ஜோதி. வெம்மையைப் பரப்பும் தீக்கோளம். இருளை அகற்றும் ஒளிப் பிழம்பு. மேகத்தை ஏற்படுத்தி மழையைப் பெய்விக்கிறது. பருவங்களை அமைத்து உயிரினங்களுக்கு உணவையும் ஊட்டுகிறது. உடலுக்கு உறுதியளிக்கிறது. கண்ணுக்கு ஒளி தருகிறது.

பரிதி எனும் பெரும் கனல் வட்டத்துக்குள் அணுக்களின் தாண்டவம்; அதனால் ஏற்படும் சக்தி உலகெங்கும் வழிந்தோடுகிறது. வானத்தே உலவும் பல கிரகங்கள், சூரியன் எனும் நெருப்புக் கோளத்தினின்று சிதறி விழுந்த பொறித்துளிகளேயாகும். அவற்றுள் நம் பூமியும் ஒன்று. உலக மக்கள் அனைவரும் எக்காலத்திலும் இந்தச் சூரிய சக்தியை, அக்கினிப் பிழம்பைக் கடவுளாகப் போற்றி வருகின்றனர்.

வேதங்கள் உபநிடதங்கள் மற்றும் பல மொழி இலக்கணங்கள் எல்லாம் சூரியனைப் போற்றுகின்றன.

> ''வேதாஹ பேதம் புருஷம் மகாந்தம்
> ஆதித்ய வர்ணம் தமஸ பரஸ்தாத்''

என்று புகழ்கிறது புருஷ சூக்தம்.

சூரிய சக்தியே என்றென்றும் வற்றாத சித்தி. சூரிய சக்தியை மின்சக்தியாக மாற்றிக் கம்பிகள் மூலம் எங்கும் பரவச் செய்யலாம். எனவே மனிதகுலத்துக்குச் சக்தியைக் கொடுக்கும் சூரியனைத் தெய்வமாக வழிபடுகிறோம்.

சூரியனுக்கு உரிய மந்த்ரம் 'காயத்ரீ' என்பதை முன்பே கூறியுள்ளோம். வேதத்திலுள்ள மந்த்ரங்கள் அனைத்திலும் இது மிகவும் பவித்திரமானது. இந்தியாவில் காஷ்மீரத்திலிருந்து கன்யாகுமரி வரை சூரியனை—வாழ்வுக்கு ஒளிதரும் சக்தியாக—வழிபடுபவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருமே காயத்ரீயை நாள்தோறும் ஜபித்துப் பயன் பெறலாம். ஒரு பெரிய மரம் முழுவதும் ஒரு சிறு விதையினுள் அடங்கியிருப்பது போல் வேதங்களின் சாரம் காயத்ரீயில் அடங்கியுள்ளது. ஆதலால் காயத்ரீயை சத்துள்ள வித்து என்றும், வேதங்

களைப் பல்வேறு பலன்களை அளிக்கவல்ல விருட்சம் என்றும் கூறலாம்.

இதைத் திரும்பத் திரும்பச் சொல்வதால் அறிவு சொரூபமாகிய நமக்கு உள்ளிருக்கும் ஆத்மப் பிரகாசம் நமது அறிவை மேன்மேலும் தூண்டுகிறது. அறிவு பெருகுவதற்கும் ஆத்ம வளர்ச்சிக்கும், இது வழியாக அமைகிறது. அதனால்,

''ஓம் பூர் புவஸ் ஸுவ
ஓம்தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்யதீமஹி
தியோ யோந ப்ரசோதயா

என மீண்டும் மீண்டும் ...ால்லி, ஆத்மசக்தியைப் பெறுவோமாக!



